Uthama Bodha Ranjini Series. No. 1.

உ

சுபமஸ்து.

No. 2.  நெ. உ.

# விவேகசுந்தரம்.

இஃது
ஜனோபகாரமாகப் பலருக்கும் பயன்படும்படி
பிரசுரம் செய்யப்பட்டது.



# VIVÉGASUNDARUM.

A Tamil Pamphlet published for the use of the Public.

MADRAS.
PRINTED AT THE MADRAS RIPON PRESS,
*316 Thumbu Chetti Street.*

1887.

PRICE 3 PIES.] [விலை பை மூன்று.

## முகவுரை.

இந்நூலை தொடர்ச்சியாய்ப்பதிப்பித்துவருவேனென்றுமுதல் நெம்பரிற்கூறியபடியே இந்த இரண்டாம் நெம்பர் புத்தகத்தை வெளியிட்டேன். இதன்விலையோ மிகச்சொற்பம். இவ்விலை அச்சுக்கூலி, காகிதவிலை, பயிண்டுகூலி முதலிய செலவுக்குங்கிட்டிவாராதெனமுன்னரேகூறினும் முன்புத்தகம் வாங்காத பலருக்கும் அறிவிக்கும்படி இதிலும் கூறினேன். இஃது ஜனோபகாரத்தின்பொருட்டே பதிப்பிக்கப்பட்டு வரும். இதற்கு அநேக இடையூறுகள் நடுவில் சம்பவித்தன வாயினும் அவற்றைத் தக்க சமாதானத்தோடு நீக்கினேன். மேலுமேலும் தொடர்ச்சிகள் பதிப்பித்துவரும் என்பதற்குஐயமில்லை. ஒவ்வொரு கனவான்களும் இப்புத்தகத்தை வாங்குவதுமன்றித் தங்கள் தங்கள் சிநேகிதர்களையும் வாங்கச்செய்வார்களெனப்பிரார்த்திக்கின்றேன். இதைவாசிக்கும் கல்விமான்கள் யாவரும் பிழையுளவேல் பொறுத்துக்கொள்ளுதல் அவர்கள் கடனேயாம். இப்புத்தகத்தைவிர்த்திசெய்ய முயன்றவர்களுக்கும், முயல்கின்றவர்களுக்கும், இனி முயல்பவர்களுக்கும் அநேகவந்தனம் நாடித்தருகினறேன்.

இப்புத்தகத்தின் உருவு பெரிதானது பலரதுவேண்டுகோளே.

## இதை வாங்குபவர்
### அவசியம் கவனிக்கவேண்டியது.

---

இப்புத்தகத்திற்கு இட்ட "விவேகசுந்தரம்" என்னும் நாமதேயம் சிலருக்கு விளங்காமையால் அதனது விளக்கத்தைப் புத்தகம் முதலிலே எழுதியிருக்கின்றேன். அதைப்பார்த்து அறிந்துகொள்ளலாம்.

இப்புத்தகத்தில் எழுதும் விஷயங்கள் இந்துபுருடர்களுக்கும், ஸ்திரீகளுக்கும் உபயோகமாய் இருக்கும். இதற்கு யாராவது பொதுவிஷயமாக எழுதி யனுப்புவார்களாயின் அதையங்கீகரித்துப் பதிப்பிக்கப்படும். எழுதும்கல்விமான்கள் தூஷணையின்றிச் சொற்சுவைபொருட்சுவைதோன்ற எளியநடையில் காகிதத்தின் ஓர்பக்கத்தில் எழுதியனுப்புவார்களென்று கோருகின்றேன்.

### கவனிப்பு.

வருகிறமுறை தொடங்கி வைத்திய சாஸ்திரம், பாகசாஸ்திரம், சில வேடிக்கை விநோத கதைகள், விகடகதைகள், முதலியவை எழுதப்படும். அன்றி, அநேக கல்விமான்கள் இப்புத்தகத்திற்குக் கொடுத்த அபிப்பிராயங்களையும் வெளியிடப்படும். கல்விமான்கள் யாவரும் இத்தருணத்தில் முன்வந்து தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைக் கொடுப்பார்களென நம்புகின்றேன்.

---




மதராஸ் ரிப்பன் பிரெஸ், ரூகசூ-தம்புசெட்டிவீதி, சென்னை.

"கல்வியைக்கல் கற்றபடிநில்."

NO. 1. உ நெ. க.

கடவுள் துணை.

"எப்பொருளெத்தன்மைத்தாயினு மப்பொருண்மெய்ப்பொருள்காண்ப தறிவு"

"கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக"

# விவேகசுந்தரம்.

## விநாயகர்துதி.

சீர்பூத்த மறைமுதற்கட் பிரணவத்தி
னரும்பொருளைச் சிவனார் தந்த
பேர்பூத்த நிருமலசின் மயவடிவை
யானந்தப் பெருக்கை யென்றுங்
கார்பூத்த திருநெடுமா லயன்முதற்புங்
கவர்வணங்குங் கருணை வாழ்வைப்
பார்பூத்தவடியர்வினை கெடுத்தருளுங்
கற்பகத்தைப் பணிந்து வாழ்வாம்.

## பெண்கல்வி.

(PART—I.)

தனவந்தர்களே !

பெண்களுக்குரிய ஆபரணாதிகளில் முக்கியமானதுகல்வியும்ஒன்றே. பெண்களுக்குக் கல்வி இருக்குமாகில், புருஷனுக்கு அதிக தொந்தரை இராதென்பது வாஸ்தவம். ஒரு பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரிந்து

விட்டால், கள்ளப்புருஷனுக்கு இரகசியமாகக் கடிதமெழுதிச் சமயங்
கண்டு அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு கம்பி காட்டுவாளென இத்
தேசத்தார் அனேகர் மனதில் குடிகொண்டிருக்கிறது. அது தப்பு அபிப்
பிராயம். கல்லாதஸ்திரீகளனேகர்தங்கள்புருஷனையிகழ்ந்துகண்டபுருஷ
னையிச்சித்து ஓடிக் கடைசியில் கண் கலங்கவில்லையா? படிப்பிருந்தாலும்
இல்லாவிட்டாலும் உத்தமஸ்திரீகள் உயிர்போயினும் கற்புவழியிலிருந்து
பிசகவேமாட்டார்கள். பெண்களுக்குக்கல்வியிருந்தால்தங்கள்கிருககிருத்தி
யங்களைச் செவ்வைப்படுத்திக் கொள்ளவும், புருஷர் பிள்ளைகளின் தேகத்
தன்மையறிந்துதக்கபடி அமுதுசெய்துபடைக்கவும், இன்னுமனேகவிஷ
யங்களுக்கும் அனுகூலமாயிருக்குமேயொழிய, முக்கியமாய்க் கேட்டைத்
தராது. பெண்கல்வியைப்பற்றி அநேகர் சாங்கோபசாங்கமாய்க் கூறியி
ருந்தும், நம்மிடம் ஆட்சேபித்த சிலருக்காக நாமும் பேசவந்தோம். பெ
ண்கல்வி கற்றுக்கொள்வதோடு கொஞ்சம் வைத்தியமுறையிலும், அதிக
மாகப் பிரசவசாஸ்திரத்திலும் பழகவேண்டும். வைத்தியமுறைதெரிந்திரா
மையால், கூடலூர் டவுன்புதுப்பாளையத்தில், ஓர் தனவந்தன்மனைவிநெடு
நாள் பிள்ளையில்லாமற் பெருந்தவம் இயற்றிக் கடைசியில் தலைப்பிரசவ
த்தில் இரண்டு பெண்குழந்தைகளை ஒரே நாழியிற் பெற்று, ௬-வயது
வரையில் நன்றாய்வளர்த்து, ஓர்சுதேசவைத்தியர்மனைவியைப் பேதிமருந்தி
னைகேட்க, அம்மங்கை ஏதோஓர்மருந்தைத் தெரியாத்தனத்தால் கொடு
க்க வாங்கிவந்து, தன் குழந்தைகளிரண்டிற்கும் புகட்டி ஐந்தாறுநாழிகை
க்குள் யமனுக்கு ஒப்புவித்துவிட்டாள். இப்பரிதாபத்தைக் கேட்ட எனக்
கே எவ்வளவுவருத்தம் தோன்றுகின்றது. கொஞ்சம் வைத்தியமுறை
தெரிந்திருந்தால் அம்மாது மேற்படி மருந்தைப் பரீட்சித்துத் தன் குழந்
தைகளைக் காப்பாற்றிக்கொள்ளலாமே ! பிரசவசாஸ்திரம் அறியாமலிரு
ப்பதாலும் அனேகங் கேடுகள் விளையும். சமீபகாலத்தில் நடந்த ஓர் பயங்
கரசம்பவத்தை இதனடியிற் சொல்லுகிறோம்: கூடலூரைச் சேர்ந்த கோ
தண்டராமபுரமென்னும் கிராமத்தில் உயர்குலப் பெண்ணொருத்திக் கல்
யாணமான சில மாதங்கட்குப் பின் கருப்பந்தாங்கிப் பூரணப்பட்டுப் பிர
சவவேதனையடைய, நம் நாட்டு மருத்துவஸ்திரீ கிட்டநின்று, ஏதோஅந்
தரங்க சிகிச்சைகள்செய்ய, ஓர் ஆண்குழந்தை பிறந்தது. இன்னும் ஒரு
குழந்தை வயிற்றிலிருப்பதாயும், சில நிமிஷங்களுக்குள் அதுவும் வெளி
வருமென்று மருத்துவஸ்திரீகூறினள். அருகில்நின்ற (பிரசவவேதனையுறு
ம் பெண்ணின்) தாய் "போ! போ! பைத்தியக்காரி! தலைப்பிரசவம்இரட்
டைக்குழந்தை பிறக்குமா? பிறப்பதாயிருந்தாலும் எங்கள் வம்சத்தில்
இதுவரையில் வழக்கமில்லையே" என்றுசொல்லி வழக்கம்போலப் பெண்
ணின் அடிவயிற்றை முறட்டுத்துணியால் இறுக்கிக்கட்டிப் படுக்கவிட்
டார்கள். அரைநிமிஷமாகுமுன் யமபட்டணமடைந்தனள். உயிர் நீத்த
உடலை உருத்திரபூமிக் கெடுப்பித்துப் போய்த் தகனஞ் செய்கையில்
வயிறுவெடித்து உள்ளேயிருந்த மற்றோராண்குழந்தையும் வெளியில் விழ
அதையும் தாயுடலுடன் சுட்டெரிக்கப்பட்டது. பெண்களுக்குக் கல்வி
பயிற்சிப்பதோடு, வைத்தியத்திலும், மருத்துவநூலிலும் பழகவிடவேண்
டியது அத்தியாவசியகம் இவ்வொரு திருஷ்டாந்தத்தினால் பெண்களுக்
குக் கல்வி அவசியமெனவிளங்குகிறது. வேண்டுமானால், இப்படிப்பட்ட
சம்பவங்கள் இன்னுமனேகத்தை ஆராய்ந்தறிந்து எழுதக்கூடும். இன்னும்
பெண்கல்வியைப்பற்றி மறுதடவையில் விரித்து எழுதுவோம்.

———

## கெட்டமனைவி. (Bad Wife.)

மித்திரர்களே !

அநேகம் பெண்கள் கல்வியின்மையினாலேயே இல்வாழ்க்கையைக் கெடுத்துப் புருடர்க்குத் துன்பத்தை விளைக்கின்றார்களாகையால்அதற்குக் கதாரூபமாக ஓர் திருஷ்டாந்தம் கூறுகின்றோம். சிறிது செவிசாயுங்கள்.

ஒருத்திதன்கொழுநனைமிகக்கடுமையாய்ப்பகைத்துஅவன்சொல்லியவற்றிற்கெல்லாம் முற்றும்எதிரிடையாய்ச் செய்துவந்தாள். அவளுடைய கணவன்அவளைநோக்கி,பெண்ணணங்கே! நீகாலையில்துயிலெழுஎன்றால், அவள் மூன்றுநாளைக்குக்குறையாமல் படுத்தபடுக்கையை விட்டெழுந்திராள். அவன்இன்னுயிரே! படுத்துறங்குஎன்றால், அவள்தூக்கத்தையேமறந்துவிடுவாள். புருஷன் அவளைத்தனக்குத் தோசை வார்த்துக்கொடுக்கச் சொன்னால், அவள் அடகள்வா! உன் பவிஷுக்குத் தோசைகூட வேண்டுமோ! என்பாள். அவன் அவளைநோக்கி, பெண்பாவாய்! எனக்குத் தோசையி லிஷ்டமில்லை; நீவார்க்கவேண்டாமென்றால், அவள் வீம்புக்காவது கூடைநிறையத் தோசைவார்த்தடுக்கி, அடதிருடா ! இவ்வளவையும் நீயேசாப்பிட்டுத் தீரவேண்டும்; ஒன்றுகூட மிச்சம் வைக்கக்கூடாதென்று பலவந்தப்படுத்துவாள். கொண்டான் அவளைநோக்கி, இனியாளே! உனக்குவேலைவைத்தால் எந்தன்மனம் புண்படுகிறதாகையால், நீ யாதொரு வேலையுஞ் செய்யவேண்டாம். இதுவுமன்றி நீ இனிமேல் மாட்டிற்குப்புல்லறுக்கப்போகவும் வேண்டாமென்றால், அவள், அடசோரா? உனக்கென்னடாபாரம் ? நான்போகத்தான் வேண்டுமென்று போவாள். அவன் இவள் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் காட்டிற்குப்போய், கனிகளைப் பொறுக்கியுண்டு, பசியாறித் துன்பந்தீர்ந்திருக்கலாமென்று வனம்போக அவ்விடத்தில் திராக்ஷப்பழத்தால் நிறைந்த ஓர் பெரும் புதர் இருக்கிறதையும், அதற்குநடுவில் அகாதமான பள்ளமிருப்பதையுங்கண்டு, ஓகோ நான் என் கெட்டமனைவியை வைத்துக்கொண்டு, இவ்வாறுதுன்புற்றிருக்கவேண்டும்.அவளை எப்படியாவது இப்படுகுழியிலே தள்ளித் தொலைத்துவிட்டு, இன்புற்றிருக்கலாகாதோ? என்றுநினைத்து,வீடுவந்துசேர்ந்துஅந்தப்பிடாரியைப்பார்த்து, மெல்லியலே! கனிக்காக நீ காட்டிற்குப் போக வேண்டாம் என, அவள் அவனைநோக்கி, அடபேயா? நான்போகத்தான் போவேன்; கேட்பதற்கு நீயார்? என்றாள். அவன்மறுபடியும் தன்இல்லாளைநோக்கி, மடமானே! நான்கண்டிருக்கிற திராக்ஷக்கனிகளைக்கொண்டு வரும்படி நீ காட்டிற்குப் போகவேண்டாமென, அவள் அதற்குத்தடையொன்றுமில்லை; நானேபோய் அக்கனிகளை எல்லாங்கொண்டு வருவேன்; பேயே ? உனக்குஒருபழமாவது கொடேன் என்றாள். அந்நீலிதன் கொழுநன்பின்னோடுகூட காட்டுக்குட்சென்று, அங்குள்ள புதரைக்கண்டதும், அவளைமுற்கொண்டு அதற்குள்ளே ஒரு பாய்ச்சலாய்த்தாவிப்பாய்ந்து, அட கெடுவாய்? நீ இங்குவாராதே, வந்தால் உன்னுயிர் இழந்தாயெனநினையென்றுசொல்லி அப்புதர் நடுவிற்சென்று அங்குள்ள பாதாளக் குழியில் குப்புறவீழ்ந்தாள். அதன்பின்னர் அவன் தன்னைப்பிடித்திருந்த துன்பமனைத்தும் இத்துடன் தொலைந்துபோய்விட்டது என்றகமகிழ்ந்து தனது கிருகத்திற்குவந்து, அங்கே மூன்றுநாள் சுகித்திருந்துவிட்டு, மனையாள்கதி என்னவாயிற்று? என்றறியும்படி நான்காவதுதினம் அப்படுகுழியண்டைபோய் நெடுங்கயிறொன்றை அதற்குள்ளே விட்டிழுக்க, அதனோடுசிறுபேய்ஒன்றுவருவதைக்கண்டுநடுநடுங்கி,அதையெப்பொழுதும்

போல அந்தப்பாதாளத்திலேதானே விடும்படிப்பார்க்க, இவன் குறிப்பை
யறிந்த அவ்வலகையானது கீச்சென்று பெருங்கூச்சலிட்டு, ஐயா? என்
மேல் கிருபைசெய்து என்னைக்காப்பாற்றி யருளவேண்டும். என்னை மீண்
டும் அவ்விடத்திற்குப் போகும்படி செய்யவேண்டாம்; இப்படியே நான்
எங்காவது தப்பி ஓடிப்போய்ப் பிழைக்கிறேன்; 'ஒருகொடும்பாவி' அங்
கேவந்திருக்கிறாள். அவள்எங்களெல்லோரையும் கிள்ளிக்கடித்து, அனே
கரை விழுங்கிவிட்டாள். என்றால் இனிமேல் சகிக்கத்திறனில்லை; என்
னைநீர் இதைவிட்டு எடுத்துவிட்டால் நான் அந்நன்றியை மறவாது உமக்
குக் கைம்மாறு செய்வேனென்று அவனைப்பஞ்சிக் கெஞ்சிக்கேட்டுக்
கொண்டது.

அக்குடியானவன் இதைக்கண்டு இரக்கங்கொண்டு அவ்வலகையைப்
படுகுழியிலிருந்து தூக்கிவிட, அதுவெளியேவந்து தன் உபகாரியைநோ
க்கி, மித்திரரே! நீர் என்னோடு பாடலிபுரத்துக்குவாரும்; அங்குள்ளவர்
களை நான்பிடித்துவருத்துகின்றேன்; நீர் அவர்களைக் குணப்படுத்தலா
மென்று சொல்லிப்போய்,அந்நகரத்தின் கண்ணுள்ள பெரியவணிகர்களு
டைய மனைவிமக்களைப் பிடித்துக்கொள்ள, அவர்களுக்கெல்லாம் நோய்
கண்டு பயித்தியம்பிடிக்கத் தலைப்பட்டது. இதுகண்ட அக்குடியானவன்,
முதலில் இந்நோய் கண்ட ஒருவீட்டிற்குப்போய் நுழையவே, அப்பேய்
அதைவிட்டோடிப்போக, உடனே நோய்நீங்கிப் பிணியாளிகள் அநுகூ
லமடைந்து அவனுக்குப் பணங்கொடுத்தார்கள். குடியானவன் இதுமுதல்
மகாவைத்தியனென்று ஊரெங்கும்பெயரெடுத்து. வீடுவீடாய் நுழைந்து
அளவற்ற செல்வப்பெருக்குடையவனாகிக் குபேரனையும் மேற்கொண்
டான். இதுகண்ட அப்பேயானது ஒருநாள் அவனைநோக்கி, ஐயா! உம
க்கு இப்பொழுது குறைவற்ற நிதிக்குவையிருக்கின்றதல்லவா? இந்நக
ராதிபதியின் மகளை நான்போய்ப் பிடித்துக்கொள்ளப்போகிறேன், பத்
திரம்; நீர் அவளுக்கு நோய்தீர்க்கும்படி அங்கேவரவேண்டாம்; அப்படி
க்கின்றி, நீர் என்வார்த்தையைமீறிஅவளைக்குணப்படுத்தும்படி அங்குவரு
வீரோயாயின், உம்மை அவ்விடத்திலேயே மாய்த்துப் பக்ஷித்துவிடுவேன்
என்று சொல்லிவிட்டு, ஊராளியின் மகளைப் போய்ப்பிடித்துக் கொண்
டது. அவளுக்கு நோய் அதிகரித்துப்பயித்தியம் பலமாய்ப்பிடித்து மனி
தனைக் கொன்றுதின்ன ஆரம்பித்தனள். நகராதிபதி எங்கும் ஆளனுப்பி
அந்த நிபுணவைத்தியனை எங்கேகண்டாலும் கையோடு அழைத்துவரும்
படிக் கட்டளையிட்டான். இது கேட்ட அக்குடியானவன் அந்தப் பிரபுவி
னிடத்திற்கு விரைந்துசென்று அவனைநோக்கி, பிரபுவே ? நீர் இக்கண
மே இந்நகரத்திலுள்ளோர் யாவரையும் தெருக்களில் நின்றுகொண்டும்
சாரதிகளை வண்டிகளின் மேலிருந்து தங்கள் கொரடாவை நீட்டிக்கொ
ண்டும், "கெட்டமனைவி வந்துவிட்டாள் ; கெட்டமனைவி வந்துவிட்டா
ள்;" என்று ஓலமிடும்படிச் சொல்லவேண்டுமென்று, வற்புறுத்திச்சொ
ல்லிவிட்டு, தான் நடுஅறைக்குட் புகுந்தான். அங்குள்ள பிசாசமானது
இவனைக்கண்டதும் மூண்டகோபத்தாற் பொங்கியெழுந்து சீறி, நீயேன்
இங்குவந்தாய் ? இதோ உன்னைக் கொன்றுதின்று விடுகிறேன் பாரென்
றது. அவன் அதைநோக்கி, நான் என்னசெய்யட்டும்? உன்னை இந்தஇட
த்தைவிட்டு ஓட்டும்படியாக நான் இவ்விடத்திற்கு வரவில்லை. ஐயோ!
கெட்டமனைவி இங்கும் வந்துவிட்டாளே என்று உன்மேல் இரக்கங்
கொண்டல்லவோ! உன்னோடு இச்செய்தி சொல்லவந்தேன் என்றான்.
இதைக்கேட்டமாத்திரத்திலே, அவ்வலகையானது பயந்து, பலகணிவா






யிலிலிருந்து குனிந்து கீழேபார்த்து, வீதிகளில் எல்லோரும் 'கெட்ட மனைவி' என்று பெருங்கூச்சலிடுகிற ஆரவாரங்கேட்டு, மித்திரரே! நான் எங்கேபோய்த் தப்பிப்பிழைப்பேன் என்றது. அவன் அப்பேயைப்பார்த்து, நீ எப்பொழுதும்போல அந்தப்பாதாளக்குழிக்கேபோவது நலம். அவள் இனிமேல் அங்கேவரமாட்டாள் என்றான். அப்பேய் அதைநம்பி அங்கேபோனதும், அப்பிடாரியைக்கண்டு பழையபடி அவள் கொடுமைக்குட்பட்டது. நகராதிபதி தன் மகளுக்குநோய் நீங்கியதைக்கண்டு களிப்புற்று, அவனை அந்தவைத்தியனுக்கே பாணிக்கிரகணஞ் செய்துகொடுத்துத் தன்பெண்ணிற்குச் சீதனமாகத் தன் ஆஸ்தியிலேயும் பாதி கொடுத்தான்.

" வழிபாடு உடையளாய் வாழ்க்கை நடையாய்
முனியாது சொல்லிய செய்தாங்கு-எதிர்உரையாது
எத்திப்பணியுமேல் இல்லாளை ஆண்மகன்
போற்றிப் புனையும் புரிந்து."

இப்புருடன் அறிவுடையவனாகையால் இவ்வித உபாயங்களைச் செய்தான். மட்டிபுத்தியினை உடையவன் என்செய்வான்? இம்மனைவியைக் கட்டி யழவேண்டியதே. கல்வி இன்மையினாலேயே இவ்வளவுதுன்பத்தை அப்பெண் செய்தாள். ஆகையால் பெண்கள் எல்லோரும் கல்வி கற்றல் வேண்டும் என்பது ஆவசியமாகிறது.

---

## விவாகநிண்ணயம்.

"மனைத்தக்க மாண்புடையளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை"

மனைமாட்சியில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித்தாயினுமில்"

இப்பூமியின்கண் ஐந்துகண்டங்களிலும், ஒவ்வொருதேசத்தின் கண்ணும் வெவ்வேறு விதமான நடையுடை ஆசாரம்தெய்வபக்தி முதலாகிய விஷயங்கள் பயிற்சியிலிருந்தபோதிலும், நமது பரதகண்டத்திலேவழங்கிவரும் விவாகநிண்ணயத்தைப்பற்றிப் பரியாலோசிக்குங்கால், பெரும்பாலும் நாயகன்சம்மதமின்றியே நாயகியைஏற்பாடு செய்வதும், நாயகி சம்மதமின்றியே நாயகனை ஏற்படுத்தலும், நவீன நாகரீகத்திற்கு முற்றும் ஏறுமாறாய் இருப்பதென்பது திண்ணம். தற்காலத்தில் விவாகம் செய்வது தம்புத்திர பௌத்திராதியர்கள் லௌகீக விவகாரங்களில் செல்லுங்காலந்தவிர மற்றையகாலங்களில் இகபரசுகங்கள் யாதொரு மனக்குறைவின்றி அனுபவிப்பதற்கே, கசடறக்கற்ற ஓர்கணவனுக்கு எழுத்து வாசனையும் நாகரீகமும் கிஞ்சித்தேனு மில்லாத ஓர்நங்கையை விவாகம்செய்விக்கின், அவன் தனது விவகாரங்களுக்குக் கொஞ்சமேனும் ஒற்றுமையில்லாத நடை யுடை பாவனைகளைக் கண்ணுறுந்தோறும் ஐயோ! உண்டாகும் அருவருப்பும் துக்கமும் ஆயிர நாவுள்ள ஆதிசேஷனாலேயும் சொல்ல முடியாதெனின், எம்போலிய சிற்றறிவினரால் அளவிடப்போமோ? அவனிடத்தே ஜனிக்கும் கெடுதிக்குக் கரைபோடுவது பகீரதப் பிரயத்தினமே, எவ்வாறெனின், நன்றாய்க் கற்றறிந்து களங்கரகிதமான அவன்மனதுக்கு.

" மருவியகாதன் மனையாளும் தானும்
இருவரும் பூண்டீர்ப்பி னல்லான்-ஒருவரால்




இல்வாழ்க்கை யென்னும் இயல்புடையவான் சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று"

என்றாப்போல் நாயகி ஒற்றுமையாய் நடக்காவிடில், மேற்படியான் தன்னாலியன்ற மட்டும் தன் நாயகிக்குப்போதித்தும், செவிடன் காதில் சங்குஊதினாற்போலும், செக்குமாடு சுற்றி ஓடுவது இதனது இயல்பு போலும், அவள் தன்னுடைய மூடமார்க்கத்தையே "தொட்டில்பழக்கம் சுடுகாடுவரைக்கும்" என்றாப்போல் கையாளுவது அனுபவசித்தாந்தம். நாயகன் தன் நாயகியின் குணாதிசயங்களை ஒழுங்கு படுத்துவது சுணங்கன் வாலைவளைவு நீக்குமாப்போலென்று எண்ணி, மிகவும் வெறுப்புற்றவனாகி நெடுங்காலம் ஊக்கத்தோடு கற்ற கல்வியின் பெருமையை இழந்து விடுவதுமல்லாமல், வேசிகாந்தனாகிச் சரீர சௌக்கியத்தை இழந்து, அனேக வியாதிகளுக்கு உட்பட்டுச் சீக்கிரத்தில் தனது வாழ்நாளை வீணாக்கி, மரணத்துக்கு இரையாய்விடுகிறான். நாயகியோ! தனக்குவாய்த்த சற்புருஷனுடைய சுகானுபவங்களை இழக்கிறாள். பின்னர், கேடுவருமுன் மதிகெட்டு வருமாப்போல் அவள் துர்ச்சனரிடம் சேர்ந்து அவள் சவகாச தோஷத்தினாலேயும் "காவறானே பாவையர்க்கழகு" என்கிற நீதிவாக்கியம் இருந்தபோதிலும், "எண்ணறக்கற்றும் எழுத்தறவாசித்தும் பெண் புத்தி பின்புத்தி" யென்கிற வாக்கியத்தினாலேயும், தன்கற்புநிலைமைக்கு ஹானிதேடிப் பிறந்தவீட்டார்க்கும்புகுந்தவீட்டார்க்கும்அவமதிப்புஉண்டு பண்ணுவதோடுங்கூட, மிகவும் வறியவராவர். இங்ஙனே கற்றறிந்த ஓர் நாயகிக்கு நிரட்சர குட்சியாகிய ஓர் நாயகன் வாய்ப்பானாகில், அந்த நிர்மூடன் இந்தநாயகிக்குச் சாகிறபரியந்தம் மனவியா கூலத்தைத் தருகின்றான். சகோதரர்களே! மேற்சொன்னபிரகாரம் நம் பெற்றோர்கள் ஏற்பாடுசெய்யும் விவாக நிண்ணயத்தினால் அவகேடுகள் தோன்றுவது திண்ணமாகையால், தற்காலத்தில் நமது தேசத்தை அரசாண்டுவரும் நாகரீக ஆங்கிலேயர்களுள் வழங்கிவரும் வழக்கப்பிரகாரம் நாயகன் தனக்குச் சம்மதமானபெண்ணை விவாகம் செய்துகொள்வது எவ்வளவு சுகமான விஷயம். இத்தியாதிகாரணங்களினாலேயே நம் இந்துக்கள் செய்யும்விவாகமும் ஓர் விவாகமாகுமா? என்று சந்தேகிக்க இடந்தருகிறது. மிகு விவேகமும் புத்தி சாதுரியமும் பெருந்தகைமையுமுடைய எனது ஜனனதேசத்தவர்களே! பிரமாண துர்ப்போதனைகளினாலும் அவர்கள் நமது கஷ்டார்ஜ்ஜிதமாகிய செல்வங்கள் முழுமையுமே கவருவான்வேண்டி எழுதிவைத்த வேதாகமபுராண இதிகாசங்களினாலும் மோசம்போன நமது நிஷ்கபடிகளாகிய முன்னோர்கள் ஏற்பாடுகளில் அன்னங்கள் நீரைப்பிரித்துப் பாலையுண்பதுபோல நீவிர் செய்யினல்லவோ? நும்கல்வித்திறமைக் கழகு. இதுநிற்க, ஆன்றோர் ஒருவர்சொல்லியவாறு "மனத்தின் மணமே மணமல்லாமல் இனத்தின்மணம் மணமல்ல" என்று செய்வதல்லவா? விவாகம். நானும் என்புத்திரனுக்கு விவாகம்செய்துவிட்டேன். அவனும் தன்மனைவியுடன்கூடி, மருவி, விளையாடிக்குலாவி, உண்டு,உடுத்து உல்லாச சல்லாபத்துடன் இருப்பானென்று சொல்லிமனப்பால் குடித்திருந்தால் போதுமாக்கும்!

ஓர்பிள்ளைக்குப் பெண்பார்க்குமிடத்துப் பெண்ணினுடையஎண்ணம் யாதெனின், "கைநிறைந்தபொன்னைப் பார்க்கிலும், கண்ணிறைந்த கணவனே மேல்" என்பதாம். இவ்வாறு அவள் எண்ணமிருக்க, சுற்றத்தார் ஒன்று சேர்ந்து அடிபோடி! புழுக்கச்சிறுக்கி! என்றுஅவள்வார்த்தையைச் சற்றேனும் சட்டை செய்யாமல் "குரங்காகிலும் குலத்தில்கொள்"

என்று நம்மாது சிரோன்மணி ஔவை சொன்னது போலும், "பழைய கால் துற்றுப்புதுக்கால் தோண்டக்கூடாதென்பது" தொன்றுதொட்டு வழங்கிவருகிறபடியினுலும், அவளுக்கு முழுதும் சம்மதமில்லாதவும் நிர் மூடனுயு மிராநின்ற ஓர் நாயகனை ஆடுமாடுகளைக் கட்டிவைப்பது போல் வலிய அவள்கழுத்தில் கட்டுகிறார்கள். இதுவும் தலைவிதியாகுமா? குற்றம் யார்பாலதோ? யோசியுங்கள். புதுக்கால் தோண்டுவதினுல் உண்டாகும் அநீதங்கள் இன்னவையென்று எம் அறிவிற்குப் புலப்படவில்லை. அன்பர்களே! இத்தகையவிவாகங்கள் நீவிர்செய்வதினுல் உங்கள் அருமைச்செல்வப்புத்திரிகள் மணம்புரிந்தபின், அருமைகுலைந்து, சிறுமை அடைந்து உண்ண உண்டிக்கும், கட்டகந்தைக்கும், படுக்கபாயிற்கும், வருவழி அற்றிருப்பதை எண்ணி யெண்ணி, ஏக்கமுற்று, மனம்வெந்து, நொந்து, வருந்த, நீவிர்ஜாதி உயர்ந்ததே அதுவேபோதுமென எண்ணிஆனந்தப்படுவது என்ன புத்தியீனம்? பிரியசகோதரிகளே! " கல்லாதான் தோள் சேர் தலினும் கற்றவனேடு அல்லற்படுவது அழகன்றோ" என்னும் வாக்கியத்தை உங்கள் கருத்தில் வையுங்கள். மேற்கண்ட விவாகங்களினுல் உண்டாகும் கெடுதிகள் அனந்தமே. அவை "வேண்டாமென்கிற பெண்டாட்டி கால்பட்டால் குற்றம்" என்கிற மூதுரையை ஏட்டில் கண்டது மல்லாமல், வீட்டிலும் நாட்டிலும் அனுபோகத்திலுங் கண்டவர்களுக்கு அங்கை நெல்லிக்கனிபோல் சங்கையற நன்று விளங்கும். அருமைத் தோழர்காள்! நீங்கள் விவாகம் செய்துகொள்வதற்கு முன் ஆங்கிலேயர்களைப்போலப் பால்களும் பார்டிகளும் வைத்து இத்யாதி மூலமாய்த் தங்களுக்கு இஷ்டமான மனைவியைத் தேடிக்கொள்வதுபோல நீங்களும் செய்யவேண்டுமென்பது எம் கருத்தல்ல. நீவிர் உங்கள் இஷ்டத்திற்கு ஓர் நஷ்டம் வரவைத்துக்கொள்ளாமலும், அதிக கஷ்டப்பட்டு உங்கள் புத்திசாதுரிய வண்ணியத்தினுலும், விவேகத்தினுலும் உங்கள் அந்தஸ்தையும் ஸ்திதியையும் அனுசரித்து, ஓர்நாயகியை நியமனம் செய்துகொள்வீராயின், இல்லறதருமங்களும் அழுக்காறு, சஞ்சலம், கோபம், மனவியாகூலம், ஒன்றுமில்லாமல் பழுதற நடந்துவரும் என்பதற்கு ஐயம் ஒன்றுமில்லை.

---

## வேதியன் இலக்கணம்.

சத்தியம், தானம், தவம், சுத்தமுடைமை, வன்செய்கையில்லாமை, பொறுமை, தயவுஇவைகளையுடையவனும்; ஐம்பொறிகளையடக்குபவன் தருமமே சிறந்ததென விரும்பிக்கொள்பவன், இடையறாது வேதமோதுபவன், பரிசுத்தமானவன், காமத்தையும் குரோதத்தையும் தன்வசமாக்கி வைத்திருப்பவன் எவனே? அவனும்; தருமங்களையுணர்ந்து நல்ல மனத்தை யுடையவனுய்த் தான் தருமவழியில் நடந்துகொண்டு தன்னைப்போல உலகுயிர்களையும் சமமாகநினைப்பவனும்; தன்னுல் இயன்றமட்டும் வேதங்களை ஒதியும், ஒதிவித்தும், கேள்விகளைச்செய்வித்தும், தனத்தைக் கொடுத்தும், வருகின்றவனும்; பாம்புக்கு அஞ்சுவதுபோலக் கடன்வாங்கலுக்குப் பயந்தவன், சாதலுக்குப்பயந்தவனைப்போல் பிறன் தன்னை உயர்ந்தோனென நன்கு மதிப்பதில் பயந்தவன், பிணத்தைக்கண்டு அருவருப்பதுபோல் அன்னியன்மனைவியைப் புணர்தற்குப் பயந்தவனும்; பொறுமை, சிவகாருண்ணியம், விஞ்ஞானம், உண்மைகூறுதல், புறக்கரணங்களை யடக்குதல், அந்தக்கரணங்களை யடக்குதல், வேதாந்தங்களை அறிதலிலும் யோகத்தில்பழகுதலிலும் ஒழியாமல் தன்வாழ்நாளைச்செலுத்துதல், பிரம






ஞானம்அறிதல் ஆகிய இவைகளை உடையவன் எவனோ?அவனும்; வேதியன் எனப்படுவான். மேற்சொல்லிய குணங்கள்யாவும் இல்லாவிடினும், மேற்கூறிய இலக்கணங்களுட் சிலவேனுமுடையனாய் வேதியர் குலத்துட் பிறந்தவனையும் ஒருவாறு வேதியனாக மதிக்கலாம்.

## கடன்வாங்கல்.

கடன்வாங்கும் நண்பர்காள்! தீமைதரத்தக்க கடனால் உண்டாகும் கஷ்ட நஷ்டத்துக்கு ஓர் திருஷ்டாந்தம் கூறுகின்றோம். சிறிது செவி கொடுங்கள்.

ஒருநாள் அதிகாலையில் ஞானியொருவர் தன்சயனம்விட்டெழுந்து, ஓராசனத்தி லுட்கார்ந்துகொண்டு, வேதாந்தவிஷயங்களைக்குறித்து, எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில், ஒருமனிதன்வந்து கதவைத்தட்டினான். அப்போது ஞானியார் ஆசனம்விட்டெழுந்து கதவைத்திறந்து வந்தவனை யொன்று பார்த்தபோது அவன் தன் பாலியகாலத்தில் தனக்கு மிகவுமிஷ்டமான ஓர் சிநேகனென்றும், அவன் தனக்குள்ள செல்வங்களை யெல்லாம் உண்பதிலும், தின்பதிலும், இரதங்களேறி வேடிக்கையாக உலாவித்திரிவதிலும், செலவிட்டுக் கண்டகண்டவிடங்களிலெல்லாங் கடன் வாங்கினதால், அசையாச்சொத்துக்களெல்லாம் கடன் கொடுத்தவரால் பறிமுதலாக்கப்பட்டதன்பேரில், அவைகளையெல்லாம் இழந்துவிட்டு, தாரித்திரியத்திற்குள்ளாய், ஆண்டிபோல் ஊரூருக்குப்போய், வீடுவீடாகப் பிச்சைவாங்கித்திரிந்தபடியால், உடல்மெலிந்து, கந்தைத்துணியும் கரிக்கோலமுமாக நிற்க எதுவுண்டாயிற்றென்றும், நாளடைவிலே கேள்வியானதெல்லாம் நிசமென்றுங் கண்டறிந்தார். தன் சிநேகனென்று கண்ட மாத்திரத்தில் மனதுக்குச்சொல்லமுடியாத வேதனையுண்டா யிருந்தபோதிலும், அதையெல்லாமடக்கிக்கொண்டு, ஞானியார்வேண்டியகாரியமென்னவென்று வினவியபோது, வாசலருகில் நின்றவன் ஞானியைத் தன் பழையசிநேகனென்று அறிந்தபோதிலும்,அதைவெளியிடாது, தன்தோளில் தொங்கிக்கொண்டிருந்த பீற்றல் பைக்குள்ளிருந்து, சிறுபெட்டியொன்றையெடுத்து, அதில்காசுபோடவேணுமென்று குறிப்பாலுணர்த்தினான். ஞானியும் பழைய சிநேகத்தைக்குறித்து உரையாடாது, பூர்வம் தமிழ்நாடுகளில் ஒருபுறம்தாலமும், ஒருபுறம்சிங்கமும், பூர்வ ஆரியவெழுத்துக்களும்,முத்திரிக்கப்பட்டுஉயர்தரமாற்றுப்பொன்னாலாகி,வழங்கிவந்த தங்கக் காசுகளிலொன்றெடுத்து, பெட்டிக்குள் போடவே, யாசகன் மறைந்துவிட்டான். அதன்பின் ஞானியார் முன்போலாசனத்தி லுட்கார்ந்துகொண்டு, அடியில்வருகிறபடி எண்ணமிடத்தொடங்கினார்:—

“உலகத்தில் நடமாடுஞ் சில மனிதரது தேசத்தில் நூதனத்தன்மையுள்ள ஆன்மதத்துவங்க ளமைந்திருப்பதால், அவர்கள் வயது ஏறஏற, விபரீதச்செயல்கள்புரியத்தலைப்பட்டு, ஆடல்பாடல்களிலும், குடித்துவெறிப்பதிலும், வேசிகளை யடுப்பதிலும், செல்வங்களையெல்லாம் அழித்துக் குதர்க்கமுண்டாகும்படி, வெடித்தகுரலோடு பேசிச்சண்டையிட்டு, வாக்குவாதஞ்செய்வதிலும் காலம்போக்கிப் பெரியோரை அவமானஞ்செய்து ‘ஏற்பதிகழ்ச்சி’ என்று மேலோர் கூறியிருப்பதை யுணராது, நாட்கழிப்பதியல்பாகும். கடன்கொள்ளக் கூசாமல் நாளாவட்டத்தில் தரித்திரராய் வருந்தவிடமிருக்குமே யென்று அஞ்சாது, சிலர் திரிகிறார்களே! இது




மெத்த ஆச்சரியம். எனக்கோ கடன்கொள்ள வேண்டுமென்கிற ஆசை சுத்தமாவதில்லை. எனக்கவசியம் வேண்டிய காரியங்களைமாத்திரம் வாங்க நினைக்கிறேன். மலிவாக விருக்கிறதென்று சொல்லித் தேவையில்லாத பொருளை வாங்குவதுமில்லை. பணம் வருமென்று நினைத்துக் கடன்வாங்கிப் பொருள்களை யனுபவிக்கத் துணிவதுமில்லை. இருக்க இல்லும், உடுக்க ஆடையும், உண்ணப்போசனமும், ஆச்சிரமதருமங்கள் நடத்துவதற்கவசியம் வேண்டிய பதார்த்தங்களுமாத்திரமிருந்தால் போதுமென்றெண்ணி, அவைகள் கிடைப்பதற்கேதுவான உபாயங்களில்மாத்திரம் கருத்துள்ளவனாயிருப்பதேயொழிய, வீணனகாரியங்களில் தலையிட்டுப் பிறருக்காகப் பிணைப்பட்டுக் கடன்கொண்டு, பிறகு அல்லும் பகலுங் கடன் தீர்ப்பதிலேயே சிந்தையாயிருந்து மனதுக்குச் சொல்லமுடியாத வருத்தமுண்டாகும்படிச்செய்துகொள்வது எனக்கிஷ்டமில்லை. ஆகவே, என் விஷயங்களுக்காக யான் மிகுதியுங் கவலைகொள்ளாது, பிறர் புரியுங் கருமங்களையெல்லாம் கருத்தாய்க்கவனித்து, அவைகளின்தன்மை யின்னதென்றும், அவைகளால் விளையும் பலனின்னதென்றும், அறிவதற்குச் சாவகாசமிருக்கிறது. யான் சில தருணங்களில் நாடு நகரங்களில் நடமாடித் திரிகையில் மனிதர் கூடிக்கூடிப் பேசிக்கொள்ளும் விஷயங்களைக் கவனித்திருக்கிறேன். அவர்கள் பேசும் பேச்சுகள் மனதிலுள்ள சிந்தனைகளையும் கவலைகளையும் ஒருவரையொருவர் கெடுத்துப் பொருள் சம்பாதிக்கும்படியான ஆசையையும், வெளியிடுகின்றனர். வியாச்சியங்களில் அநேகம் கடன் வாங்கலோடு சம்பந்தப் பட்டவைகளாக விளங்குகின்றன. கடன் கொள்ள மனிதருட் சிலருக்குப் பேராசையுண்டாயிருப்பது எனக்குமிகுந்த ஆச்சரிய முண்டுபண்ணுகிறவைகளா யிருக்கின்றன. கடன்வாங்கினபேர் கடன் செலுத்த வேண்டியகாலம் தப்பிப்போனகாலமுதல் கடன் கொடுத்தவர்களுக்கு அடிமையாய்த் தங்கள் சுவாதீனம் மேன்மை முதலியவற்றை இழந்துவிடவேணு மென்பதை அறியாதிருப்பது வியப்புக்கிடமாகிறது. அடிக்கடி கடன்காரர் அவர்களை இம்சைசெய்து அவமானப் படுத்தியபோதிலும், அவைகளையெல்லாம் ஒருபொருட்டாக எண்ணுமல் மேலுமேலுங் கடன் வாங்கிக்கொண்டே யிருப்பார்கள். இது என்ன துணிவு! தான் வசிக்கும் வீட்டில் நுழையுமாட்களைக் கண்டு பயந்து, நாணி ஒளித்துக்கொள்வது மானிடசென்மத்திற் கடுக்குமோ? இந்த நாட்டிலுள்ள எத்தனையோ பிரபுக்கள் அநேக தலைமுறைகளாகக் கடன்பட்டுக்கொண்டே வந்திருக்கிறார்கள். கடன் வாங்குவது தங்கள் உயர்நிலைக்குக் கௌரவமுண்டு பண்ணுஞ் சிறந்தலட்சணமென்று மதித்து வருகிறார்கள். திரண்டசெல்வங்களைத் திரளாகக் குவித்துவைத் திருப்பவர்களுங் கூட சிலவருஷங்களுக்குள் தங்கள் சொத்துக்களையெல்லாமிழந்து யாசக நிலையில் வருவது இயற்கை.

"நல்குரவென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்றுபடும்."

என்று நாயனர் தமது திருக்குறளில் வரைந்து, தரித்திரநிலை பல துன்பங்களை வருவிக்கத் தக்கதென்று வெளியிட்டிருப்பதற்கிசையக் கடன்வாங்கும் வழக்கமுடையோரும் யாசிக்கும் நிலையில் வந்து இல்லறத்திற்குரிய உலக வியாபாரம் நடத்தக்கூடாது. பல இடையூறுகளுக்குள்ளாவர். ஆதலால் வரவுக்குத்தக்க செலவுசெய்து ஐயமிடல்முதலிய அறவழியில் உயிர்வாழ்வதே அறிவுடையோரது நெறியாகுமென யாவருமறியக்கடவர்.

மேற்சொல்லிய துன்பங்களையெல்லாம் குறித்துக் கல்விக்களஞ்சியம் முதல் நெம்பராகிய "கடன்பட்ட கந்தன் சரித்திரத்தில்" வெகு நன்றாக எழுதியிருக்கின்றது. கந்தனே கடனால் அடைந்த துன்பங்கள் அநேகம். கடைசியில் கடவுள் அருளால் கடன்தீர்ந்து வாழ்ந்தான். கடன் வாங்குவதினால் உண்டாகும் கஷ்ட நஷ்டங்களை அறியவிரும்புவோர் "கடன்பட்ட கந்தன் சரித்திரத்தை" வாங்கி வாசித்தல்வேண்டும். விலையோ பை ஆறு. மதராஸ் ரிப்பன் பிரேஸ்: சை. ர. நமசிவாய செட்டியாரிடத்தில் பெற்றுக் கொள்ளலாம். இதனால் கடன் வாங்கப்படாது எனப் பொருள் படுகின்றது. சிலர் வரவுக்குத்தக்க செலவுசெய்யாது விபரீதச்செலவினிமித்தம் கடன்வாங்கித் தரித்திரராகின்றனர்கள். சிலர் கடன்கொடுத்தோரை ஏமாற்றக் கங்கணங்கட்டிச் செலவுபண்ணி மிகுந்த சொத்துக்களை மனைவிபேரில் எழுதிவைத்து "கடன் கொடுக்கச் சக்தியில்லை" யென்று வெட்கமின்றி நியாயாதிபதியின் முன்னிலையில் கூறி இன்சால் வெண்டு வாங்கிக் கடன்கொடுத்த பிரபுக்கள்வாயிற் கடுக்காய் வைக்கிறார்கள். இப்பாவிகள் மறுபிறப்பில் நாய்ப்பிறப்புமுதலியஇழியபிறப்புகளை அடைந்து வருத்தமுறுவார்கள் என்பதற்கு ஐயமில்லை.

---

## விபரீதச் செலவினால் நேரும் கஷ்ட நஷ்டங்கள்.

## செட்டிமார் தாம்பூலம் வைத்தல்.

ஐயா,—இது விவாகத்திற்கு வரும்படி பந்துக்களையும், சிநேகிதர்களையும், அக்கம்பக்கத்தாரையும், கண்டவரையும், காணாதவரையும் தாம்பூலம் வைத்து அழைத்தல். "இன்னார் மேன்மையுடையவர்; இன்னார் மனுஷத்தன முடையவர்; இன்னாருக்கு இவ்வளவு ஆஸ்தியிருக்கிறது; இவர் இந்தவியாபாரத்தில் இவ்வளவு பணம் சம்பாதித்தார். இவர் இன்னார்பிள்ளைக்குப் பெண் கொடுத்தவர்; இவருக்கு இந்த ஆபீசில் இத்தனை ரூபாய் சம்பளம்; இவருக்கு இந்த இடத்தில் இத்தனை வீடும், இந்த இடத்தில்இவ்வளவு வாடகை வரும் பங்களாக்களு மிருக்கின்றன; இவருக்கு இத்தனை லக்ஷம் ரூபாய் மதிப்புகொண்ட ரவையினால் செய்யப்பட்ட நகைசெட்டுகளித்தனை யிருக்கின்றன. இவர் பல துர்மந்திரிகள் போதனையினால்சுபாசுபங்களை ஜம்பமாய்ச்செய்து மூடரால் சொற்பகாலம் பேரெடுத்துக் கடனாளியாய்ப் புதுவையிலும், திருவொற்றியூரிலும் ஓடி ஒளித்து மறைந்து கடன்காரர் வாயில் கடுக்காய்வைத்த இன்னார் நகைகளை யெல்லாம் ஏலத்தில் எடுத்துக் கேட்டவருக்கு இல்லையென்னாது அந்நகைகளைத் தாராளமாய் இரவல் கொடுக்கின்றவர். இவர் எவர் வீட்டிற்கும் தள்ளாமல்வருகின்றவர்" என்று கூடவருபவர் போதிக்க, ஆ! ஆ! இப்படிப்பட்ட பிரபுக்களெல்லாம் வந்தால் தான் நமது கலியாணம் சிறப்பாய் நடக்கும்; பேரும் புகழும் வருமென்று ஆயிரம், இரண்டாயிரம் வீடானாலும் சரி; நாலாயிரம், ஐயாயிரம் குடித்தன மானாலும் சரி; தவறாது தாம்பூலம் வைப்பார்கள். நூறு இருநூறு ஜனங்கள் உட்காரும் இடமுள்ள வீட்டாரும் 'கணக்கற்ற ஜனங்களை அழைக்கின்றோமே; இடமில்லையே; வருபவர்க்கு அவமரியாதை நேரிடுமே' எனச்சற்றும் நினைக்கின்றாரில்லை. கலியாணத்தில் பல அலுவல்களினால் அவஸ்தைப்படுவது யாவரும் அறிவர். அதனோடு ஆயிரம், இரண்டாயிரம் வீடு ஏறி இறங்க முடியுமா? இரும்பு காலானாலும் தளர்ச்சியுண்டாகுமே. வயதுனஜாஸ்தியான விருத்தாப்பியருக்கும், பெருத்த ஸ்தூலசரீரத்தையுடையவர்க்கும் எங்ஙனமுடியும்? கலியாணம் முடிவதற்குள் ஒரு கண்டமாயிருக்கிறதென்று ஒவ்வொருவரும் வெகு

வருத்தப் படுகின்றனர். வருத்தத்தை நிவர்த்திசெய்து கொள்ளத்தக்க யோசனை அவர்கள் செய்துகொள்ளலாம்; செய்கிறதில்லை. அதைப்பற்றி எழுதினாலும் காதுகொடுத்துக் கேட்க மாட்டார்; திட்டுவார்; நிந்திப்பார். கெட்டதானாலும்,நல்லதானாலும்வழக்கத்தைவிடமாட்டார். அப்படியிருந்தாலும் சொல்லத்துணிந்து விட்டபடியால் சொல்லியே முடிக்கிறோம்.

விவாகபத்திரிகையும், தாம்பூலமும் ஆள்வசம் அனுப்புவது மிக்க உத்தமமாயிருக்கிறது. ஏனெனில், கலியாண வீட்டாருக்கு வெகு வேலைகளிருக்கின்றன. அரிசி, பருப்புமுதலிய சாமான்களும்,நெய் எண்ணெய் முதலிய சாமான்களும், கொத்தவால்சாவடி சாமான்களும், தோவித்தி புடவை முதலிய சாமான்களும் வாங்க வேண்டும். துணிகட்டிச் சித்திரவேலைசெய்து, குளோப், லஸ்தர்முதலிய சாமான்களால் பேஷ்!பேஷ்! என்று எவரும் மெச்சும்படி அலங்கரிக்க வேண்டும். ஆள்களை அமைக்க வேண்டும். வீடு பழுதுபார்த்து வர்ணம் பூசிக்கண்கள் பிரமிக்கும்படிச் செய்யவேண்டும். பாத்திரசாமான்களும், பாய்,நாற்காலிமுதலிய சாமான்களும் இரவல்வாங்கி வரவேண்டும். அனேகசாமான்களுக்கு அச்சாரம் கொடுத்துத் தருவிக்கவேண்டும். ஒது-உடுது-ருடுது-ாது-வரையில் அவரவருக்குத் தக்கபடி இரவல்நகை வாங்கவேண்டும், பணமில்லாவிடில், யார்காலிலாவது வீழ்ந்து பொய்யும் புளுகும் பேசியாவது வாங்கவேண்டும்; இப்படி வாங்கிக் கொடுக்கவேண்டிய சாமானுக்குக் கங்குகரையில்லை. ஒருசாமான் சமயத்தில் இல்லாவிடின், பெருத்த அவமானம்வரும் என்பதற்கு ஐயமில்லை. இதற்கு நடுவில்வந்த ஜனங்களை அழைத்து உபசரித்துத் தாமே நேரில் ஒவ்வொருவரையும் மரியாதை பண்ணவேண்டும். வாங்கி வந்த நகைகளைக் கணக்கு எழுதிக் குழந்தைமுதல் வேலைக்காரிவரையில் யாவருக்கும் கொடுத்தும் பிரதி தினமும் கணக்குப்பார்த்து, நகையைச் சோதனைசெய்து வாங்கிப்பெட்டியில் வைத்துப் புறத்திருடராவது, உள் திருடராவது எடுக்காவண்ணம் பூதம்போல் காவல் காத்துப் பெட்டியின் மீதேபடுத்துநித்திரைசெய்யவேண்டும். மீண்டும் நகைகளைக்கணக்குப்படி கொண்டுபோய் ஒப்புவிக்கிறவரையில் தூக்கம் பிடிக்காமலும், உண்கிற சோறு உடம்பில் ஒட்டாமலும், மனது திக் திக் என்று எரிந்து நடுக்கங்கொண்டு ஒன்றும் தோன்றாது பித்தம் பிடித்தாற்போல் புத்தி தடுமாறி, எப்போது கலியாணம் முடியப்போகிறதென்று, அல்லும் பகலும் ஏக்கங்கொண்டிருக்கிறார்கள். இன்னும் இவைபோன்ற பல அலுவலிருப்பதால் மேற்படி கஷ்டநஷ்டத்தோடு பல்லாயிரம் வீடுகள் ஏறி ஏறி இறங்குவது சாத்தியப்படுமா? ஒரு வேலையும் இல்லாவிட்டால் ஏறலாம் இறங்கலாம். பத்திரிகை வழக்கம் பல ஜாதியாரிடத்தில் இருக்கின்றது. பல ஜாதியார் பத்திரிகை அனுப்பினால் அதை அங்கீகரித்து அவரவர் வீட்டைத்தேடிச் செல்கின்றனர். அங்ஙனமே தங்கள் ஜாதியார்க்குள் ஏன்செய்துகொள்ளப்படாது? பத்திரிகை அனுப்புவது தப்பல்லவே. இராஜாக்கள் ஓலையெழுதி அனுப்பவில்லையா ? செட்டிமாரில் பத்திரிகை வழக்கமுமிருக்கிறது. எங்ஙனமெனில், வேறு ஜாதியார்க்குப் பத்திரிகையும், தாம்பூலமும் அனுப்புகின்றார்கள்; தங்கள் ஜாதியார்க்கு மாத்திரம் அனுப்புகிறவழக்கம் இல்லை. இனிமேலாவது பத்திரிகை அனுப்பும் வழக்கத்தைவைத்துக் கொண்டால் பாதி கஷ்டம் நிவர்த்தியாகும்.

அஃதன்றிப் பெண்களும் கூடப்போய் அழைக்கவேண்டியதாயிருக்கின்றது. எல்லாவேலைக்கும் காரணமாயிருக்கிற பெண்கள் வீட்டிலிருந்தாலல்லவா சாமான்கள் திருட்டுப்போகாமல் பாதுகாத்து வேலைக்கார

ரிடத்தில் வேலைவாங்கலாம். பெண்டுகள் நேரேபோய் அழைப்பதை நிறுத்தினல் அவர்கள் அணியும் ஒரு செட்டு நகை இரவல் வாங்காதிருக்கலாம். அசையாமல் உட்கார்ந்திருக்கும் தனவந்தர்வீட்டுப்பெண்கள் ஆயிரம், இரண்டாயிரம் வீடுகள் ஏறி இறங்கவேண்டுமானல் எவ்வளவுபிரயாசையாயிருக்கும்? பூததயை பச்சாதாபமுள்ள கனவான்களே! யோசியுங்கள், யோசியுங்கள். நல்லதைச் சொன்னலும் தடி எடுத்துக்கொண்டு அடிக்கவரும் முழுமக்கள் சொல்லைக் கேட்கவேண்டாம். செல்வத்தில் மிக்க குஜாராத்ஜாதியாரில் ஒரு ஆள்போய் ஸ்திரீ, புருஷாள் இருவருக்கும்சொல்லுகிருன். சொந்தக்காரர் சொன்னதாகவேபாவித்து அப்பிரயோசனங்களுக்குத் தவருதுபோகின்றனர். அவரவர் எந்தெந்தவிதமாய் வழக்கம் உண்டுபண்ணிக்கொள்ளுகின்றனரோஅந்தந்தவிதமாய்நடக்கிறது. இதைப்பற்றி இன்னும் எழுதினல் விரியுமாதலின் இதும்மட்டும் நிறுத்தினேம்.

## சுயபாஷை நீக்கம்.

எண்ணரிய பிறவிதனில் இம்மானிடப்பிறவியே மேன்மையுடைத்து. இப்பிறவியின்கண் அறம் பொருள் இன்பம் வீடு ஆகியவற்றைச்சம்பாதித்தல் வேண்டும். இவைகளையடைவதற்கு முதற்காரணமா யுள்ளது கல்வியே. இக்கல்வியைக் கற்றுணராது சோம்பலடைந்து திரிகிறவர்கள் அனேகர். சரீரசக்தி, பொருள் உதவி முதலியவையின்றி இவ்வருங்கல்வியை விட்டவர்கள் அநேகர். அநேக நூல்களைவாசித்து மறப்பு என்னும் பகைவனுக்குப் பறிகொடுத்து விட்டவர்கள் அநேகர். இவ்வாறிருக்க நாம் அக்கல்வியைக் கற்றுணராது வீணே காலங் கழிக்கின்றமையை யோசிக்கின் விசனமாகவேயுளது. கல்வியினலேயே மோக்ஷம் அடையவேண்டுமாதலினல் இம்மோக்ஷத்தைக்காட்டும் வழியுள்ளது சமஸ்கிருத தமிழ் சாஸ்திரங்களே. பிற அந்நிய பாஷையாகிய இங்கிலீஷ், லாடின், கிரீக்முதலிய பாஷைகளில் இவ்விதமான நூல்கள்கிடையா. நமதுஇந்து மத சாஸ்திரங்களும், வேதங்களும், ஸ்மிருதிகளும் இன்னு மற்றுமுள்ள அநேக கிரந்தங்களும் சமஸ்கிருத பாஷையிலேயே இருக்கின்றன; பிறகு தோன்றிய வித்வசிரோன்மணிகள் அனேகவற்றைத் தமிழில்வரைந்தனர்கள். இவற்றையெல்லாம் ஆய்ந்து பாராமல் இங்கிலீஷ்பாஷையே மேலானபாஷையென்றும், அதனல் அடையவேண்டிய பலன்கள் அநேகம் என்றும், சுயபாஷையாகிய சமஸ்கிருத தமிழ்ப்பாஷைகளினல் இவ்வித பயன்களை அடையக்கூடாது என்றும், யானைகண்ட குருடரைப்போல் சுற்றிச் சுழன்ற சில மாணக்கர்கள் பி-ஏ - முதலிய பரீக்ஷையில் தேறிக் கிறிஸ்துமதப் படுகுழியில் விழுந்து அலைந்து காமுற்று இன்பத்துக்குவீங்கிப்பறைப்பெண்களைக்கூடி அலைகின்றனர்கள். இவர்களுக்குச்சுயபாஷை சுட்டுப்போட்டாலும் தெரியாது. இதனல் நாம் இங்கிலீஷ் கற்கப்படாது என்றுகூறவந்தோம் இல்லை. சுயபாஷையைவிட்டுப் புறபாஷையைக்கற்றல் எப்படி யிருத்தலெனின், கற்பு நிறைந்து அழகுவாய்ந்து கல்வி கேள்விகளையெல்லாம் முற்றறிந்த தனது சொந்தமனைவியையவிட்டு வேசியைக் கூடினற்போன்று. இராஜபாஷை இங்கிலீஷ்பாஷையா யிருத்தலினல் அதையும் சிறிது கற்கத்தான் வேண்டும்; தமிழ், சமஸ்கிருதபாஷையைத் தேகம் உள்ளவரையும் இடைவிடாது படித்து, சந்தேகங்களைப்பல ஆசிரியர்களால் நிவர்த்தித்து உண்மைகளை உணர்ந்து மோக்ஷ நிலையை இனியாகிலும் அடைவார்க ளென்று நமது ஒப்புயர்வற்ற பரமதியை இடையருது தியானிப்போமாக.



# விவேகசுந்தரம்.

நெ. ௨.

இதில் அடங்கிய விஷயங்கள்.



இதில் இடமின்றி விட்ட விஷயங்கள் புத்தகத்திற்காண்க.

பாகசாஸ்திரம்.

## மிளகுகுழம்பு.

ஒருசிறிய கரண்டிமிளகு, அவ்வளவு துவரம்பருப்பு, ஒருபிடி கறிவேப்பிலை, அரைக்கால் வராகனிடை நல்லபெருங்காயம் ஆகிய இவைகளைப்போதுமான நெய்யிலேவறுத்து அம்மியில் நெகிழ அரைத்து ஒருபடி அல்லது ஒன்றரைப்படிசலத்தில் கரைத்து ஒருபெரியகரண்டியளவு உளுத்தம் பருப்பை, நெய்யிலே தனியேவறுத்து மேற்சொல்லிய சலத்திலே கரைத்துப் பத்துப்பலம் கருணைக்கிழங்கை அரையங்குலப்பிரமாணமாக அறுத்து இரண்டுபடி சலத்தில் தனியேவேகவைத்துச் சலத்தையிறுத்துவிட்டு அதைமுன்குழம்புச் சட்டியிற்பெய்து கொதிவருகிறவரையில் வேகவைத்து ஒருகரண்டி அழுக்குவாங்கிய உப்புபோட்டுப் பின்பு ஒருகரண்டியில் உளுத்தம்பருப்பும் கறிவேப்பிலையும் நெய்யில்வறுத்து வாசனையெழும்பியபின்பு அதிற்போடவேண்டியது. இதைச்சுடுகையோடு புசிக்கவேண்டும். வாயுவுபோம்.

## PROVERBS.

## பழமொழிகள்.

அவனன்றி ஓரணுவும் அசையாது.

அகத்தினழகு முகத்திற்றெரியும்.

அகத்தி ஆயிரங்காய்த்தாலும் புறத்தி புறத்தியே.

அக்காளிருக்கிற வரையில் மச்சானுறவு.

அக்காளுடைமையரிசி தங்கையுடைமை தவிடா?

அகதிக்குத்தெய்வமேதுணை. [அகதி—ஏழை, வறியவன்]

"அடுத்ததுகாட்டும்பளிங்குபோனெஞ்சங், கடுத்ததுகாட்டுமுகம்."

அசைந்துதின்பதுமாடு அசையாமற்றின்பதுவீடு.

ஆனையசைந்துதின்னும் வீடு அசையாமற்றின்னும்.

அச்சாணியில்லாததேர் முச்சாணுமோடாது,

அஞ்சலிவந்தனம் ஆருக்குநன்மை.

அஞ்சினவன்கண்ணுக்கு ஆகாயமெல்லாம்பேய்.

வெருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம்பேய்.

அடாதுசெய்தவர் படாதுபடுவர்.

அக்காளுறவும் மச்சான் பகையுமா? அக்காளைக்கொண்டால் தங்கைக்கு முறைகேட்பானேன்.

அக்காள்தான் கூடப்பிறந்தாள் மச்சானுங் கூடப்பிறந்தானா?

அக்கிராரத்திலொரு ஆடுசெத்தால் ஆளுக்கொருமயிர்.

அக்குத்தொக்கில்லாதவனுக்குத் துக்கமென்ன.

அங்காடிவிலையை அதிரஅடிக்காதே.

அங்குமிருப்பாளிங்குமிருப்பாள் ஆக்கினசோற்றிற்குப்பங்குமிருப்பாள்

அங்கேண்டிமகளே கஞ்சிக்கழுகிறாய் இங்குவாடிகாற்றுய்ப்பறப்பாய்.

அச்சியிலுமுண்டுபிச்சைக்காரன்.

அச்சியிலேபோனாலும் அகப்பை அரைக்காசு.

அச்சில்லாமற்றேரோடுமோ? ஆம்புடையானில்லாமற் பிள்ளையுண்டாமா?

அஞ்சிலறியாதவன் ஐம்பதிலறிவானா.

அஞ்சிலேவிளையாதது ஐம்பதிலே விளையுமா.

அஞ்சினவனைப் பேயடிக்கும்.

அஞ்சினாரைக் கெஞ்சவைக்கும் அடித்தாரைவாழவைக்கும்.

அஞ்சுபணம்கொடுத்தாலும் ஆத்திரமாகாது.

அஞ்சுமிருக்கிறது நெஞ்சுக்குள்ளே, அதுவுமிருக்கிறது புந்திக்குள்ளே.

அஞ்செழுத்தும் பாவனையும் அவனைப்போலிருக்கிறது.

அஞ்சுமூன்று முண்டானால் அறியாப்பெண்ணும்கறியாக்கும்.

அறுப்புகாலத்திலே எலிக்கு இரண்டு கூத்தியார்.

கும்பிடப்போனதெய்வம் குறுக்கேவந்தது.

செடியிலே வணங்காதது மரத்திலே வணங்குமா?

---






No. 2. சுபமஸ்து. நெ. உ.

# விவேகசுந்தரம்.

### விநாயகர்துதி.

நல்ல சொற்பொரு ளுளு நடாத்தவும்
எல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வெல்லு மானை முகத்தினை மேவிவாழ்
வல்லபைக் குரி யானை வழுத்துவாம்.

### விவேகசுந்தரத்தின் இலக்கணம்.

'விவேக சுந்தரம்' என்னும் வடமொழித் தொடர்மொழி 'விவேக' 'சுந்தரம்' என்னும் இரண்டு பதங்களால் ஆகி, விவேகத்தையுடைய சுந்தரமென விரியும். 'விவேக' என்பது வெவ்வேறுகப் பிரித்தறிதல் எனப் பொருள்படுகின்ற 'விவிச்' என்னும் தாதுவினின்றும் பிறந்தது; 'சுந்தரம்' என்பது நன்றாக மதிக்கத்தக்கதென்றும், உருக்கத்தக்கதென்றும் பொருள்படுகின்ற 'சுந்த' 'சுந்தி' என்னும் தாதுகளினின்றும் பிறந்தது; பிறக்கவே, சுந்தரமென்பது அழகையுடைய பெண்ணுக்குப் பண்பாகுபெயராய் நிற்கும்; நிற்கவே 'இது தீமை இது நன்மை என்றும், இது பாபம் இது புண்ணியம் என்றும், இது பொய் இது மெய் என்றும், இது அநித்தியம் இது நித்தியம் என்றும், இது சடப்பொருள் இது சித்துப்பொருள் என்றும், இது அசத்து இது சத்து என்றும், இது தகாதது இது தக்கது என்றும் அறியுமாற்றலுடையளாய், அறிந்தபடியே எவரும் மதிக்கத்தக்கதாகவும், கசியத்தக்கதாகவும் போதித்து உருக்கும் ஆற்றலுடையளாய், புறத்தும் அகத்தும் சுத்தமாயும் தூயதாயும்இருக்கும் அதிவிசிஷ்டஇலாவண்ணியமுடைய 'விவேகசுந்தரம்'' என்னும் பெண்ணனவள், இத்தமிழ்மொழி வழங்கு நிலத்திலே வசிக்கின்ற வயசிற் சிறியோரும் முதியோருமாகிய எல்லோருக்கும் இப்புஸ்தகவடிவமாக நின்று உண்மைபோதிக்கும் தொழிலை மேற்கொண்டமையால், 'விவேகசுந்தரம்'. என்னும் பெயர் இப்புத்தகத்துக்கு அடையடுத்த இருமடியாகுபெயராய் நின்றவாறு காண்க.

## இல்லறதர்மம்.

### கணவனும் நாயகியும் ஒன்றுபட்டுவாழ்தல்.

அநாதிமுத்த சித்துருவாயுள்ள அமலனாகிய விமலனால் இவ்வுலகின் கண்படைத்துள்ள ஆன்மகோடிகள் பலவற்றுள்ளும் இகபரசாதனங்களைத் தரவல்ல பகுத்தறிவும் ஞானமும் நிறைந்தபிறவி மானிடப்பிறவியேஅன்றி வேறன்று. இம்மானிடப்பிறவியில் பரஇன்பத்தை அடைதற்குப்பிரமசாரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என நான்கு நிலைகள் உண்டு. அந்நான்கு நிலைகளுள்ளும் துறந்தோர்க்கு உணவுமுதலியனகொ









டுத்து, இறந்தோர்க்குத் தீக்கடன் நீர்க்கடன்களைச்செய்து பலவிததர்மங்களையும் இயற்றி விருந்தோம்புதல் செய்கிறவன் இல்லற தர்மத்தை அனுசரித்தவனாதலால்,இல்லறநிலையானது சிறந்ததே! இதற்குப்பிரமாணம்:—

திருவள்ளுவநாயனார் திருக்குறள்.

"துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வானென்பான்றுணை."

"இல்வாழ்வானென்பா னியல்புடைய
மூவர்க்குநல்லாற்றினின்றதுணை"

இவ்வளவு சிறப்புபொருந்திய இல்லறதர்மத்தை நடத்தும் நாயகனுக்கு வேண்டிய துணைக்கருவிகள் யாவற்றுள்ளும் நற்குணநற்செய்கையுள்ளநாயகி பிரதானமானவள். நற்குண நற்செய்கைகள் நிறைந்துவிளங்கும் நாயகியின்றித்தீக்குணம் நிறைந்த நாயகியைக்கொண்டு விளங்கும் நாயகனது இல்லறம் நல்லறமல்ல.

"பத்தாவுக்கேற்றபதிவிரதையுண்டானால்
எத்தாலுங்கூடியிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமாறாகஇருப்பாளேயாமாகில்
கூறாமற்சந்நியாசம்கொள்."

நாயகன் பரிசுத்தமனத்தினனாயும் தெய்வபக்திநிறைந்தவனாயும் இருந்து இல்லறத்தை நடாத்தினும், அவனது நாயகியும் மனமொத்து ஈருயிரும் ஒருடலில் பொருந்தியதென்ன வாழ்க்கையுற்றாலன்றி, அவனது இல்லறதர்மம் பயனிலது.

ஆதலால் கிரகஸ்தாஸ்ரமத்தின்கண் நின்று இல்லற தர்மத்தை வழுவாது நடத்தத்துணைக்கருவியாகியமனைவியானவள் தூயமனத்தினளாயும், நற்குண நற்செய்கைகள்நிறைந்தவளாயும், இருக்கவேண்டியது. ஓர்நாயகி இத்தகைய நற்குணங்களைப் பெறுதற்கு ஆதாரம் தெய்வபக்தியே அன்றி வேறில்லை. ஆதலின் குடும்பநாயகிகளிடத்து தெய்வபக்தி அவசியம் இருத்தல்வேண்டும்.

கடவுள் தனது பக்தர்கள்பொருட்டாய் தனது கருணையை வெளிப்படுத்த பற்பல சமயங்களில் செய்தருளிய அற்புதமான அவரது ஆடல்களின் சரித்திரங்களையும் அவரை வழிப்பட்டுநிற்கும் சாதுக்களாகிய மகாத்மாக்கள் இவ்வுலகின்கண் நம்போலியர் பிழைத்துய்யும்பொருட்டு இயற்றிய அற்புதங்களின் சரித்திரங்களையும் காதாறக்கேட்டு மனமாறச் சிந்தித்துக் கசிந்துருகினாலன்றித் தெய்வபக்தி உண்டாகமாட்டாது.

தலையிற் குறித்த இப்புத்தகத்தை ஆதரிப்போர் பெரும்பாலும் இந்துக்களாகவே யிருத்தலால் அவர்களுக்குவேண்டிய மதவிஷயங்களைப்பின் வரும் தொடர்ச்சிகளில் எழுதுவோம்.

ஆகையால் சகோதரர்களே! யாம் மேற்சொன்னபடி அடுத்த புத்தகம் முதல் எழுதும் விஷயங்களில் சிறிதுநேரம் கவனித்துப் பார்ப்பீர்களெனக் கோருகின்றோம்.

---

## நமதுதேசத்தில்வாழும் இந்துக்கள்
## பலமில்லாமல்இருத்தற்குக் காரணமென்ன?

இத்தேசத்தில் பெண்கள் ருதுவாவது கO - கக - கஉ - வயதில். இவ்வயது இளமையே. கரு-கஅ-வயதில் உறுப்புகள் சரியாய் அமைந்து புருஷருடன் சேரத்தக்க காலமாகும். நமது தேசத்தவரோ அம்மட்டும் காக்கவிடந்தராது ருதுவான ஒரு வருஷம் கூ-மாசம் ரு-மாசம் ஒருமாசம்




கரு-நாள் ௬ நாளில் புருஷசையோகத்திற்கு இடந்தருகின்றனர். கருதரித்துவிடின் வயிறு மேடிட்டுப் பிள்ளையைத் தாங்கமாட்டாது பிரசவகாலத்தில் மரணத்திற்குப் பெரும்பாலும் இடமாகிறது. இத்தேசத்து வெள்ளைக்காரர் கரு-கஅ-உ௦-வயசு வாராது விவாகமே செய்வதில்லை யாதலால் அவர்கள் பிரசவத்திலிறந்தசெய்தி இதைப்போல் அடிபடுவதில்லை. பெண்கதிதா னிப்படி யிருக்கிறதெனில் பிள்ளைகதியு மிப்படியே. கசு-கரு-கஅ-வயசில் சோபனம் செய்துவிடுகிறார்கள். இப்படிப்பட்ட பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பிறக்கும் பிள்ளை நாய்க்குட்டி பூனைக்குட்டிபோலிருக்குமன்றித் திடகாத்திரமா யிருக்குமா? இத்தேசத்தார் துர்ப்பலராய்த் தினந்தோறும் போவதற்கு இதோர் பெருத்த காரணமென்று ஊகித்துத் தக்கவயசில் ருதுசாந்திசெய்யத் தேசாபிமானிகள்புறப்படவேண்டியது அத்தியாவசிகம். சிறுவயசில் விவாகஞ்செய்துசிறுவயசில்ருதுசாந்தி செய்வது மதசம்பந்தமென்று கவர்ன்மெண்டார்பிரவேசிக்கமாட்டார்கள்.

புருஷனுக்கு உ௦-உஉ-வயசிலும் பெண்களுக்கு கரு-கஅ-வயசிலும் விவாகம் செய்யப்பட்டுவந்தால் இத்தேசத்தார் சற்றேறக்குறைய அங்கிலேயரைப்போல் பலசாலிகளாயிருந்து அங்கிலேய மாதரைப்போல் உ௦-௩௦-பிள்ளைகளையும் பெறுவார்கள். இத்தேசத்தார் எதிலும் புத்தியீனராயிருப்பதோடு இதிலும் புத்தியீனரா யிருக்கின்றனர். தலை உடைத்துக்கொண்டாலும் கேட்பவரில்லை. சிலர் ருதுவாகச் சிறிது தாமதமானால் மருந்து கொடுத்து ருதுவாகச் செய்வது முண்டு. இப்படிப்பட்ட விஷயங்களுக்கெல்லாம் சுதேச அரசர்க்கிருக்கும் அக்கறைபோல் அந்நியதேச அரசர்க்கிராது. இங்கிலாந்துமுதலிய தேசவாசிகள் சுதேசஸ்தரை அரசராகப் பெற்றமையால் எல்லாவிதத்திலும் சீர்திருத்தங்களைப் பெற்றிருக்கின்றார்கள். இத்தேசத்தவர் முற்றிலும் வேறுபட்ட அந்நியரை அரசனுகப் பெற்றமையால் எந்த விதத்திலும் சீர்திருத்தம் பெறாமல் கெடுகிறார்கள். தப்பி அந்நிய அரசர் ஏதாவது சீர்திருத்தம் செய்யப் புறப்படின் அது நன்மையாகவானாலுமாகிறது; அன்றித் தீமையாய் முடிந்தாலும் முடிகிறது; அவர் இத்தேச நடையுடை பாவனைகளை அறிந்திலராதலால் நன்மையும் தீமையாகிறது. சில சீர்திருத்தங்களைச் செய்யின் அது வழக்கத்துக்கும் மதத்துக்கும் விரோதமாகி ஜனங்களால் நிந்திக்கப்படுகின்றன. அதனால் எதையும் செய்யாமல் எதுஎன்ன கேடுகெட்டாலும் நமக்கென்னெனச் சும்மாவிருக்கின்றனர். சுதேச அரசரானால் தக்க பண்டிதரைக்கொண்டு ஆராய்ச்சிசெய்து காலதேச வர்த்தமானங்களை யுணர்ந்துவழக்கமில்லாவிடினும் சாஸ்திர அசம்மதமாயிடினும் துணிந்துசெய்து தேசம் முன்னுக்கு வரக்கருதுவர். இத்தேசத்தார் என்ன பாதகஞ் செய்தனரோ! அந்நிய அரசரைப் பெறுதற்கு உடல், பொருள், ஆவி இம்மூன்றும் தமக்கு நிலைப்பது அரிதான பூர்வீக அரசுக்கு இது எத்தனையோ பங்குமேலானதால் உள்ளமட்டும் களிப்படையவேண்டுவதா யிருக்கிறது.

எதுவும் காலத்துக்குத் தக்கபடி மாறிவரவேண்டும். அப்போது தான்தேசம் நல்ல ஸ்திதியிலிருக்கும். இத்தேசமோ அவ்வண்ணமில்லை. எந்தக்காலத்தில் எவர் எந்த ஏற்பாடு செய்தனரோ அதற்குச் சிறிதும் மாறுபடாமல் இப்போதும் வருகிறது. இதனாலேயே எல்லாத் தேச வாசிகளுக்கும் இவர்கள் எந்த விதத்திலும் ஈனஸ்திதியை அடைந்து அவமானத்துடன் வாழ்கிறார்கள். ஆகையால் இக்காலத்துக்குத் தக்கபடி எதையும் மாற்றவேண்டும். சாஸ்திரமும் இடந்தரும். சாஸ்திரத்தின் முக்கியஅபிப்பிராயத்தை மாத்திரம் மாற்றாது மற்றவற்றை மாற்றலாம். அரச

ன்பல இடங்களிலுள்ள விசேஷ பண்டிதரைத் தருவித்துத் தேச க்ஷேமத்தைப் பற்றியும் மதம் கெடாமையைப்பற்றியும்யோசித்து அப்போதப்போது தக்கபடியே நடத்தவேண்டும்.

கலியாணகாலங்களில்

## தாசிகளைக்கொண்டு நடத்துவிக்கும் கச்சேரி.

ஐயா.—விவாக மகோற்சவ காலங்களில் பந்துமித்திரரைக் களிக்கச் செய்யும் பலவிதத்துள் வரிசையின்றிக் கண்டவரோடு கலந்து இந்திரியத்தையிழுத்துத் துர்ப்பலத்தைத் தந்து பொருளைப்பறித்துத்தீராநோயைஅளிக்கும் தாசி கச்சேரிக்குச் சமமானதுயாதுமில்லையெனக்கருதிச் "சதிரில்லாக் கல்யாணம் பதர்" என எது எங்ஙனமாயினும் அவசியம் கச்சேரி வைத்து விடுகின்றனர். மேற்படி கச்சேரியில் இராமபிரானைப் போன்று ஏகபத்தினி விரதம் பூண்டவராயினும் மயங்கி அந்நாட்டிய மாதருறவுதேடி அதனால் பற்பல தங்குகளை அநுபவிப்பர். இஃது பிரத்தியட்சத்தினும் பிரத்தியட்சம்.

பிதாமார் தமது அருஞ்செல்வப் புத்திரர்க்கு ஆசையோடு கச்சேரி வைப்பது வாஸ்தவமே. ஆனால் தமது பிள்ளைக்கும் தேசத்துக்கும் க்ஷேமமா? அன்றா? என்பதைச்சிறிது ஆலோசிப்பதுஅவர்கடமை. தாசியைக் கண்டறியாத தமது புத்திரர்க்குத் தாமே தாசியைத் தருவித்துக் காட்டின் பின்னர் அப்புத்திரர் அம்மாதர் நட்பைப்பெறாது ஒழிவரோ? இங்ஙனமே மற்றவரும் பெறாரோ; மற்றவர் எங்ஙனமாயினும் தமது புத்திரர் அங்ஙனமாகித் தாம் கஷ்டப்பட்டுத் தேடிய அரும்பொன்னை அம்மாதர்க்கீந்து ஊனும் உடையுமிழந்து மாறாநோயைப்பெற்றுப் பரதேசியாவது சம்மதமாமா? ஆகாதே. இங்ஙனமிருக்க ஏனோ தாசிகச்சேரி வைக்கின்றனர். பிதா தாசியுறவினராயின் கச்சேரிவைக்கத்தானேவேண்டுமெனின், தாம் மேற்படியுறவால் கெடின் புத்திரரும் அவ்வண்ணமாகக் கருதுபவரிராரோ. தாம் புத்தியின்றிக் கெட்டுப்போயினும் புத்திரர் அங்ஙனமாகச் சம்மதியாரானமையால், பிதாமார் கச்சேரி வைப்பதை நிறுத்திவிடுவது நன்று, நன்று; மிகவும்நன்று.

---

# வியபிசாரம்.

---

### பரபுருஷரை இச்சித்தலால் உண்டாகும் தீங்குகள்.

வியபிசாரம் என்பது தனதுபத்தாவை விட்டு அயலானை விரும்புதல். இம்மையில் மாதர்களுக்கு அவமானத்துடன் தீங்கைத்தருவதும், தங்கள் குடும்பத்திற்கு என்றும் நீங்காத அபகீர்த்தியைத் தருவதும் விபசாரத்தைவிட வேறு ஒன்றுமில்லை. தங்களுக்குக் கடவுள் கிருபையினால் கிடைத்தபுருஷன் அழகிலாவது, செல்வத்திலாவது, குணத்திலாவது, கல்வியிலாவது குறைந்தவனானாலும், அவனை அசட்டைசெய்யாது "கல்லென்றாலும் கணவன் புல் என்றாலும் புருஷன்" என்னும் பழமொழிப்படி அவன்மேல் விசுவாசம்வைத்து இல்லறதருமத்தை நடத்தவேண்டும். இதை விட்டுத் தன்புருஷன் கெட்டவனாயிருக்கிறானே என எண்ணிவேறே புருடனை விரும்புவது சுத்த மூடத்தனம். உலகத்தார்கள் இவ்விபசாரியைத்துஷ்டையென்றும், விபசாரியென்றும் தூஷிப்பார்கள். இந்தத்தூஷணைகள்அப்பெண்ணுக்குச் சேருவதுமன்றி கொண்டவீட்டாருக்கும், குலத்தாருக்கும் சேரும். இவ்வித உலக நிந்தனைவரப்போகிற

தேயென எண்ணி அவ்வீட்டார் அந்த விபசாரியை வீட்டினின்றும் துரத்திவிடுகிறார்கள். நீக்குவதினால்குற்றம் ஒன்றுமில்லை. இவ்விபசாரிகள் வீட்டில் இருந்தால் கலகங்களும் உயிர்ச்சேதங்களும் நேரிடும். "நிறை மாணபில் பெண்டினை நீக்கலினிதே" என்றபடி அவர்களை அகத்தியம் நீக்கவேவேண்டும்.

அவ்விபசாரிகள் இவ்விதகொடுஞ் செய்கைகளினால் யாதேனும்லாபம் அடைவார்களோ என்று யோசிக்குங்கால் ஒன்றும் லாபம்பெறாதவர்களாய் "வாய்த்தவிடும்போய் அடுப்புநெருப்புமிழந்தவள்" போல மனம்வருந்தி உண்ணச்சோற்றுக்கும் உடுக்கஉடைக்கும் வழிஇன்றி அலைகின்றனார்கள். இவ்விபசாரிகளை பரபுருஷர்கள் காப்பாற்றுவார்களோ எனில் அதுவுமில்லை. பரபுருஷர்களும்,இவள் தன் சொந்தக்கணவனை மாயம்பண்ணி வந்துவிட்டவளாச்சே! நம்மையும் இவ்விதமாய் மோசம்செய்து ஓடிப்போவாளே எனக் கருதி "ஆசை அறுபதுநாள் மோகம் முப்பதுநாள்" என்றபடி யௌவனகாலத்தில் பிரீதியாயிருந்து மூப்பில் கை நழுவவிடுகிறார்கள். வேறே புருடனைத் தேடிக்கொள்வதற்கும் யௌவனம் போய் விட்டது. கடைசியில் பிச்சையெடுக்கத்தலைப்படுகிறாள். தனது சொந்த புருஷனைத்துரோகஞ்செய்து பரபுருஷனை விரும்பிக்கெடும் ஸ்திரீகள் இம்மாதிரியான ஸ்திதிக்கு வந்தேவிடுகிறார்கள் என்பதற்குப் பலதிருஷ்டாந்தங்கள் பிரத்தியக்ஷமாய்க் காண்கின்றோம். விபசாரிகளின் செய்கையானது முதலாவது அந்தஸ்திரீக்கும் இரண்டாவது கணவனுக்கும், மூன்றாவது அவளை விரும்பிய பரபுருஷனுக்கும் கேட்டைத்தரும். எப்படியெனில் ஓர் ஸ்திரியானவள் விபசாரியாய் விட்டாள் என்பதைச் செவியுற்ற சொந்தக்கணவன் இனி உயிர்வாழ்வதினால் பெருத்த அவமானம்வரும் என்றேங்கித் தற்கொலைசெய்துகொள்கிறான்.இன்னொருவன் தன் நாயகியை பிறன் விரும்பினானேயெனச் சமயம்பார்த்துப் பரபுருடனைக்கொன்று விடுகிறான். மற்றொருவன் இவளால் அல்லவா இவ்வித அவமானம் அடைந்தோம் எனக்கருதி அவளைக்கொன்று விடுகிறான். கொலைகேசுக்காக இராஜாங்கத்தார் அவ்விருதிற கொலைபாதகர்களையும் தண்டித்து விடுகிறார்கள். ஆகையால் இவ்வித தீங்குகளுக்கும் காரணமாய் இருப்பவள் அவ்விபசாரியேயாம். இவ்விபசாரிகள் மறுமையில் கொடுநரகில் விழுவதுமன்றி ஏழுபிறப்பின்கண்ணும் துன்பத்தை அநுபவிப்பார்கள்.

இவ்வித கொடுஞ்செய்கைகளினையுடைய சண்டாளிகளுக்காகவே இவ்வளவுதூரம் எழுதலாயிற்று. ஆகையால் ஒவ்வொருவரும் இதைவாசிப்பதன்றி எழுத்துவாசனையற்ற மாதர்களுக்கும் போதிப்பார்களெனக் கோருகின்றனம். இவ்விபசாரியின் முடிவு கீழ்வரும் வச்சிராங்கியின் கதையால் உணர்க.

---

## தன்கணவனைவிட்டுப் பரபுருஷனைத்தேடி அவமானமடைந்த வச்சிராங்கியின்கதை.

---

மச்சராச்சியம் என்னும் ஓர்தேசத்தில் கச்சிநாதன் என்றொருஅரசன் இருந்தான். அவனுக்கு வச்சிராங்கி என்னும் அதிக ரூபலாவண்ணியமுள்ள மனைவியிருந்தாள். அவள் கற்பு நீக்கமே சிறந்த அறமாக மதித்த ஓர் புண்ணியவதி. அவள் நெடுநாளாக அவ்வூர் இராஜமாளிகை காப்போனுகி

ய முத்துநாய்க்கனிடம் விருப்பங்கொண்டிருந்து, ஓர் நாள் இரவுபதினைந் துநாழிகைக்குமேல் தனதுவீட்டிலிருந்தசொத்துக்களில் சிலவற்றைச்சுரு ட்டிக்கொண்டு மேற்படி கள்ளபுருடனையும் இட்டுக்கொண்டு பிறதேசம் செல்வாளாயினள். போகும்வழியிலே ஓர் ஆறு எதிர் இருந்தது. அவ்வா ற்றை நீந்திச் செல்லமுயன்று அம்முத்துநாய்க்கன் வச்சிராங்கியைப்பா ர்த்துப் பெண்ணே! இவ்வாற்றைத்தாண்ட வேண்டியிருத்தலினாலே உ ன்னுடைய ஆபரணங்கள், வஸ்திரங்கள் எல்லாவற்றையும் கழற்றிக்கொ டு அக்கரையில் வைத்துவிட்டுவந்து உன்னை கூட்டிப்போகின்றேன் என் றுகூற, இவள் அவன்பேச்சைநம்பி ஆடையாபரணாதிகள்யாவும் கழற்றிக் கொடுத்துவிட்டு அம்மணமாய் நின்றாள். அம்முத்துநாய்க்கனானவன் இச் சொத்துக்களையெல்லாம்சுருட்டிக்கொண்டு ஆற்றைத்தாண்டி ஓடிப்போய் விட்டான். இம்மாதுசிரோன்மணி சிறிதுநேரம் நின்றுபார்த்து போனகள் ளபுருடன்மீண்டும் வாராமையைப்பார்த்து இவ்விடம்நிற்றல் தகுதியன்று. மானபங்கம் வந்துவிட்டது. என்செய்வேன், தெய்வமே! பரபுருஷனை விரும்பிவந்ததினாலல்லவா? இந்த அவமானம் நேரிட்டதென்று துக்கித்து அவ்வாற்றில்போய் நின்றுகொண்டாள். அங்கே ஓர் தந்திரமுள்ள குள்ள நரியொன்று மாமிசத்துண்டைக் கவ்விஓடிவந்து அவ்வாற்றின்கண்ணே ஓடும் மீனைப்பார்த்து மாமிசத்தைவிட்டு ஆற்றில்குதித்து மீன்பிடிக்கப் போயிற்று. அப்போது கருடன்மாமிசத்தைக்கவ்வி ஓடினான். மீனும் தப் பி ஓடிவிட்டது. இந்தத்தந்திர நரி "வாய்த்தவிடும்போய் அடுப்புநெருப் புமிழந்தவள்" போல ஆகாயத்தைப்பார்த்து நின்றது. அப்போது ஆற்றி ல்நிற்கும் வச்சிராங்கியானவள் கேட்கின்றாள்.

"சம்புவே! யென்னபுத்தி! சலந்தனின்மீனைநம்பி
வம்புறுவடத்தைப்போட்டு வானத்தைப்பார்ப்பதேனோ?"

அதாவது, ஓ! தந்திரமுள்ள குள்ளநரியே! சலத்தின்கண்ணே வசிக் கின்ற ஓர் அற்பமீனைநம்பி மிகவும் இனிப்புபொருந்திய மாமிசத்துண்டை யிழந்து ஆகாயம்பார்க்கிறாயே! இது என்னபுத்தி? என்றனள். அதற்கு நரி சொன்னதாவது.—

"அம்புவிமாதே! கேளாய்! அரசனையகலவிட்டு
வம்பனைக்கைபிடித்த வாறுபோலாயிற்றன்றே?"

அதாவது, மச்சதேசத்து அரசியே! நீ சொல்வதுசரியே, நான் சொ ல்வதைச் சிறிது செவிகொடுத்துக் கேட்பாயாக. அழகும் கல்வியும் நி றைந்த மச்சதேசத்தை அரசாட்சிசெய்யும் உனது பத்தாவைவிட்டு ஓர் துன்மார்க்கனைச்சேரக்கருதி அவனைத் துணைப்பற்றிவந்து மானபங்கம டைந்து ஆற்றின்கண் நிற்கிறாயே! அந்தகதி நானும் அடைந்தேன் என்ற தாம். அது கேட்டு அவள்மனம் திடுக்குற்று, ஆ! ஓர் நரியினிடம் நாம் அவமானச்சொல் கேட்கவேண்டியதாயிற்றே; என உயிர் இழந்தாள்.

ஆகையால் பரபுருடனை விரும்பும் ஸ்திரீகாள்? இனி இவ்வாறு துன் பத்தைத் தரத்தகும் வியபிசாரம் செய்யாதிர்கள். செய்தால் வச்சிராங்கி அடைந்த துன்பத்தை நீங்களும் அடைவீர்கள். சாக்கிரதை சாக்கிரதை. "கற்பெனப்படுவது மாதர்க்குச் சிறந்த அணிகலம்" எனமதியுங்கள்.

---

## பெண்கல்வி.

### PART II.

கல்வி என்பது அறிவு. அறிவையுடையவர் தான் ஞானத்தையுடை யவராவார். ஞானம் இல்லாதவர் மானத்தைக் காத்துக்கொள்ளார் என்

பது ஞானிகள் துணிவு. ஆகையால், புருஷர்களும், பெண்களும் கல்வி கற்பதே உலகோர்கொள்கை. ஆனால் உலகத்திலிருந்தும் இல்லாதவர் போல் தமது சாதுரியத்தினால் பெண்கள் கல்விகற்கக்கூடாதெனச் சிலர் கூறுவர். அவர்கள்எண்ணம்புண்ணேயாயினும்,சிறிதுயோசிப்போம். அறிவென்பது எல்லார்க்கும் பொதுப்பட்டதாகும்போது புருஷர்கள் கற்கப் பெண்களழுவானேன்? புருஷர்களுக்கு அறிவுவேண்டியபொழுது பெண்களுக்கேன் அறிவுவேண்டியதில்லை. புருஷனுக்குச்செய்யும் அடிமைத்தனமும் செய்யும்வகை இன்னதென்று அறிந்துகொள்வதும் அறிவால்தானே. அப்படியிருக்க, அறிவை யுண்டாக்குகிறகல்வியை ஏன் கற்கக்கூடாது? கல்வியின்றி அறிவு உண்டாகாதல்லவா! புருஷனுக்குச்செய்யும் அடிமைத்தனமும் பெண்கள் அறிந்துகொள்ளவேண்டிய பலவற்றினுள்ளும் ஒன்றே. இந்த ஒருநியாயத்தைக்கொண்டு பெண்களை மூடராக்கிக் கொள்வது பெரும் பேதைமையுடைய புருஷர் தன்மை. இதுநிற்க; மாமியென்பவள் மருமகளாயிருந்த காலத்துப் பட்டுவந்த அவஸ்தையை மறந்து மருமகளைக் கொடுமையாகவும், மகளைச் செழுமையாகவும் நடத்துதலை நீக்குதற்கும், மருமகள் மாமியின் குணானுபவமறிந்து மாமிக்கு உச்சாகமுண்டாகும்படி நடந்துகொள்ளுதற்கும் வேண்டிய நீதிகள் கல்வியல்லாமலுண்டாகாதே. பெண்ணானவள் புருஷனுடைய நேர்மையறிந்து போஜன கலவிகாலங்களில் சைத்யோபசாரஞ்செய்து யாதொரு தடங்கலின்றிப் புருஷனுக்குத் தன்னுடைய உடம்பைச் சிறிதுகாலங் கொடுத்துத் தக்கபடி தேகத்தைக் காப்பாற்றிக்கொள்வதும் கல்வியே. புருஷன்வேசிகாந்தகனாகாதபடி தேகத்தைப் பரிசுத்தமாகவும், புருஷனிச்சைக்குத் தக்கபடி வேசிக்கு மேலாக நடித்தும், புருஷனுக்கு வேண்டிய புத்திகூறும் சுயகாரிய துரந்தரியாயும் நடப்பதும் கல்வித்திறமையே. புருஷன் உணவிற்குத்தக்க உணவுகளைப் பாகமாகச்செய்து படைப்பதும் பாகசாஸ்திரக் கல்வியே. பெண்ணானவள் தன்னுடைய நடத்தையினால் பரபுருஷன் நம்மை யிச்சிப்பான் என்றெண்ணி இன்னின்னவிதமாக நடந்துகொள்ள வேண்டியதென்று தெரிந்துகொள்ளுவதும் கல்வியாலேயே. புருஷன் ஆனந்தமுற இன்னிசைப்பாக்கள் கற்று தன்னந்தனியிடத்தில் இன்புறச் செய்வதும் கல்வியினழகே. புருஷன் வறுமையை மிகவுநோக்கி ஆபரணாதிகளுக்காகத் துன்பப்படுத்தாது வாழ்வதும் கல்வியின் குணமே. தனது குழந்தைகள் பருவத்தின் நேர்மை பாராட்டிச் சீராட்டி, தக்ககாலத்தில் பக்குவ சிகிச்சைசெய்து வளர்ப்பதும் கல்வியின் மணமே. புருஷனுடைய மனதுக்கு ஒத்துத்தக்க தேவதையை உபாசித்து ஞானங்கொள்வதும், புருஷன் புத்தியின்றிச் செல்லும் கண்டவழிகளையுஞ் சீர்படுத்தித்தம்வசப்படுத்தி நடத்துவதும் கல்வியாலாகிய அறிவின்பயனே. பூர்வீக ரிஷிபத்தினிகளும், இராஜஸ்திரீகள் முதலியவர்களும் கல்விகற்றே தந்தம் புருஷர்களுக்கு வந்தனை வழிபாடு செய்துவந்தார்கள். இன்னும் இப்பெண்கல்வியைப்பற்றி மறுமுறைகூறுவோம்.

---

## குலஸ்திரீகளின் கடமை.

---

### குணபூஷணி செய்த உபந்நியாசம்.

சகோதரர்களே! நான்இங்கு உபந்நியாசிக்கும் விஷயத்தில் குற்றங்களை விடுத்துக் குணங்களைமாத்திரம் கைக்கொண்டருளுவீராக.






இவ்வுலகில் வசிக்கும் சீவராசிகளுக்குள்ளே மனிதர் உயர்ந்தவர். மனிதப்பிறப்பிலே ஆடவர் உயர்ந்தவர். அவரால் விரும்பப்படும் பொருள்களிலே மாதர் உயர்ந்தவராம். மாதரும் ஆடவரும் வித்தும் மரமும் போன்றிருக்கின்றனர். ஆடவர் அனுபவிக்கும் சிற்றின்பங்களிலே, மகளிரிடத்து அனுபவிக்கும் இன்பமே சிறந்ததாக மதிக்கப்படுகின்றது. அவ்வின்பத்தையுடைய மகளிரையே உலகமெல்லாம் பின்பற்றுகின்றது. புலவர்கள் காமத்தை வியந்து கூறிய நூல்களிலே மாதர்களைக் கேசாதிபாத வருணிப்பாற் புகழ்ந்துள்ளது வரம்பு கடந்ததா யிருக்கின்றது.

மகளிரிடத்து விளையும் இன்பநுகர்ச்சியைச் சிலாகித்துக் கூறுதநூல்கள் எங்கேனு முண்டோ?

தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் காமத்துப்பாலிலே,

"கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனு
மொண்டொடி கண்ணேயுள"—என்றும்,
"யாம்வீழ்வார்மென்றோட் டுயிலினினிதுகொல்
தாமரைக்கண்ணா னுலகு"—என்றும்,

புகழ்ந்து, மாதர்களின் பெருமையை யெடுத்துக்கூறியது ஜெகப்பிரசித்தமே யன்றோ?

மேற்போந்த திருக்குறளின்படி, மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படும் ஐவகைப்புணர்ச்சி இன்பமும் நம்மிடத்து உள்ளமையானன்றோ நம்மை ஆடவர் நேசிக்கின்றார்கள். நம்மை எவ்வகையாலுந் துன்பமடையாது பாதுகாக்குந் தொழிலை மேற்கொண்டிருக்கிறார்கள். ஆடவர் சாமியத்தை முன்னிட்டுச் செய்யுந் தவங்களும், தானங்களும் இல்வாழ்க்கையின் மேம்பாட்டையும், வனிதாதிபோகங்களையும் விரும்பிச்செய்வனவன்றோ?

மகளிரையின்றிப் பிரபஞ்சமேது? மகளிரையின்றிஇல்லறமேது? மகளிர்இல்லையாயின் சிற்றின்பம், அல்லது பேரின்பம் என்பதும்இல்லையாம்.

பேரின்பம் பெரும்பேருஞ் சீரும்பெற்றது சிற்றின்பத்தினாலன்றோ? இவ்வண்ணமே உலகுக்குப் பெருமையை அளிக்கும் மகளிரது மேன்மையையும் வல்லமைகளையும் எடுத்துப்பேச எவர் வல்லவர்? மாதர்கள் முறையிலே ஆடவர்க்குப் புத்திரிகளாகவும், மனைவியராகவும், தாயராகவும் இருக்கின்றார்கள். அம்மூன்று முறைகளும் மூன்று நிலைகளாம்.

மாதர்கள் முதனிலையிலே பேதை பெதும்பை யென்னும் பருவங்களைக் கடக்குமளவுங் கன்னியர்களாய்ப் பாவிக்கப்பட்டுத் தந்தை முதலியோரது பாதுகாப்பிலே யிருக்கின்றார்கள். இப்பருவத்திலே மகளிர்க்கு யாதாமொரு கடப்பாடுமில்லை; மடந்தை முதல் பேரிளம் பெண்ணீறாகவுள்ள பருவங்களிலே மனைவியர் தாயர் என்னும் இரண்டு நிலைகள் கழிகின்றன. இந்நிலைகளிலே மகளிர்க்குரிய கடமைகள் பல. இம்மூன்று நிலைகளிலுள்ள ஏழுபருவங்களும் ஏழுபடிகளாம். முதலிரண்டு பருவங்கள் மகளிர் கல்வியிலும், கைத்தொழில்களிலும் தேர்ச்சியடைதற் குரியனவாய்ச் சிறந்து நிற்கும்; அவை பயனற்றவையாய்க் கழியுமேல், நன்மனைவியராகவும் நற்றாயராகவும் மகளிர் சிறப்பதில்லை. நன்மனைவியரும் நற்றாயரும் இலராக மாதர்கள் மூடராவாரெனில், ஆடவர்நிலைமைசிறப்பதெங்ஙனம்? ஆதலால், அறிவிற் சிறந்த தாய்மார்களே! புதல்வியர்க்கு இளமையிலே கல்விகற்பிக்கவேண்டும். நீதி நூல்களைக் கற்பித்து, அவற்றில் விதித்த சற்கருமங்களைப் புத்தியிற் பதியும்படி இவை இவையென விளக்கிக்காட்டுதல்வேண்டும். கைத்தொழில்கள் பலவுள. தையல், பின்னல், பூத்தொடுத்









து மாலைகட்டல், சித்திரந்தீட்டுதல், எழுதுதல் முதலிய பலவற்றிலும் பெண்களைப் பயிற்றுதல்நன்று. பாகசாஸ்திரமும், வைத்தியசாஸ்திரமும், கற்பிப்பதனாலே மகளிர் அடிசிற்றொழிலிலே வல்லவராய், அறுசுவையுணவைச் சமைத்துக் கணவன் முதலியோர்க்கு ஊட்டி மகிழ்விக்கவும், பதார்த்தங்களின் குணங்களையும், தேகலக்ஷணங்களையும் அறிந்து நோய்கள் அடையாவண்ணம் ஒடதிகளால்விலக்கிஇரக்ஷிக்கவும்கூடும். இளமையிலே பெண்களைத் தாய்தந்தையர் கல்வியாலும், நீதி போதனைகளாலும், அறிவை வளர்த்தல் வேண்டும்.

"கன்யாபியேவம்பாலநீயா, சிக்ஷணீயாதியத்நத,
தேயாவராயவிதுஷே, தநரத்நஸ்மந்விதா"

(ப-ரை) கன்யாஅபி - கன்னிகையும், ஏவம் - இப்படி, பாலநீயா - போஷிக்கப்படவேண்டியவர், அதியத்நத - மிகமுயற்சியுடனே, சிக்ஷணீயா - கல்விகற்பிக்கப்படவேண்டியவர், தநரத்நஸமந்விதா - திரவியத்துடனும் இரத்தினங்களுடனும் கூடினவராக, விதுஷே - கல்விகற்ற, வராய - கணவனுக்கு, தேயா - கொடுக்கப்படவேண்டியது.

என்னும் வேதக்கருத்துக்கு மாறாக, நாம் பெண்களைக் கல்விகற்பிப்பதின்றி, மூடர்களாக்குதல் அதருமமாம். மறுதடவை மற்றவை வரும்.

## பாலில்லாத குழந்தைகளைக் காப்பாற்றும் விதம்.

தாய்க்குப் பாலில்லாததாலும், பால்கொடுக்கத் தாதியை ஏற்படுத்திக்கொள்ளச் சக்தியில்லாததினாலும்,குழந்தைகளுக்குப் புகட்டும் பால்கொடுத்து வளர்க்கவேண்டிவரும். ஆனால் நிர்வாகமில்லாத ஏழைஜனங்கள் புகட்டும்பால் வாங்கக்கூட அசக்தியுள்ளவர்களாய் இருக்கிறபடியால் நானாவிதமான நொய், மாவு கஞ்சிகாய்ச்சிப் புகட்டுவார்கள். காரன்பளோர், அரொருட், புழுங்கலரிசிகஞ்சி, கேழ்வரகு, கஞ்சி முதலானவைகளைப் புகட்டுவார்கள். குழந்தைகளுக்கு மேற்சொன்னவை யெல்லாம் ஜீரணிக்கிற வஸ்துக்களல்ல. ஆதலால் இவற்றினால் அசிரணம்,மாந்தம் முதலான துன்பங்கள் உண்டாய் அதனால் அநேக குழந்தைகள் இளைத்துப்போம். ஆகையால் சிறுகுழந்தைகளுக்குப் பால்தவிர மற்ற ஆகாரங்கள் கொடுக்கக்கூடாது. அப்படிக்கொடுத்தால் அநேககுழந்தைகள்வியாதியினால் இறந்துபோம். தாய்ப்பால் தாதிப்பால் இல்லாத குழந்தைகளுக்குப் பசுவின் பால் புகட்டலாம். ஆனால் பசுவின்பாலை முலைப்பாலுக்குச் சரியாயிருக்கும்படி கொண்டுவரவேண்டியது.



## பால்கொடுக்கும் ஸ்திரீ இருக்கவேண்டிய பத்தியம்.

பால்கொடுக்கும் ஸ்திரீகள் ஆரோக்கிய பதார்த்தங்களை நன்றாய்ப்புசிக்கவேண்டியது. அதிக காரவஸ்துக்களையும், சாராயமுதலியலாகிரிவஸ்துக்களையும், நீக்கவேண்டியது. பால்கொடுக்கும் ஸ்திரீகளில் சிலர் எருமை தின்பதுபோல் திண்டிகளை அதிகமாய்த் தின்பர். இவ்வாறு அதிகமாய்த் தின்பதால் பால்கெட்டுப்போய்க் குழந்தைக்கு பேதி, மாந்தம் முதலான வியாதிகள் உண்டாகும். முறிந்துபோனவஸ்துக்கள், கெட்டுப்போனமீன்கள், மொச்சைக்கொட்டை முதலான வாயுபதார்த்தங்களைத் தின்னக்கூடாது. பால்கொடுக்கும் ஸ்திரீகள் நல்லகாற்றிலும், பரிசுத்தமான இடங்களிலும் வசிப்பதால் குழைந்தைக்கு ஆரோக்கியமுண்டாகும். இவ்வாறு









மேற்சொன்னபிரகாரம் நடந்துகொண்டால் பால்கொடுக்கும் தாதிகளினால் உண்டாகும் அநேக சங்கடங்களெல்லாம் தொலைந்துபோம். ஆனால் குழைந்தைக்குஅசீரணம் பேதி,மந்தம்,இவைகளுண்டாய் இளைத்துப்போய்க்கொண்டிருந்தால் தாதியின்பால் குழந்தைக்குச் சரிப்படவில்லையென்று எண்ணவேண்டியது. அன்றிப் பால்கொடுக்கும் கிரமம் தப்பியாவது இருக்குமென்று எண்ணவேண்டியதாயிருக்கும். இம்மாதிரியாய் அசீரணம், உண்டாய் தினந்தோறும் குழந்தைஇளைத்துப்போனால் தாதியைமாற்றிப் பால்கொடுக்க வேறேதாதியை அமர்த்தவேண்டியது. தாதியையேற்படுத்தச் சக்தியில்லாமற்போனால் பால் புகட்டிக் குழந்தையை வளர்க்கவேண்டியது.

## கற்பு.

"தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை."

"கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" ஸ்திரீகளுக்குக் கற்பாவது விவாகம் செய்யுமுன் பிதாவினாலும், விவாகத்தின்பின் கணவனாலும் விதித்தவிதிப்படி ஒழுகலேயாம். மாதர்கள் இளமையில் பிதாவினாலும், யௌவனத்தில் கணவனாலும், மூப்பிலே புத்திரனாலும் காக்கப்படல்வேண்டும்.கணவன் புத்திரன் இல்லாத பெண்ணைக்கணவன் பக்ஷத்தாரே காத்தல்வேண்டும். அவர்கள் இல்லாதபோதுதாய்தந்தையர்கள் காக்கவேண்டும். கணவன், தந்தை, பிள்ளைகள் இவர்களிடம் இருக்கவிரும்பாது தனித்திருக்க இச்சிக்கும்பெண் பிறந்தவீட்டாருக்கும் புகுந்தவீட்டாருக்கும் இகழ்ச்சியை உண்டாக்கிவிடுவாள். பெண்ணுக்குச் சிறு பிராயத்திலேயே கடவுளினது குணங்களையும், அவரைவழிபடுதலுக்கு ஏற்றவழிகளையும், புண்ணியபாவம் சுவர்க்கநரகங்களையும், கற்பிப்பதுமன்றி கணவனுக்குத்தொண்டுசெய்யும் விதியையும் கற்பித்தல்வேண்டும். வீட்டுவேலையிலும்பழக்கவேண்டும். "குலமகட்கழகு தன்கொழுநனைப்பேணுதல்" என்றபடி தருமங்கள்பலவினும், பதிவிரதாதருமமே சிறந்தது.

செய்யவேண்டியதொழில்கள்:—சூரியன்உதிப்பதற்குமுன் எழுந்து கடவுளைத்தியானித்து வீட்டுவேலைகளைமுடித்து, மாமிமாமன்மார்களை வந்தித்து, தேவபூசைசெய்து கணவனினது பணிவிடைகளைச் செயல் வேண்டும். இவ்வாறு செய்தல் அப்பெண்ணுக்குச் செல்வத்தையும், மங்கலத்தையும்கொடுக்கும்.

தினந்தோறும் தன்நாயகன் உண்டபின் தான் உண்ணுதலும், அவன் சயனித்தபின் தான் சயனித்தலும், அவன் நித்திரைவிட்டு எழுந்திருப்பதற்குமுன்தான் எழுந்திருத்தலும் ஆகிய இவைகள் பதிவிரதைக்கு உரிய தொழில்களாம். அன்றிவரவுக்குத்தக்க செலவுசெய்தல், அவன்கட்டளைப்படிநடத்தல்,இன்சொல்கூறல் ஆகியவையும்அவள் செய்கைகளாம்.

பதிவிரதை தன்வீட்டுக்குவரும், துறவி முதலிய பெரியோருக்கு உணவுமுதலிய கொடுத்து சோடசோபசாரங்கள் செய்தல்வேண்டும். முடவர், வியாதிஸ்தர், விருத்தர் முதலியவர்களுக்கு முகமலர்ச்சியோடு அன்னமிட்டு இனியசொற்களைக் கூறி வழிபடவேண்டும். யாரிடத்தும் உரத்தசத்தத்தோடு பேசலாகாது. கணவனினது ஆயுள்பெருக மஞ்சள் அணிதல்வேண்டும். கணவன் பெயரைச்சொல்லல் ஆகாது. அவன் உண்டு மிகுந்ததை அமிர்தமாகஉண்ணல்வேண்டும். அவன்குறிப்பறிந்து




No. 3. சுபமஸ்து. நெ. ௩.

# விவேகசுந்தரம்.

## விநாயகர் துதி.

சச்சிதாநந்தமே தகுமதமூன்றதாய்த்
  தக்கதோரைங்கரஞ் சத்தியஞ்சதாய்
நிச்சிதாஞா தரு ஞானநேயமே
  நீள்விழிக்கொம்பொன்று நீண்டசத்தியாய்க்
குச்சிதாஞ்சிவயீ சாதிநால்வாயதாய்க்
  கூறிச்சையாதியே கும்பத்தலமதாய்
உச்சிதாஞ்செவியதே யோரிருமாயையா
  யோங்கியகணபதி யுள்ளமென்னுள்ளமே.

---

## நீதிவாக்கியங்கள்.

விவேகிகளே !

அடியிற் கூறும் சில நீதி வாக்கியங்களை துரிதமின்றிப் பொறுமையோடு வாசித்து, அதன் உண்மைகளை யறிய விரும்புகின்றோம்.

1. இந்தச்சரீரம் நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளைவணங்கி முத்தியின்பம் பெறும்பொருட்டேயாம்.

2. இன்னகாலத்திலே இந்தச்சரீரம் நீங்கும் என்பது நமக்குவிளங்காமையால், நாம் எக்காலத்திலும் கடவுளை வழிபடல்வேண்டும்.

3. கடவுளையும், அவரை வழிபடும் நெறியையும், அதனால் எய்தும் பயனையும், உனக்குப் போதிக்கும் அருள்வடிவாகிய ஆசாரியர் ஒருவரோ உன் உயிர்த்துணை; ஆதலால், அவரை ஒருகாலமும் மறக்கப்படாது.

4. ஈசுரபத்தியும் நல்லொழுக்கமும் உள்ள பிதா மாதாக்களை உடைமையே பெரும்பாக்கியம்.

5. தீவிரமாயேனும் மந்தமாயேனும், நல்வினை இன்பத்தையும், தீவினை துன்பத்தையும், வருவிக்கும்.

6. நன்மைசெய்தற்குச் சமயம்வாய்க்கும்பொழுது செய்யாதொழிவையாகில், பின் ஒருகாலத்தில் அது வாய்ப்பது அரிது.

7. சோம்பலே தீமைக்கும் துன்பத்துக்கும் பிறப்பிடம்.

8. தங்கள் நயத்தின்பொருட்டு மாத்திரம் அன்றி, பிறர் நயத்தின் பொருட்டும் பிரயாசப்படுகின்றவர்களே உத்தமர்.

9. எவ்வளவு அதிக இரகசியமாகச் செய்யப்படும் நன்மைகளையும், முற்றறிவு உடைய கடவுள் அறிந்து, பயன்அளிப்பார்; பிறர் அறிந்தென்! அறியாதிருந்தென்!.

10. தன்பொருட்டுமாத்திரம் பிரயாசப்படுபவன் அற்ப இன்பத்தைமாத்திரமே அனுபவிப்பான்; அவ்வற்ப இன்பமுமோ மிக இழிந்தது.

(இன்னும் வரும்.)






## நவராத்திரி விரதம்.

வருஷப்பிரதி வருஷம் புரட்டாசி மாசம் பூர்வபக்ஷத்துப் பிரதமை திதிமுதல் நவமிவரையில் ஒன்பது தினங்களை நவராத்திரி யென்றும், இத்தினங்களின் இராத்திரி காலங்களில் பராசத்தியாகிய பரமேசுவரியைக் குறித்து விசேஷஜபதபங்கள், தர்ப்பணங்கள், பூஜைகள், ஆகுதிகள்சந்தர்ப்பனைகள் இவைகளெல்லாம் விதிப்படி நடத்துகிறவர்களுக்குச் சீக்கிரத்தில் இஷ்டசித்திகளும் சகல சாம்ராஜ்யங்களும் அந்த மஹாதேவிகடாக்ஷத்தினால் உண்டாமென்றும், ஸ்ரீவித்தியா உபாசகர்கள் முக்கியமா யிந்தநவராத்திரி தினங்களில் உபாசித்தால் மந்திரசித்தி யடைவாரென்றும், சகல மந்திரங்கள் உபநிஷத்துக்கள், புராணங்கள், தோத்திரங்கள், ஜபங்கள், பாராயணங்கள் இந்தக்காலங்களில் செய்தால் சீக்கிரத்தில் இஷ்டசித்தி யாமென்றும் சாக்தேயதந்திரத்திற் சொல்லுகின்றது.

மேலும் துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி யிம்மூவர்களையும் மும்மூன்றுதினமாக ஒன்பதுதினமும் இராத்திரிகாலங்களிற் பூசிப்பதுவிசேஷமானதால் நவராத்திரியென்றும், இந்தஒன்பதுதினமும் பூசைசெய்யக்கூடாமற்போனால் கடைத்தினமாகிய நவமியன்றைக்கு வித்தியாபீடமாகிய புஸ்தகங்களைவைத்துத் துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி இம்மூவர்களையுங் கற்பவிதிப்படிப் பூசிக்கவேண்டியது.

அப்படிப் பூசிப்பதால் அத்தினத்துக்கு மகாநவமி யென்றும், சரஸ்வதியைப் பூசிப்பதால் சரஸ்வதிபூஜையென்றும், ஆயுதங்களைவைத்துப் பூசிக்கிறதினால் ஆயுதபூசையென்றும் பெயருண்டாயிற்று.

மறுநாள் தசமிதிதிக்கு விஜயதசமியென்றுபெயர். அன்றைக்கு நூதனமாய் வித்தியாரம்பம் பண்ணுவதற்கு அது மிகவும் உத்தமமான காலம்; வாசித்திருக்கிறவர்களும் கிரந்தங்களைப் படிக்கவேண்டும்; என்னென்றால் வித்தியாதாரணையாக இருக்குமென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். அஸ்திர சஸ்திர வித்தை யறிந்தவர்கள் ஆயுதமெடுத்து விளையாடவேண்டியது. இது கர்ணாடசமஸ்தானங்களில் முக்கியமாய் நடந்துவருகிறது.

---

## ஸ்திரீகளுக்கு மிகவும் நல்ல ஆபரணங்கள்.

சாதாரணமாய் ஸ்திரீகள் நல்ல வஸ்திரங்களையும் விலையேறப்பெற்ற ஆபரணங்களையு மணிந்துகொள்வதில் மிக்கப்பிரீதியுடையவர்களாயிருக்கின்றார்கள். பெரும்பாலும் ஏழைஜனங்களின் ஆபரணங்கள் வெள்ளி, பித்தளை முதலியவைகளால் செய்யப்பட்டிருக்கின்றன. விசேஷஐஸ்வரியமுள்ளவர்கள் பொன், வெள்ளி, நவரத்தினங்கள் முதலியவைகளாலியற்றிய ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டிருப்பதைப் பார்க்கலாம். அநேகஸ்திரீகள் படாடோபமாய் வெளியில் பார்ப்பவர்கள் பிரமிக்கத்தக்கபடி அலங்கரித்துக்கொள்ளக்கருதுகிறார்கள். ஆங்கிலேயநாட்டில் இராணியவர்கள் சாதாரணமாயுள்ள ஆடையாபரணங்களையே தரிப்பதாகத் தெரியவருகிறது. அந்தம்மாளுக்கிருக்கும் ஐஸ்வரியத்தைப்போல் மற்றெவர்களிடத்திலுமில்லை. அப்படியிருந்தும் உபயோகமற்ற ஆபரணங்களை யணிந்து சுமப்பதில்லை. முக்கியமாய் அந்த இராணியார் தம்தேசத்தின் குடிகள் சுகப்படவேண்டிய முயற்சிகளே தமக்குரிய ஆடையாபரணங்களாய் நினைத்துவருகின்றார்கள். ஆபரணங்களையணிவதால் கள்ளர்,




பொருமைக்காரர்கள்,துட்டர்கள் முதலானவர்களுடையபயமதிகரிக்கின்
றது.ஆபரணங்களையணிந்திருந்த பலஸ்திரீகளும்,குழந்தைகளும் பிராணச்
சேதங்களடைவதையாம்கண்டும்,கேட்டும்வருகின்றோம்.ஸ்திரீகள்மிகவும்
தங்கள் ஆபரணங்களை இதரர்களிடத்தில்காண்பிக்கஆவல்படுகிறவழக்கம்.
அது பெரியதப்பிதமானகாரியம். புனாவில் ஓர் உயர் குடும்பத்திலிருக்கும்
ஓர் ஸ்திரீயை ஒருவர்கண்டு, அம்மா! உங்கள் ஆபரணங்களெங்கே? அணி
வதில்லையா! என்று கேட்டதற்கு, அந்த உத்தமஸ்திரீ, தன் சமீபமிருந்த
பிள்ளைகளைச்சுட்டி, இதோ இவர்களே என் திரண்ட ஆபரணங்களென்
றார். அற்பபொருளாகிய ஆபரணங்களின்பேரில் பிரியத்தைச் செலுத்தா
மல், தன்பிள்ளைகளை ஒழுக்கமாய் நடத்துகிற காரியத்தில் கருத்தாயிருந்
தார். அவ்வாறு சிலகாலஞ்சென்றதின்பின், அந்தம்மாளால் கல்வியிலும்,
ஒழுக்கத்திலும் தேர்ச்சியடைந்துவந்தபிள்ளைகள் துரைத்தனச்சாலையிலும்
வைதீகத்திலும் உயர்ந்தபதவியிலிருக்கின்றார்கள். இப்பேர்ப்பட்ட பிள்ளை
களைப்பெற்று, வளர்த்து, புத்திசாலிகளாக்கிய குணசாலியான அவர்கள்
தாயை பாக்கியவதியென்று எல்லோரும் போற்றுகிறார்கள். இதற்குத்திரு
ஷ்டாந்தமாகத்தெய்வப்புலமைத்திருவள்ளுவர்கூறியதாவது,"ஈன்றபொழு
திற்பெரிதுவக்குந்தன்மகனைச்சான்றோனெனக்கேட்டதாய்." பூமியிலுள்ள
பல ஆபரணங்களையணிந்து மகிழ்ந்தபோதிலும், அவைகளொருகாலத்தில்
யாதாமொருகெடுதியால் நஷ்டத்தைக்கொடுப்பிக்கும். அவ்வாறுநஷ்டமெ
ன்பதைக் கொடுப்பிக்காதவிலையேறப்பெற்ற ஆடையாபரணங்களையணிவ
தே மிகவும்நன்று. அது எது எனில் பதிவிரதாதருமமொன்றுதான். ஸ்தி
ரீகள் விசேஷ ஆபரணங்களை யலங்கரித்துக்கொள்வதற்குப் பதில் தங்கள்
புருடர், மாமன், மாமி முதலான பந்துக்களிடம் நற்கிரியைகளைச் செலவு
செய்துவந்தாலதுவே தங்களை விலையேறப்பெற்ற ஆடையாபரணங்களால்
அலங்கரித்ததாகும். ஸ்திரீகள் கல்வியைக் கற்றிருந்தபோதிலும் புத்தி,கற்
பு முதலிய சுகுணங்கள் பெற்றிருப்பதே ஸ்திரீதருமத்திற் கழகாகும். இத
ற்கு மூதுரைகூறும் உதாரணமாவது:—கல்லாதமாந்தர்க்குக் கற்றுணர்ந்
தார்சொற்கூற்றம், அல்லாதமாந்தர்க்கறங்கூற்றம்; மெல்லியவாழைக்குத்
தானீன்றகாய்கூற்றங் கூற்றமே, இல்லிற்கிசைந்தொழுகாப்பெண்.

## உலக்கைப் பூஜைசெய்த உண்ணாமுலையம்மாள் கதை.

நீர்வளம் நிலவளம்பொருந்திய மல்லிகார்ச்சுனபுரம் என்றொரு நகர
முண்டு. அந்நகரில் செல்வமிருந்த தருமநந்தனசெட்டியார் என்பவர்
ஒருவர் இருந்தார். அச்செட்டியார் அதிகசிவபக்தர். அவர் தினந்தோறும்
ஒருபண்டாரத்துக்கு அன்னம்கொடுத்துப்பிறகு தான் உண்பது வழக்கம்.
அவருக்கோ மக்களில்லை. கொண்ட மனைவியோவென்றால் நித்தமும்
பண்டாரங்களுக்குச் சோறு ஆக்குவதிலும், கறி சமைப்பதிலும், பரி
மாறுவதிலும், வெகு வருத்தம் உண்டாவதினால் புருஷன் செய்கிறது
அவ்வுத்தமியாகிய உண்ணாமுலையம்மாளுக்குப் பொருந்தவில்லை.

ஆயினும் இதைக்குறித்துப் புருடனுடன் சொன்னால் யாதானும்
தீங்கு உண்டாகும் எனக்கருதி ஓர் உபாயம் எடுத்தாள். அதாவது:—

ஒருநாள் அந்தத் தருமநந்தனசெட்டியார் கடையிலிருந்து அவ்விடத்
தில்வரக்கண்ட பண்டாரத்தை அழைத்து என்வீட்டில் இன்றைக்குப்பிட்
சைபண்ணவேணுமையா! வென்றான். பண்டாரமும் சம்மதித்ததனால் இப்

போது கடையிலே வேலையாயிருக்கின்றேன். நீர் என் வீட்டுக்குப்போய் என்மனைவியைக்கண்டு இந்தச்செய்திசொல்லி நான் வருமளவும் எங்கும் போகாமல் அங்கேதானே தங்கியிருமென்ருன். பண்டாரம் அதுகேட்டுச் சந்தோஷமாய்ப்போய்ச்செட்டி சொன்னதை அவன்மனையாட்டியோடே சொன்னுன். அதற்கவள் இவனொருக்காலும் இங்கே வராதவனுக்கு மென்று கண்டுகொண்டு ஐயா! மெத்த நல்லது; நீரிங்கேதானே யிரு மென்று வீட்டுத்திண்ணைமேலே பாயைக்கொண்டுவந்து விரித்தாள்.

பிறகு உடனே வீட்டுமுற்றத்தை நன்ருய்ப்பெருக்கி எங்கும் சாண த்தைக்கரைத்துத் தெளித்துத் தீற்றிமெழுகித் தன் கால் கைகளையும்சுத்தி செய்து ஆசாரத்தோடே நெல்லுகுத்துகின்ற உலக்கையைக்கையிலெடுத் துக்கொண்டாள். பிறகு அதில் நிறையச் சாம்பலைத்தடவித் தானும் அதைப் பூசிக்கொண்டு நடுவாசலில் உலக்கையைக் கிடத்தி அதற்கு எதிரே மூன்றுமுறை சாஷ்டாங்கமாக விழுந்து வாயைத்திறந்து உரக்கப் பேசாமல் மந்திரஞ் செபிப்பதுபோல மிண மிண வென்ருள். என்றதன் பின்பு உலக்கையைச் சாம்பல் போகும்படித் துடைத்து முன்னே அது இருந்த இடத்திலேதானே வைத்தாள். இதெல்லாம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த பண்டாரம் வெகுவாக ஆச்சரியப்பட்டு இந்நாள்மட்டும் நான் எங்கும் காணுத அதிசயத்தை இப்போது இங்கே கண்டேன். இது என்ன பூசையம்மாவென்று கேட்டான். அதற்கவள் ஐயா! இது எங் கள் குலதெய்வத்தின் விசேஷபூசையாக்கும். இனிமேல் நீரும் நன்ரு யறியப்போகிறீரென்று வீட்டுக்குள் நுழைந்துபோகையில் இது உன் தலை மேலேதான் வந்துவிடியுமென்று அமர்ந்த சத்தமாய்த் தன்னிலேதான் சொல்லிக்கொள்வதுபோலச் சொல்லிக்கொண்டுபோனுள்.

அப்படி மெத்தெனச்சொன்னுலும் அது அவனுக்குக் கேள்வியாக வேண்டுமென்று அவள் விரும்பினபடியே அந்தச்சொல் பண்டாரத்தின் காதிலே விழுந்தது. அப்போது அவன் நான் தெய்வாதீனமாய்த் தப்பிப் பிழைத்தேனென்று எண்ணிக்கொண்டு செட்டிச்சி, வீட்டில் நுழைந்த வுடனேசத்தப்படாமல் எழுந்து இலகுவாய்த்தப்பிப்போய்விட்டான்

அவன் போன உடனே செட்டியார்வந்து நானனுப்பின பண்டாரம் எங்கேஅடி! யென்றுகேட்க, அவளும்நல்லபண்டாரத்தையல்லவோ இந்த விசையனுப்பினீர். அவர் வந்தவுடனே உலக்கையைத் தரச்சொல்லிக் கேட்டார். அதற்கு நானிப்போது செட்டியார் வருவார்; அவர் உத்தர வில்லாமற் கொடுக்கப்படாது; சற்றே இருமென்று இதோ பாயையும் விரித்துப்போட்டேன் பாரும். அவர் கேட்கமாட்டாமல் உடனே கோபி த்துக்கொண்டு போய்விட்டாரென்ருள். அது கேட்டுச் செட்டி அடி! அப்படியல்லவே; பண்டாரங்கள் என்னகேட்டாலும்கொடுக்கிறது எனக் குச் சம்மதிதானே; நீயறியாயா! வென்றுசொல்லி, உலக்கையைக் கையி லெடுத்துக்கொண்டு பண்டாரத்தைத்தேடி அதைக்கொடுக்கும்படித்தெரு விலே போனுன்.

பண்டாரமும் நடக்குங்காரியத்தை முற்றமுடியக் காணும்பொருட்டு ஒரு தெருமுடக்கில் ஒதுங்கியிருந்து, உலக்கையோடே செட்டியார்வரு வதைக்கண்டபோது, இதேது இவன் என் தலைமேலே பூசைமுடிக்கவரு கிருனே! என்றுபயந்து ஓட்டமெடுத்தான். செட்டியாரும் அதுகண்டுபண் டாரமே! பண்டாரமே! யென்று அவனைப் பின்தொடர்ந்தோட, அவன் அதிகவிசையாய் ஓட ஓடக்கடைசியில் செட்டியாருக்கு முதிர்ந்தவயதும்





பெருத்த தொந்தியுமானதினால் இளைப்பெடுத்து ஓடமாட்டாமற் கால் சலித்து, அம்மட்டிலேநின்று வீட்டுக்குத்திரும்பிவிட்டான். பண்டாரமும் கடவுள் கிருபையினாலே பிழைத்தோம் எனக் கடவுளைத் துதித்துத் தன்னிருப்பிடமே போனான். இவ்வளவு சங்கடமும் ஒருபெண்ணினால் நேரிட்டதாதலின் ஸ்திரீகளின் யுக்தி இவ்வளவினதென்று இதைவாசிக்கும் ஒவ்வொருவரும் அறியலாம். இதுவே "உலக்கைப்பூஜை"என்பது.

---

## சூதாடல்.

சூதாவது சொக்கட்டான் சதுரங்கம் முதலியன பந்தயம் வைத்து ஒருவர் பொருளை யொருவர் கவரும்படி பேரவாக்கொண்டு விளையாடுதலாம். பிறர்பொருளை கவருங் கருத்தோடு விளையாடுவது சூதாதலால் அதற்குக் கவறாடல் என்பதும் ஓர் பெயர். வீணரும் வேந்தரும் சூதாடலால் தத்தம் வாழ்நாளை வீழ்நாட்படுத்தி, தத்தமக்குரிய நாடு, நகரம், வீடு, மனை, பொன், பொருள் முதலிய திரவியங்களை யிழந்து கிலேசத்தோடு சித்தப்பிரமைகொண்டு இவ்வுலகத்தில் நடைப்பிணங்களாய் காலங்கழிக்கின்றார்கள். சூதினாலுண்டாகுங் கெடுதியைச் சொல்லப்புகுந்தால் பாரதமாகவல்லவோ முடியும். சூதாடுபவருக்கு அவ்வேளையில் ஓர்வித பயித்தியமும் வைராக்கியமும் உண்டாவது வழக்கம். பிறர் மனைவியர்மேல் பேரவாக்கொள்ளுதலும், பிறர் பொருளைக் கவரும்படி சூதாடுதலும், பிறர் குடிகெடுக்கப் பொய்ச்சாட்சி சொல்லுதலும், பிறருக்குத்தானஞ்செய்யுமொருவனை அங்ஙனஞ் செய்யவொட்டாது தடுத்தலும், கள்ளுண்டு தன்னறிவை மயக்கிப்பிறருக்குத் துன்பம்விளைவித்தலும் ஆகிய ஐந்து பெருங் கொடுஞ் செய்கைகள் மேலோர் நெறியல்லவென்று பற்பல நீதி சாத்திரங்கள் சொல்லுகின்றன.

> காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
> ஈதல் மறுத்தல் இவைகண்டாய்-போதில்
> சினையாமை வைகுந் திருநாடா செம்மை
> நினையாமை பூண்டார் நெறி.

> ஐயநீயாடுதற் கமைந்தசூதுமற்
> றெய்துநல்குரவினுக் கியன்றதூதுவெம்
> பொய்யினுக்கருந்துணை புன்மைக்கீன்றதாய்
> மெய்யினுக்குறுபகை யென்பர்மேலயோர்.

நம்முடைய தேசத்தில் அரசர்களா யிருந்தவர்களில் நளச்சக்கிரவர்த்தி, யுதிட்டிரர், முதலிய அரசர்கள் நாட்டைத்துறந்து காட்டகத்துச்சென்று காய் கனி கிழங்குகளைப் புசித்துக் கேட்டற்குஞ் சகிக்கவொண்ணாத்துன்பங்களைச் சகித்ததும் சூதினாலே யென்று நாள்தோறும் வாசித்துங் கேட்டும் பின்னும் அச்சூதாட்டத்திலேயே மனதைச் செலுத்தும் விவேகிகளுக்கு நாம் என்ன சொல்லப்போகின்றோம். விளக்கைப் பிடித்துக்கொண்டே கிணற்றில் விழும் வீணருக்கு அறிவுறுத்த யார்திறம். அய்யய்யோ "சூதுவிரும்பேல்" "சூதும்வாதும் வேதனைசெய்யும்" என்னும், முன்னோர் சொல்லையும் அனுபவத்தையும் சிந்தியாது கெடுமதி கண்ணுக்குத் தோன்றாதென்பதாய்க் கண்ணிருந்துங் குழியில்விழக் கச்சைக் கட்டிக்கொண்ட கொச்சைமக்களின் கணக்கைக் கணக்கிடக் கணக்குண்டோ?




தூண்டிலிலுள்ள அற்ப இரையை இச்சித்து உயிரை யிழக்கும் மச்சத்தைப்போன்ற சூதாடிகள், தங்கள் காலத்தைப் பற்பல சாத்திரங்களையும் நீதிகளையும் கற்றலினாலும் கேட்டலினாலும் பிறருக்குப் போதித்தலினாலும், பின்வருஞ் சந்ததியார் தம்மை ஸ்மரிக்கும்படி நூல்களைச் செய்தலினாலும் போக்குவார்களானால், எவ்வளவு கீர்த்தியும் புகழும் நன்மையுமாகும். ஆகையால் சூது முதலிய பாவ வினைகளைச்செய்யாது சுகசீவிகளாய் யாவரும் வாழ்வார்களென நம்புகின்றோம்.

---

## படியாப்பெண்கள் பாலர்க்குச்சத்துரு.

கல்லாத ஸ்திரீகளுக்குக் கல்வியின் அருமை தெரியாதபடியால் அவர்கள் பிள்ளைகளின் படிப்புக்கும் விக்கினமாய்இருக்கிறார்கள். படிக்கும்படி, பிள்ளைகளைத் தகப்பன்மார்களும் உபாத்தியாயரும் கண்டிக்கும்போது, அவர்களைத்தாய்மார்கள் கண்டித்துப் படிப்புக்கு விகாதஞ்செய்கின்றார்கள். புருஷனை இழந்த ஒரு ஸ்திரீயினுடைய பிள்ளை கல்வியில் அதிக முயற்சியுள்ளவனாய்த் தர்மபாடசாலைக்குப்போய்ப் படித்துக்கொண்டு வருவான். அவன், வீட்டிலும் பூகோளம், வானசாஸ்திரம், முதலிய புஸ்தகங்களை ஓயாமல் வாசித்துக் கொண்டிருப்பான். அவனைப் படிக்க வேண்டாமென்றும் கூலிவேலை செய்யும்படிக்கும் அவனுடைய தாய் சொல்லியும் அவன் கேட்கவில்லை. ஒரு நாள் அவன்வெளியேபோயிருந்த சமயத்தில் அந்தப் பரமசண்டாளி பிள்ளைமேலிருந்த கோபத்தைப் புத்தகங்களிடத்திற் காட்ட ஆரம்பித்தாள். அவள் பூமிசாஸ்திரத்தைக் கிழித்துப் பூமியின்மேல் எறிந்து விட்டாள். வானசாஸ்திரத்தைக் கிழித்து வானத்திற் பறக்கும்படி எறிந்து விட்டாள். அக்கினி சாஸ்திரத்தைக் கிழித்து அக்கினியிற் போட்டுவிட்டாள். கூட்டல், கழித்தல், பெருக்கல், கொடுத்தல் முதலிய விதிகளடங்கிய கணித சாஸ்திரத்தைக் கிழித்துத் துண்டுகளாக்கி, அவைகளைக்கூட்டிப், பெருக்கிக், கழித்துக்குப்பைக்குக் கொடுத்து விட்டாள். இலக்கணமென்கிற நல்ல பெயரை வைத்துக்கொண்டு விகாரம், வேற்றுமை, விகற்பம், ஐயம், திரிபு, மயக்கம், வழு, அல்வழி, முதலிய அவகுணங்கள் அடங்கிய அந்த நூலைக்கிழித்து, ஒருமையைப் பன்மையாக்கி, நெடிலைக் குறிலாக்கி, வல்லினத்தை மெல்லினமாக்கி, ஆண்பாலைப் பெண்பாலாக்கி, பெண்பாலையும் அலியாக்கி, விகாரப்படுத்தி, வேறுபடுத்தி, அந்த நூலின் குணத்தை அதனிடத்திலேயே காட்டினாள். நியாயசாஸ்திரத்தைக் கிழித்து அநியாயஞ் செய்தாள். தர்க்கத்தைக் கிழித்துக் குதர்க்கஞ் செய்தாள். இவ்வகையாக ஒருநிமிஷத்தில் தன் பிள்ளையின் படிப்பைப் பூரணஞ்செய்து விட்டாள். அந்த ஸ்திரீ படியாமையினால் பிள்ளைக்குச் சத்துருவானாளென்பது பிரசன்னமல்லவா?

---

## விபசாரத்தால்விளையும்தீங்குகள்.

கள்ளப்புணர்ச்சியினால் உண்டாகிற இன்பம் அதிக அற்பமாக இருக்கின்றது. அந்தக்கிஞ்சித்து போகத்தினால் உண்டாகிறஆபத்துகளும், பாவங்களும், பழிகளும் அபாரமாயிருக்கின்றன. ஒருவனை மதங்கொண்ட யானை பின்னே துரத்த, முன்னே புலிவந்துபாய, அவன் ஆபத்துக்குப்பயந்து ஆற்றிலேகுதிக்க, அவ்வாற்றிலே உள்ள பலமுதலைகள் அவனைப்பிடித்து விழுங்க, இப்படிப்பட்ட ஸ்திதியிலிருக்கிறவன் தாகத்துக்கு ஜலத்தை

அள்ளிக்குடித்துச் சந்தோஷித்தால் எப்படியோ ! அப்படியே கள்ளப் புணர்ச்சிசெய்கிறவர்களுடைய நெஞ்சில் ஓயாதபயமும், நடுக்கமும், துன்பமும் குடிகொண்டிருக்குமே. இவ்வளவு அச்சத்தோடு அவர்கள் அடையும் இன்பம், துன்பமேயல்லாமல் வேறல்லவே. இந்த அற்பசுகத்தை விரும்பி மலைபோலப் பாவங்களையும், பழிகளையும், துன்பங்களையும் சம்பாதித்துக் கொள்ளுகிற ஸ்திரீ எவ்வளவு மதிகெட்டவளாக இருக்கவேண்டும்.

ஒருஸ்திரீ பரபுருஷனுக்குப் பெறுகிற பிள்ளைகளை அவள் தன்சொந்தப் புருஷனுடைய ஆஸ்திகளுக்குப் பாத்தியஸ்தர்களாக்குவது எவ்வளவு பெரிய அநியாயம். ஸ்திரீபுருஷர்கள் ஒருவர்க் கொருவர் உதவியாயிருக்கும் பொருட்டும், அவர்கள் பிள்ளைகளைப்பெற்று நன்மார்க்கத்தில் கொண்டுவரும் பொருட்டும், கலியாணத்தைக் கடவுள் நியமித்தருளினர். அந்த விதிக்கு விரோதமாக உலகத்தில் வியபிசார தோஷங்கள் அதிகரிக்குமானால் புருஷனைப் பெண்சாதி மதியாமலும், பெண்சாதியைப் புருஷன்விரும்பாமலும், பிள்ளைகளைத் தாய் தகப்பன்மார்கள் பராமரிக்காமலும், தாய் தந்தைகளைப் பிள்ளைகள் பேணமலும், கிரகஸ்தாச்சிரம தர்மங்கள் சரியாக நடவாமலும், உலகத்திற்குள் பெரிய விபரீதம் உண்டாகுமே. ஆகையால் ஸ்திரீகள் கற்புநிலையைக் கைவிடாது காக்கவேண்டும். இதர யுத்தங்களில் சத்துருவுக்குப்பின்வாங்காமல் எதிர்த்து நிற்பவர்களே ஜெயமடைவார்கள். காமயுத்தத்திலோ வென்றால் எதிர்த்து நில்லாமல் ஓடுகிறவர்களே ஜெயங் கொள்வார்களாகையால், பெண்டுகள் அந்நியபுருஷர்களுடன் பேசாமலும் அவர்களைச் சொப்பனத்திலும் நினையாமலும், காமநூல்களையும், கெட்டகதைகளையும்,படியாமலும்,கேளாமலும் நிர்மலமாயிருக்க வேண்டும்.

உலகத்தில் அந்நியஸ்திரீகளைக் கெடுக்க உபாயஞ் செய்கிற புருஷர்களும் இருக்கின்றார்களாகையால், ஸ்திரீகள் தகுந்த துணை இல்லாமல் ஒருபோதும் தனிமையாயிருக்கத்தக்கவர்களல்ல. புருஷன் வீட்டில் இல்லாதபோது அவர்கள் நற்குணமுள்ள பெண்டுகளைத் துணைதேடி வைத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் பிராணன் போனாலும் கற்புநிலைதவறுகிறதில்லையே என்கிற வைராக்கிய சித்தம் உடையவர்களாகஇருக்கவேண்டும். ஒரு அரசனுடைய கெட்ட எண்ணத்துக்கு ஒரு உத்தமி இணங்காமல் நிராகரித்த பொழுது, அவன் வாளை உருவிக்கொண்டு "என்னைநீ சேராதிருப்பாயானால் உன்னைவெட்டிக்கொல்வேன்" என்று கோபத்தோடு மொழிய, அதைக்கேட்ட பதிவிரதை அந்த அரசனைநோக்கி, "நரபதி நீயானலு நண்பரின்பாதத்துகட்குன் சிரமகுட நிகராமோ! சேர்கிலையேற் கொல்வனெனக், கரவாளையுருவி நின்றாய் கற்பினுக்கோர் குறைவின்றித் தரமா நீஎன்னைக்கொல்விற்றந்தைதாய் குரு நீயே." ஓ! துஷ்டா! நீ அரசனானலும் எனதுபர்த்தாவினுடைய திருப்பாதத்திலே ஒட்டிய தூசிக்கு உன்னுடைய தலையிலிருக்கிற கிரீடமும் சமானமாகுமா? உன்னைச்சேராவிட்டாற் கொல்வேனென்று கைவாளை உருவி நின்றாய். என்னுடைய கற்புக்குமட்டும் பங்கமின்றி என்னை நீ கொன்று விடுவாயானால் எனக்குத் தாயுந் தந்தையும் குருவும் நீயே என்று பிரத்தியுத்தரங் கூறினாள். மானத்திற்கு முன் பிராணனைத் திரணமாக எண்ணிக் கற்பைக் காப்பாற்றின அந்த உத்தமியை மற்றஸ்திரீகள் குருபீடமாகக் கொள்ளல் வேண்டும். அந்நியபுருஷனைச்சேருகிற ஸ்திரீக்கும் அந்த அந்நிய புருஷனுக்கும் தோஷம் துல்லியமாயிருந்தாலும் ஸ்திரீக்கு அந்நியபுருஷனால்






கர்ப்பந்தரிப்பது முதலான தர்மசங்கடங்கள் சம்பவிக்க இடமிருப்பதால் அவளுடைய குற்றத்தை உலகத்தார் பெரிதாக எண்ணுகிருர்கள். சிலதருணங்களில் நிர்த்தோஷமான ஸ்திரீகளுக்கும்தோஷம்கற்பித்து அவர்கள் வியபிசாரிகளென்று அபாண்டமான பொய்யைக்கட்டி விடுகிற உலகமானது வாஸ்தவத்தில் கெட்டுப் போனவளுடைய செய்கையை வெளிப்படுத்தாமலிருக்குமா? திரங்கள் கலவாத ஸ்திரீகளையும் கலந்ததுபோலப் பெருமையாகப் பொய் பேசுகிற புருஷர்களும் உலகத்திலிருக்கிருர்களே. இப்படிப்பட்ட புருஷர்கள் தாங்கள் வாஸ்தவமாகச் சேர்ந்த பெண்களுடைய பழியை ஊரெங்கும் பறைசாற்ருமல் விடுவார்களா? ஆகையால் அந்நிய புருஷர்களுடைய காற்றும் தங்கள்மேல் வீசாமல் ஸ்திரீகள் சுத்த மனேநிர்மலமாக இருக்கவேண்டும் என்பதே எங்கள் முழுகோரிக்கை.

---

## வீட்டுக்கடுத்த விஷயங்கள்.

ஒரு திரியை நல்ல காடியில் நனைத்து, நன்ருகக் காயவைத்துப்பிறகு விளக்கில் உபயோகித்தால், புகை உண்டாகா. திரி வெகு பிரகாசமாயும் நேர்த்தியாயும் எரியும்.

---

வீடுகளில் செய்யும் எந்த வேலையையும் நாம் சுத்தமும் சுசியுமாய்ச் செய்ய வேண்டியது. எந்த அற்பவேலையையும்கூட அசுசியாய்ச்செய்வது நல்லதல்ல. "சுத்தம் சோறுபோடும்" என்பதுபோல, நாம் எதையும் சுத்தமாய்ச் செய்தால், நமக்குள்ளேயே ஓர்வித திருப்தியுண்டாகிறது. அது ஜனங்களின் நல்விருப்புக்கும், அவர்கள் சீர்திருத்த முள்ளவர்கள் என்று காட்டுவதற்கும் ஒருவிசேஷித்த அடையாளமாகவே இருக்கிறது.

அசுத்தம் அருவருக்கப்படத் தக்கதாயிருக்கிறது. அதைப் பிள்ளைகள் பொறுக்கக் கூடாமல், வெடுவெடுப்பும் மூர்க்ககுணமும் உள்ளவர்களாகிருர்கள். அழகிற் சிறந்திருக்கும் ஒரு ஸ்திரி இந்த அசுத்தத்தால் அகற்றப்பட வேண்டியவளாகிருள். அதனல் புருஷரும் தாழ்த்தப்பட்டு யோசனையற்றவர்களாகின்ருர்கள்.

---

நோயாளிகளுக்குக் கொடுக்கும் ஆகாரத்தை அவர்களின் நாவிற்கு இனிதான விதமாய்ச்செய்து, அவர்களோடு அதிக அன்பான வார்த்தைகளைப்பேசி அதை உட்செலுத்த வேண்டும்.

---

தேள் கொட்டின இடத்தில் கொஞ்சம் வெள்ளைப்பூண்டை அரைத்துக் கட்டினல், வலி உடனே நீங்கும்.

---

## சுகாதார முறைமைகள்.

நல்ல நித்திரைக் கடுத்தவைகள்:—ஒருசுத்தமான நல்லபடுக்கையும், களைப்பு உண்டாக்கக்கூடிய போதுமான தேகபயிற்சியும், இன்பந்தரும் வேலையும், நல்ல ஆகாயமும், அதிக காங்கையாயிராத அறையும், சுத்த மனச்சாட்சியும், மயக்கம் முதலியவைகளை உண்டாக்கத்தக்கவஸ்துக்களை உபயோகிக்கா திருத்தலும் தான். அதிக வேலைசெய்கிறவர்களும், கண் குழிந்தவர்களும், இராத்திரியில் தூக்கமில்லாதவர்களும் மேற்கூறியகாரியங்களைக் கவனிப்பார்களாகில், நன்ருய் நித்திரைசெய்யலாம்; இல்லாவிட்டால், அவர்களின் ஆயுசு மிகவும் குறைந்ததாகவே இருக்கும்.




ஒருவன் தனது அறையில் சுகமாய் வசிக்க விரும்பினுல், அவன் அந்த அறையின் மூலமாய் 1200 - கன அடிக்குக் குறையாததும் 2000 கனஅடிக்குமேற்படாததுமான ஆகாயம் ஊடுருவிச்செல்லுகிறதா! என்று கவனிக்கவேண்டியது. இன்னெருவன்கூட அந்த அறையில் இருப்பானுகில், ஆகாயம் கெட்டுப்போவதுமன்றி ஒன்றுக்கும் உதவாததுமாகி விடுகிறது. அது அசௌக்கியமும் அசுசியுமுள்ள ஆகாயமாய் மாறிப் போகிறது. ஒருவன் இன்னெருவன் தனது மூச்சால் வெளியே எறிந்து விடும் கெட்ட ஆகாயத்தைத் திரும்ப சுவாசிக்கிருன்; அது அருவருக்கப் படத்தக்க கெடுதியான ஆகாயம். ஒருசிறு அறையில் அநேகர்கூடியிருந்தால், சிலருக்குத் தலைவலியும், சிலருக்கு உடம்புவலியும், எல்லாருக்குமே ஒருவிதமூச்சு தடுமாற்றமும் உண்டாவதையும் நாம் அனுபோகத்தில் கண்டிருக்கலாம்.

---

## வியாதி மூலங்கள்.

உலகத்தில் பொதுவாக எல்லாச் சீவராசிகளுக்கும் சரீரசௌக்கியத்துக்கு மேற்பட்ட சுகம் வேறென்றுமில்லை. முக்கியமாக மானிட ஜாதிக்கு சரீரசௌக்கியத்தோடுங் கூடியிருந்தால்தான் ஐம்பொறிகளாலும் அறிந்து அநுபவிக்கத்தக்க இம்மை (இல்வுலக) இன்பங்களை மனேரம்மியமாக அநுபவித்துச் சுகமடையவும், மறுமைக்கு வேண்டிய சத்காரியங்களை நடத்திக்கொள்ளவுமுடியும். சரீரசௌக்கியம் தப்பினுல், போகமும்சித்தியாகாது. யோகமும் சித்தியாகாது. இப்படி இகபரப்பிரயோஜனங்களை அடைதற்கு இன்றியமையாததாயிருக்கும் சரீர சௌக்கியத்தை நாம் எவ்விதத்திலுங் காப்பாற்றவேண்டியது ஆவசியமாகிறது.

வியாதிகள் வந்தால் சரீரசௌக்கியங்குறையும். குறையவே, உலக போகங்களை இஷ்டப்படி யநுபவித்துச் சுகமடைய முடியாது. அப்படியே பரத்துக்கு வேண்டிய சற்சாதனங்களும் கைகூடாது. அன்றியும், சரீர சௌக்கியங் குறையக் குறைய ஆயுசும் குறைந்துகொண்டே வரும் என்பது நிச்சயம். ஆதலால், எல்லாவிதங்களாலும் வியாதிகளை விலக்க வேண்டியதே நம்முடைய கடமையாய்முடிகிறது. வியாதியைவரவழைத்துக்கொண்டு பிற்பாடு அதற்குச்சிகிச்சைதேடுவது விவேகமாகாது. வியாதிகள் அணுகாமல் தடுத்தல்தான் விவேகம். இந்த உண்மையை வெளிப்படுத்தவே, "நோய்க்கிடங்கோடேல்" என்று தருமத்தை விளக்க அவதரித்தவராகிய ஔவையார், யாவருமறியத்தக்க சுலுவான பாஷையில் நமக்குப் போதித்திருக்கிருர். அந்தவாக்கியத்துக்குச் சில தெரியாத ஜனங்கள், நோய்வந்தபின்பு அதற்குப்படுத்து இடங்கொடாமல் உலாவித்திரிய வேண்டுமென்று அனர்த்தம்செய்து, அற்பவியாதியைப் பெரிய வியாதியாக்கிப் பலப்படுத்திக்கொள்ளுகிருர்கள். இதுமகா பிசகானகாரியம். நோய்வந்தகாலத்தில், காற்றுபலமாய் வீசாத விடத்தில், தனக்கு எப்படியிருந்தால் தேகத்துக்குச் சுகமாயிருக்குமோ, அப்படி, படுத்தோ, அல்லது உட்கார்ந்தோ, சௌகரியம்போலிருத்தலே வியாதிபலப்படாமலிருத்தற்குத்தக்க வுபாயமாகும். மேலே சொன்ன ஔவையாரது வாக்கியத்துக்கு, நோய்வருவதற்கு இடங்கொடாமல் தடுக்க வேண்டும் என்பதே சரியான தாற்பரியம்.

இனி வியாதிகள் வராமல் தடுக்கவேண்டுமானுல், வியாதிகளின் மூலம், அதாவது காரணங்களையறிந்தாலொழிய வியாதிகளைத்தடுக்க முடி

யாது. மிருகபக்ஷிகளுக்குக் காலபேதங்களால் வரும் அதிசீதோஷ்ணங்களின் கடூரங்களைவிலக்கிக்கொள்ளும் கருவிகள் இயற்கையிலேயே யமைக்கப்பட்டிருப்பது மல்லாமல், தேகசௌக்கியத்துக்கான இடங்களையும், காலத்தையும், உணவையுந் தேடிக்கொள்ள ஓர்வித வுணர்ச்சியும் அவைகளுக்கு ஜன்மத்திலேயே யமைக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால்தான் மிருகபக்ஷிக்குப் பெரும்பாலும் வியாதிகள் அடையாமல் சௌக்கியமாகவே காலங்கழிக்கின்றன. மனிதருக்கோ வெனில், மிருதுவான சரீரத்தைக்கொடுத்து, அதில் பகுப்பறிவு ஒன்றும்வைக்கப்பட்டிருக்கிறது. அந்தப்பகுப்பறிவைக்கொண்டு நாம் சுகந்தேடிக்கொள்ள வேண்டுமென்பது இயற்கைத்தருமத்தின் நோக்கம். இதுபற்றியின்னும் வருகின்ற சஞ்சிகைகளில் எழுதிவருவோம்.

---

## பெண்களுக்குக்கல்வி.

### முதலாவது அத்தியாயம் ஆக்ஷேபசமாதானம்.

விவேகிகளே!

இப்பெண்கல்வியைப்பற்றி முன்னர் இரண்டு புத்தகங்களினும் எழுதினும், அடியிற் கூறிவரும் விஷயங்கள் மிகநன்றாய் இருத்தலின் அதைப்பிரசுரியாமல் விடுவது தக்கதன்று என்பதைக் குறித்தே வெளியிட்டோம்.

1. அன்னத்தினால் பசியும், பானத்தினால் தாகமும், நித்திரையினால் அலுப்பும், தீருமென்பதை அனைவரும் ஒப்புக்கொள்வோம். உண்டு குடித்துறங்குவதால் பசியும், தாகமும் சிரமமும் வளருமென்றால், ஒருவரும் ஒப்போமல்லவா? ஓர்காரணத்தினின்றும், ஒன்றுக்கொன்று நேர் விரோதமான இரண்டுகாரியங்கள் விளையுமெனில், அதைநம்புவது வெகு கடினமாயிருக்கும். ஆயினும் இது புதுமையல்ல. நம்முடைய சுகதுக்கங்களுக்குரிய காரணங்கள் பலவுளவெனினும், நன்றாய் ஆராய்ந்துபார்க்கும்பொழுது, அவற்றில் பெண்களே தலைக்காரணமாய் விளங்கும். அன்னையாய்ப் பெற்றெடுத்து, அன்புடன் வளர்த்துக்காத்துப், பெண்டிராயின்பந்தந்து, பெட்டியாய்ப் பொருளைச் சேர்த்து, அடியாளாயுபசரித்து, அறுசுவையன்னமிட்டு, மந்திரியாய்ப் புத்திசொல்லி, மஹிமையை ஓங்கச்செய்து, தோழியாய்த் தொல்லைதீர்த்துத், துணைவியாயுயிரைக்காத்து, மக்களாய் மனமகிழ்த்தி, மனிதருக்குதவி செய்யும் பெண்களே பேதப்பட்டால், பெருமையைக்கொன்று விட்டுக் குடிகளைக் கெடுத்து விட்டுக், கொலைபாதகம் விளைத்து, நண்பரைப்பகைவராக்கி, நல்லறமெல்லாங்கொன்று, பொருளெலாம் பறக்கச்செய்து, பெண்மையைவிலைக்கு விற்று, உடல்தனைப்பிணுவாயாக்கி, உண்டியை விஷமாய்ச் செய்து, அறம்பொருளின்பமென்னும், அனைத்தையும் வெறுக்கச்செய்வாள், என்னுமிவ்வுண்மைதனையறியாரும் உலகிலுண்டோ? மனிதர்வாழ்க்கைக்குப் பொன்னும் பெண்ணே. அவர்மனதுக்குப் புண்ணும்பெண்ணே. ஆகாயத்தையளாவிய விருக்ஷத்தையும், அதன் இலை பூ கனி முதலியவைகளைத்தையும், கடவுளானவர் ஒரு சிறிய விதையில் அமைத்தாற்போல், இக்கருத்துகளையெல்லாம் வெகுமாட்சிமை தங்கிய திருவள்ளுவநாயனார் இரண்டு குறளிலடக்கி :

1 "மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை"

2 "மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித்தாயினுமில்"

என்று அருளிச்செய்தனர். இதன்கருத்தென்ன வெனில், இல்லறத்துக்கு இசைந்த நற்குண நற்செய்கைகளையறிந்து நாடி, தன்கணவனது வரவுசெலவுகளை நன்குய்ச்சீர்தூக்கி நடத்தவல்ல மனைவியேவாழ்க்கைக்குத்துணையாவாளென்பதும், அளவற்றபொருளும், பேரும்,பிரதிஷ்டையும் பெற்றிருந்தும், மேற்கண்டதன்மையுடைய மனைவிமாத்திரமில்லாவிடின், ஒருவன், சுகமும், சிறப்பும், புகழுமற்றவனுவா னென்பதுமேயாம். இக்குறளின் கருத்தைத்தீர விசாரிக்குங்கால், பொருளைச்சம்பாதிப்பதொன்றுமாத்திரம்கணவனுக்குத்தொழிலென்றும்;அதைச்சம்பாதித்தபிறகுமுறையறிந்து செலவுசெய்தலும், தகையறிந்து விருத்திசெய்தலும் இன்னுமுள்ள பல தொழில்களும் மனைவியைப் பொறுத்த தென்றும், இவ்வாறு உலகவாழ்க்கைக்குரிய தொழில்களெல்லாம் ஆண்பெண்களுக்குப் பகுத்தளிக்கப்பட்டிருக்கிற தென்றும், ஆண்தொழில்கள் கடினமுள்ளவையாயினும், பெண்தொழில்கள் அவற்றிலும் கடினமானவையென்றும், விளங்கும். தகுந்தகாலத்தையும், கருவியையுங் கொண்டு பொருள் படைத்தலொன்றுக்கே, இயற்கைச் செயற்கையறிவுகள் இன்றியமையாக்கருவியெனக்கருதி, அவ்வறிவு நிமித்தம் நமது பொருளில் பெரும்பாகத்தைச்செலவழிப்போமாயின்,இல்லறமின்ன தென்றும்; அதில் ஆத்மவிஷயத்திலும், கணவன், மக்கள், நண்பர், சுற்றத்தார், உலகத்தார், கடவுள்முதலானவர்கள் விஷயத்திலும், தனக்குரிய அறன்களும் கடமைகளும் இப்படிப்பட்டவையென்றும்;அதற்கியைந்தபடி செலவழித்துப் பொருள்காக்கும்வழி இத்தன்மைய தென்றும்; இப்பொழுது சுகத்தையும், புகழையும், இனிநித்திய பதவியையும், ஆநந்தத்தையும் அளிக்கத்தக்க நல்லொழுக்கமின்ன தென்றும், தேர்ந்தறிந்தும், தானும் சுகமடைந்து, தன்னையண்டிய கணவன், மக்கள், முதலியவர்களுக்கும், சுகத்தைவிளைக்கப் பெண்களுக்குக் கல்வியே வேண்டியதில்லை என்பது யுக்திக்காவது, பிரமாணத்துக்காவது, அடுத்திருக்குமா? வென்பதைச் சற்று விசாரிப்போம்.

பெண்களைக் கற்பிப்பதனுலடையத் தக்க ஒப்பற்றபயன்களிற் சிறிதை இச்சுந்தரத்துக்கு இயைந்தவளாயில் விரித்துரைப்பதற்குமுன், இவ்விஷயத்தில் நம்மவரில் சிலர் செய்யும் ஆக்ஷேபங்களை எழுதி அவற்றிற்குச் சமாதானங்களைச் சொல்வோம். வெகுகாலந் தொட்டுவந்த பழக்கத்தின் வாசனையைக்கைவிடமாட்டாத சிலர், முதலில் பெண்களைக் கற்பித்தல் சம்பிரதாய விரோதமென்றும்; இரண்டாவது, அது அனுவசியகமென்றும்; மூன்ருவது, அது சாஸ்திர விரோத மென்றும்; நான்காவது, அதனுல் பெண்களின் ஒழுக்கம் கோணிப்போமென்றும்; இன்னும் பலபழுதான ஆக்ஷேபங்களைச் செய்வார்களென்பதை எல்லோருமறிவோம். இனியவற்றிற்கு முறையே எங்கள் சக்திக்கியைந்தவளாயில் சமாதான முரைப்போம். (இன்னும்வரும்.)

---

## பிள்ளைகளைப் பெற்றோர்களுக்கு ஓர்விண்ணப்பம்.

பிள்ளைகளைப்பெற்ற பாக்கியவான்களே? தாங்கள் ஒவ்வொருவரும் புண்ணியவசத்தில் தத்தமக்கு இகபரசௌக்கியங்களைப் பெற்றுக்கொள்






வதற்கு ஹேதுவாகிய புத்திரர்களை அடையப்பெற்றது சென்மாந்திர புண்ணியவசமே.

அப்படிக்காகிய புத்திரர்களை யௌவனப்பருவம்வரையில் "குப்பைப் பயிரைக் கூரையி லேற்றுவதுபோல" உயிர்க்கு ஊன்றுகோலாகிய கல்வியை நன்குபயிலச்செய்வித்து, அக்கல்விக்கேற்ற நல்லொழுக்கங்களிலும் நடைபெறும்படிக்குச் செய்விக்கவேண்டியதானது பெற்றோர்களின் கடமையதாகும்.

இந்த அஸ்திவாரக்கல்வியைக் கைவிட்டுச் சிலர்கள் தத்தம்பிள்ளைகளுக்குக் கல்வியின் அறிவையூட்டாது, பாலையும் பழத்தையும்ஊட்டி, ஆபரணாதிகளைப்பூட்டிப் புஷ்பமாலையைச்சூட்டிப் பற்பல வேடிக்கைவினோதங்களைக்காட்டி, காமவலைக்குள்மாட்டி, அழகிய வடிவத்தைவாட்டிப் புத்திரர்களையும் தங்களையும் நரக கதிக்கு ஆளாக்குகின்றார்கள்.

அதுமட்டோ? புத்திரர்களுக்கு ஆதாரமென்று தேடிவைத்த செல்வத்தையும் தமது துன்மார்க்கச்செய்கையால் போக்கிக் கையினில் ஒட்டைத்தூக்கி, கோவணம் ஒன்றுதான் பாக்கியமென்று திரியும்படி செய்விக்கிறார்கள்.

இவ்விதம் செய்வித்தல் புத்திமான்களின் தன்மையல்ல. பின்னர் யாதுசெய்வித்தல் வேண்டுமென்றால், "தந்தைமகற் காற்று நன்றி யவையத்து, முந்தியிருப்பச்செயல்" என்னும் திருக்குறள் வாக்கியப்படி தம் புத்திரர்களை ஒவ்வொரு கல்விச்சங்கத்திலும் நாயகமணியாக அங்கீகரிக்கும்படியாயுள்ள கல்வி, அறிவு, நல்லொழுக்க முதலிய சற்குணங்களை உடையர்களாக்குவிக்கவேண்டும்.

அங்ஙனம் செய்விக்கும் பிதாவே பிதா. மற்றவர்களெல்லாம் விர்தா. ஆதலால் புத்திமான்களே! "கல்வியினூ உங்கில்லைச் சிற்றுயிர்க்குற்ற துணை", "ஒழுக்கமுயர்குலத்து நன்று" எனும் ஆபத் வாக்கியங்களைக் கொண்டு தங்கள் தங்கள் புத்திரர்களுக்கு நிரம்பிய கல்வியையும் நல்லொழுக்கத்தையும் பரவச்செய்வீர்களென்று கேட்டுக்கொள்ளுகின்றோம்.

---

## வைத்தியவினோதம்.

### பல்நோய்.

சீதளத்தினால் ஈறு கட்டிக்கொண்டு பற்கள்நோய் எடுத்து பலர் பாதைப்படுகிறதுண்டு. இதற்குக் காட்டாமணக்குத்தான்சிறந்த அவுடதம். காட்டாமணக்குக் கொம்பைச்சாண்சாணாகத்தறித்துக்கொண்டு அடுப்புத்தணலில் ஒரு நுனியைச் சொருகிச் சுட்டு ஒவ்வொன்றாய் எடுத்து நோயுள்ளபற்களின்மீது படும்படி மற்றொரு நுனியைப் பிடித்துக்கொண்டு வைத்துச் சூடுபொறுக்கக்கடித்தால் நோய்க்கு இதவாயிருப்பதூந்தவிர சீதளத்தைப் பரிகரித்துப் பல்நோயைப் போக்கிவிடும்.

### சிரங்கு.

1. நீரடிவித்து பாலில் அரைத்துச் சிரங்களுக்குப்போடவும். விடாமல் இரண்டுமூன்றுநாள் போட்டால் சிரங்கு போய்விடும்.

2. ஆமணக் கெண்ணெயும் முட்டைச்சாம்பலும் மயில்துத்தத்தூளும் கூட்டிக்குழைத்துப் போடுவதும் இந்நாட்டிச் சிறந்த மருந்து.




"கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத்தக."

உ

NO. 4. கடவுள் துணை. நெ. ச.

# விவேகசுந்தரம்.

### விநாயகர் துதி.

சீர்பூத்த மறைமுதற்கட் பிரணவத்தி
னரும்பொருளைச் சிவனார் தந்த
பேர்பூத்த நிருமலசின் மயவடிவை
யானந்தப் பெருக்கை யென்றுங்
கார்பூத்த திருநெடுமா லயன்முதற்புங்
கவர்வணங்குங் கருணை வாழ்வைப்
பார்பூத்தவடியர்வினை கெடுத்தருளுங்
கற்பகத்தைப் பணிந்து வாழ்வாம்.

## "முயற்சி திருவினையாக்கும்."

நாம் கருதிய எந்தக்காரியமும் கைகூடிவருவது அருமையன்று. நாம் செய்ய வாரம்பித்த காரியம் முடியவேண்டுமானால், அதை உறுதியாய்க் கைப்பிடித்துச் சற்றும் சோர்வடையாது செய்துவரவேண்டும். இவ்வாறு உறுதியாய்ச் செய்பவர்களுக்கு, தாங்களெடுத்த கருமம் எவ்வளவுதான் அசாத்தியமாயிருந்தாலும், அது முடிவில் சாத்தியமாகும். ஆனால் முயற்சிகுன்றினாலோவெனில், சாத்தியமானதும் அசாத்தியமாகும். மனிதர்கள் அத்தியாச்சரியமான காரியங்களைச்செய்து மென்மேலுங் கீர்த்தி பெறுவதெல்லாம்முயற்சியினாலேயன்றிவேறெவற்றாலுமன்று. "முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்பது திண்ணம். முயற்சியானது மனோமுயற்சி,தேகமுயற்சி என இருவகைப்படும்.தேகம் சவுக்கியமாயிருந்தாலன்றி மனோமுயற்சி செய்வது கூடாது. இவ்விருவகை முயற்சியும் குறைவறச் செய்யப்படுமேயாயின், எடுத்த கருமங்கள் ஒன்றேனும் பழுதுபடாமல் எல்லாவற்றையும் நமது மனோரதத்தின்படியே இனிது முடித்துக் கொள்ளலாம். இப்படிச் செய்துகொள்வதினால் நமக்குண்டாகும் நன்மைக்கு அளவிராது. நெற்றித்தண்ணீர் நிலத்தில்விழும்படிச் சரீரப்பிரயாசைப்பட்டு, எப்பொழுதும் காரியத்தின்மேல் கருத்தாயிருப்பவர்களுக்கே எந்தவிஷயத்திலும் சுகமுண்டு. யார்க்கும் தாங்கள் சிரமப்பட்டுச் சம்பாதித்ததைக்கொண்டு, உண்டு வாழ்வது இன்பமா யிருக்குமேயன்றி, பிறர் கையைப் பார்ப்பதன்று. தாங்கள் கஷ்டப்பட்டுத் தேடியது சிறிதெனினும், அதைக்கொண்டு நீருஞ் சோறு முண்டாலும் அதுவே இன்பமாகத் தோன்றுமேயல்லாது, பிறர்தேட்டத்தி னுண்ணுங் கருணைச்சோறன்று.

"பெருமுத்தரையர் பெரிதுவந்தீயும்
கருணைச்சோறார்வர் கயவர்-கருணையைப்
பேருமறியார்நனிவிரும்புந்தாளாண்மை
நீரினும் அமிழ்தாய்விடும்.

நன்மைபயக்கத்தக்க காரியங்களை யாரும் முயன்று செய்யவேண்டும். அவை கைகூடாவிட்டாலும் இடைசோராது செய்வதே பெரியோர்க்கு அழகு.

"உறுதிபயப்ப கடைபோகாவேனும்
இறுவரை காறுமுயல்ப - இறுமுயிர்க்கும்
ஆயுண்மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவு முண்டு சில."

முயற்சிசெய்தால் அதுவீண்போகாது. "தெய்வத்தானாகாதெனினும் முயற்சிதன், மெய்வருத்தக் கூலிதரும்." எனத் திருவள்ளுவரும் திருவாய்மலர்ந்தருளி இருக்கின்றனர். ஆதலின் ஒவ்வொருவரும் முயற்சியுடையவர்களாகவே இருத்தல் வேண்டும்.

## நீதிவாக்கியங்கள்.

(முன் 15-ம் பக்கத்தொடர்ச்சி.)

11. அறிவும் அதனால் ஆகிய நற்குண நற்செய்கைகளும் உள்ள சான்றோர்களாலே நன்கு மதிக்கப்படுதற்கு யோக்கியனாய் இரு.

12. நீ பிறர்க்குச் செய்த உபகாரங்களை நீயே எடுத்துப் புகழ்தல் தக்கதன்று.

13. அடக்கம் உடைமை பாலியர்களுக்குச் சிறந்த ஆபரணம்.

14. நாம் செல்வத்தையும், உபசரிக்கப்படுதலையும், நம்முடைய பிரீதிக்கு மாறாக இழத்தல்கூடும்; நல்லொழுக்கத்தையோ! அப்படி இழத்தல் கூடாது.

15. சுசியுடைமை சரீரத்துக்கு ஆரோக்கியத்தையும், மனசுக்கு இதத்தையும், வளர்விக்கும்.

16. நீ பிறர்க்கு ஒன்றை வாக்குத்தத்தம் செய்யுமுன், அது உன்னால் இயலுமோ? இயலாதோ? என ஆராய்ந்துகொள்.

17. இளமையிலே ஒருவன் பழகிய பழக்கம் நன்றேயாயினும், தீதேயாயினும், அதுவே பெரும்பான்மையும் மரணபரியந்தம் அவனைத் தொடரும்.

18. நமக்கு நல்லொழுக்கமும், புகழும், இன்பமும், வருதல் தவிர்தல்கள், முறையே பெரும்பான்மையும், நமது நற்சார்பு தீச்சார்புகளால் ஆகும்.

19. நாம் இரகசியமாகக் குற்றம் செய்யும்போது, பிறர் நம்மைக் கண்டியாவண்ணம் தப்பிக்கொள்வோமாயினும், நம்முடையமனம் நம்மைக் கண்டியாவண்ணம் தப்பிக்கொள்ளமாட்டோமே.

20. நாம் சிறு துன்பங்களைச் சகிக்கப் பயிலல்வேண்டும்; பயில்வோமாகில், மேலே பெருந்துன்பங்களையும் சகிக்க வல்லர் ஆவோம்.

(இன்னும்வரும்).

## விபரீதப் பிரார்த்தனையால் நேரும் கஷ்டநஷ்டங்கள்.

இந்துக்கள், தங்களுக்கு வியாதிவருங்காலத்து, கடவுளைப் பிரார்த்திக் கொள்வது வழக்கம். இது நல்லதுதான். மற்ற வேளையில் சுவாமியை நினையாவிடினும், வியாதியுண்டாகும் சமயத்திலாவது நினைக்க இடமுண்டாகின்றது. ஆனால் இப்பிரார்த்தனை, காலத்துக்குத் தக்கவாறு அதாவது, தமது இருப்புக்கும் சரீரபலத்துக்கும் தக்கபடி செய்துகொள்ள வேண்டும். பெருந்தொகை செலவழிக்கத்தக்க பிரார்த்தனை செய்தால், நாளை அதைமுடிக்கும்போது, கையில்பணமில்லாவிடில் கடன்பட்டாவது

செய்யவேண்டும். "கடன்பட்டகந்தன்" பட்டபாடும் கெட்டகேடும் அறிந்தும்,மறுபடியும் கடன்படலாமா! நூறு இருநூறு செலவழிக்கத்தக்க மாரியாத்தாள் குடமெடுக்கப் பிரார்த்தனைசெய்து, பின்புஏழையானால்,என்ன செய்கிறது? திருப்பதி,ஈ்ாகூர்மீராசாயபு கோவில்முதலிய இடங்களுக்குக் குடும்பத்தோடுபோய் மயிர் கொடுக்கிறோமென்று பிரார்த்தனை செய்து கொள்ளுபவர்கள், பிறகு அன்றாடம் ஜீவனம்செய்வதைவிட்டுப் போவதற்கு எவ்வளவோ கஷ்டநஷ்டங்கள் படுகின்றார்கள். பெரியபாளையம் அம்மனுக்கு வேப்பம்சிலைதருவதாய்க் குழந்தைப்பருவத்தில் பிரார்த்தனை செய்யக் காண்கின்றோம். அப்பிள்ளை பெரியவயதாகி, பி. எ. பரீக்ஷையில் தேர்ந்தபின்பு வேப்பஞ்சிலையுடுக்கச் சம்மதப்படுமோ? இப்படிப்பட்ட நாகரீகமில்லாப் பிரார்த்தனைசெய்வது சரியல்லவே! மாசம் 5-10-சம்பாதிப்பவர்கள் திருவள்ளூருக்கு 10-அமாவாசை,திருப்போரூர்க்கு 10-கிருத்திகை,திருத்தணிகைக்கு 10-கிருத்திகைபோவதாய்ப்பிரார்த்தனைசெய்து, பிறகு கையில் காசில்லாமல் கடன்பட்டு அப்பிரார்த்தனைகளை முடிக்கின்றார்கள். அடிக்கடி வேலையைவிட்டுப் போவதில் ஜீவனத்திற்கே பங்கமுண்டாகின்றது. சிலவூர்களில் பெண்டுகள், தங்களுக்குப் பிள்ளைபெறுவிடில் இத்தனை இத்தனை அந்நிய புருஷருடன்போகிறேனென்றுசுவாமியிடத்தில் பிரார்த்தனைசெய்து, அப்படியே செய்கின்றார்கள். இப்படிச் செய்ய எந்தச் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன? இவையெல்லாம் எவ்வளவு அறிவீனம் பாருங்கள்! நாம்பிரார்த்தனைசெய்ய வேண்டாமென்று கூறவந்தேமில்லை. சாஸ்திரோக்தமாகவும், காலத்துக்குத்தக்கவாறு நாகரீகமாகவும், இருப்புக்குத் தக்கவாறும், ஒழிவுக்குத்தக்கபடியும் செய்துகொள்வதில் குற்றமில்லை. கடன்பட்டுப் பிரார்த்தனைசெய்வது கூடாது. "வளவனாயினும் அளவறிந்தழித்துண்" என்றும், "ஆனமுதலில் அதிகம் செலவானால்,மானமழிந்து மதிகெட்டுப் போனதிசை, எல்லார்க்குங்கள்ளனாய் ஏழ்பிறப்புந்தீயனாய், நல்லார்க்கும் பொல்லனாம் நாடு" என்றும் ஆன்றோர்கூறிய வாக்கைச் சிந்திக்கக்கடவர். கல்வி அறிவில்லாத பெண்பாலார் சொல்லைக்கேட்டு விபரீதப் பிரார்த்தனை செய்வதை யினி நிறுத்துவது நன்றாகும்.

---

## கணவனைக் கொன்ற கங்காமணியின் கதை.

பல்வளங்களும் நிறைந்துள்ள, நந்தீபுரம் என்னும் தேயத்தில், நவகோடிநாராயணன்செட்டியார் ஒருவர்இருந்தார். அவரோ,மிகதருமகுணசீலர். இரப்பார்க்குஇல்லைஎன்னாதுகொடுக்கும்வள்ளல். இவருக்குக்கங்காமணி என்னும் ஓர் கொடியமனைவி இருந்தாள். இவள், புருஷன் ஒன்று சொன்னால் வேறொன்று செய்யும் புண்ணியவதி. அண்டைவீட்டுச் சண்டையை விலைகொடுத்து வாங்குவாள். பிறர் தருமஞ்செய்வதையும்கெடுப்பாள். தனதுகணவனை வீட்டுவேலைக்காரனாக மதித்துத் திட்டுவாள். இவ்வாறு இருவரும் கொடுமையாகவாழ்ந்து கொண்டிருக்க, இவள் ஓர் நாள் தனதுவீட்டில் இருக்கும் வேலைக்காரனைத்தாறுமாறாகத்திட்டினாள். செட்டியார் அதுகேட்டு மனம்பொறாதவராய் அடி! பெண்ணே! இப்படியும் வேலைக்காரர்களைத் திட்டலாமா?நம்மிடத்தில் தங்கியிருப்பார்களா? உனக்கென்னபுத்தி கூறினும் கவனிப்பதேயில்லை. இனி அப்படிப் பேசாதே! என்றுசொல்லி வாய்மூடுவதற்கு முன்னே, அடா! பாவி! மட்டிச்சாம்பிராணி! காமாட்டிப் படுவானே! உன்னைக் கட்டிக்கொண்ட நாள்முதல் "கழுதையைக்கட்டி ஓமம்வளர்ப்பது"போலவேதான் கஷ்டப்பட்டேன்.






உன்பவுஷுகுலைய,உன்னைப்பார்த்தவர்களுக்குக்காறி உமிழவும் கால்காசு கொடுக்கவேணுமே! "நானும் சம்பந்தி நடுவேயிலைபோடு" என்றுநியாயம் பேசவந்து விட்டாயே! உன்னை எச்சிலிலை எடுக்கச்சொன்னார்களா?எத்தனைபேர் என்று எண்ணச்சொன்னார்களா? இந்தக்காமாட்டி வேலைக்காரர்கள்போனால் வேறு ஒருவன் வருகின்றான். அப்படியுமில்லாது போனால் நமது மருமகள் இல்லையா? என்று தாறுமாறாகப் புருஷனையும் திட்டித் தெருவில்வந்துவிட்டாள். செட்டியாரோ! இவளுடைய செய்கையைப்பார்த்து, வெட்கங்கொண்டு,வீட்டினுள்போய்க் கர்த்தாவைநோக்கித் துதித்துக்கொண்டிருந்தார். இவளோ! பேசித்தீர்ந்து, வீடுவந்துசேர்ந்து, நாலுநாள்வரையும், அடுப்புமூட்டாது வைத்தாள். செட்டியார் என்செய்வார். பிறரிடம் சொன்னாலும் வெட்கக்கேடு என்று மவுனமாய் நாலுநாளும் பட்டினி கிடந்தார். ஐந்தாந்தினம் அவளுக்கே நல்லபுத்தி உண்டாய் சமையல்செய்து, புருஷனுக்கிட்டுச் சிலநாள் வாழ்ந்திருந்தாள். ஓர்தினம் செட்டியார் தெருவில் உட்கார்ந்திருக்க, ஓர் சந்நியாசி மூன்றுநாள்பட்டினியால்வருந்தி எதிரில் வந்து ஐயா! எனக்கோ மெத்தப்பசியா யிருக்கின்றது. இப்போது என்பசியைத் தீர்த்தல் உமதுகடமை என்று சொல்ல, செட்டியார் இது எது!நமதுமனைவியோ!கொடும்பாவியாயிற்றே!அவளா! சமையல்செய்து போடுவாள். ஆயினும் சொல்லிப் பார்க்கலாம் என்று எழுந்து உள்ளேபோய் மனைவியை நோக்கிப் பெண்ணணங்கே! ஓர்பெரியவர் பசியினால் வருந்திவந்திருக்கின்றார். அவருக்கு அன்னமிட்டால்நமக்குப்புண்ணியம்கிடைக்கும். நீ சீக்கிரம் சமையல்செய்துமுடி என்றுவிநயமாய்க் கேட்டுக் கொண்டார். அதற்கவள் ஆ! ஆ! நல்லவேடிக்கைதான். "தன்னைப்பெற்ற ஆத்தாள்கிண்ணிப்பிச்சை எடுக்கிறாள்; தம்பிகும்பகோணத்தில் கோதானம் பண்ணுகிறான்" என்பதுபோல உனக்கே சோற்றுக்கு வழியில்லை. தானமா? தருமமா? போ! போ! நல்லவேலையாயிற்று. வீட்டிலேயும் சாமான்கள் ஒன்றுமில்லை. "அஞ்சுமூன்று முண்டானால் அறியாப்பெண்ணும் கறிசமைக்கும் அல்லவா?" வெறுங்கையை முழம் போடலாமா? அரிசி, பருப்பு, நெய் பதார்த்தம் முதலிய எல்லாம் வாங்கி வந்து வை; பார்க்கலாம் என்றாள்.

செட்டியார் மிகுந்த சந்தோஷங்கொண்டு ஒரு சிநேகிதனிடத்திற் போய்க் கெஞ்சிக்கேட்டு, ரு-பணம்வாங்கிக் கொண்டு, கடைக்குப் போய் சமஸ்த சாமான்களும் வாங்கிவந்து, அவளிடத்தில் கொடுத்தார். வேணுமென்றால் வெண்ணெய் மொத்தைபோல் நூற்கலாகாதா? என்பதாக அவளுக்குச் சமையல்செய்ய இஷ்டமிருந்தால் சமைக்கலாமல்லவா? அது இல்லாததினால் பின்னும் அரிசி ஆழாக்கானாலும் அடுப்புங்கட்டி மூன்று வேண்டுமல்லவோ? பானைசட்டி முதலிய பாத்திரமில்லாமல் எப்படி சமையல்ஆகும்என்றாள். செட்டியார்,அவைகளையும் கொண்டுவந்துகொடுத்துச் சமையல் சீக்கிரம் ஆகட்டுமென்றார். அதற்கவள் நீபோ; உனக்கென்னவேலை;எனக்குத்தள்ளாது; என்னால்முடியாது; தலைநோகிறது;என்று சாக்குச்சொன்னாள். அதற்குச் செட்டியார், என்னடி! நீசெக்குலக்கை போலிருக்கிறையே, உனக்குவந்த கேடென்ன என்றுகேட்க. "எருது நோய் காக்கைக்குத்தெரியுமா?" தலைநோயும் காய்ச்சலும் தனக்குவந்தாலல்லவோ தெரியுமென்று சொல்லிப் பாயைவிரித்து நெடுமுக்காடிட்டு நீட்டிப்படுத்துக் கொண்டாள். பின் அவர் சிறிதுநேரம் நின்றுபார்த்து, இவளென்ன ஜகஜண்டியா யிருக்கிறாளென்று மிகுந்த கோபம்கொண்டு வந்ததெல்லாம்வரட்டுமென்று மனதில்தைரியம்பண்ணிக்கொண்டு,அங்கு




கிடந்த ஒரு சிறியகொம்பை யெடுத்து, மெல்லென ஓர் அடி அடித்தார். அதற்கு அவள் ஓ! ஓ! அடசண்டாளா! என்னை அடித்துக் கொல்லவாபுறப்பட்டாய். உரலிலே அகப்பட்டுக் கொண்டு உலக்கைக்குப் பயப்பட்டால் ஆகுமா? சும்மா அடித்துக்கொல்லு. உனக்கேற்ற புத்திபண்ணுவிக்கிறேன். அடா! படுபாவி! இனி நான் உயிரோடு இருக்கிறதில்லை. ஊமத்தங்காயைத்தின்று பழிபோடுகிறேன் என்றுசொல்லித் தெருவிலேபோய்ப் பெருங் கூச்சலிட்டுச் செட்டியாரைக் கண்டபடிதிட்டி, மண்ணைவாரித் தூற்றித் தெருச்சிரிக்க அவமானப்படுத்தினள். இதைக்கண்ட சந்நியாசி சொல்லாமல் மறைந்துவிட்டார். இதைக்குறித்தே "ஐயருக்கமுதுபடை என்று வந்தாய் நீயும் ஆண்பிள்ளை என்றெண்ணவோ, அரிசியெங்கே பானைசட்டி யெங்கே என்பளவள் சொன்னவகைகளெல்லாம், பையவே கொண்டு வந்தாலும் சமைக்கப்படாது தலைநோகு தென்பாள், பாயிற்கிடப்பள்சினமாயொன்றுபேசினல் பாருனக்கேற்றபுத்தி, செய்யவல்லேனென்பளவள் சற்றடித்தால் நஞ்சுதின்கிறேன் கூகூவெனத், தெருவீடுதோறுமுறையிடு பெண்டிருண்டெனில் நியமன் வேறுமுண்டோ," என்று ஓர்கவிவாணர் தீயபெண்களின் இயல்பில் ஒன்ருகப் பாடியிருக்கின்ருர். செட்டியார் இக் கொடும்பாவியால் விளைந்த அவமானங்களையும் துன்பங்களையுங்கண்டு துக்கித்து, இனி என்னுயிரைவைத்திரேன் என்று நஞ்சுதின்று இறந்தார்.

கங்காமணியோ விதவையானுள். வரும்படியோ ? சிறிதுமில்லை. வீட்டிருப்போ பூஜ்ஜியந்தான். பணத்துக்காகக் கண்ட புருஷர்களோடு எல்லாம்சேர்ந்து வியாதிசம்பாதித்து அலைந்துதிரிந்துவந்த கங்காமணிக்கு மூப்புமேலிடவே, அவ்வரும்படியும் குறைந்துபோகப் பிச்சையிரந்துண்டு, பசியினுல் அதிகவருத்தமுற்றும், வியாதியால் துக்கித்தும், இறந்தாள். ஊரார் எல்லோரும் இவள் முற்காலத்திற்செய்த தீங்குக்ளைப் பிற்காலத்தில் அனுபவித்தாள் என்று சொன்னுர்கள். ஆகையால் பெண்கள் நாயகங்களே! நீங்கள் ஒவ்வொருவரும் இவ்வித தீச்செயல்கள் புரியாது, கணவன்வார்த்தையைத் தேவவார்த்தையாகக் கொண்டு வாழக் கடவீர்களாக.

---

## வித்தியாதருமம்.

இத்தேசத்துச் செல்வர், ஏதோ பல தர்மங்கள், செய்கின்றனரோ யன்றி, எல்லாச் செல்வத்தையும் தராநின்ற வித்தியா தருமத்தைச்செய்கின்ருரில்லை. இதனுல் வித்தையின் அருமைபெருமைகளைஉணர்ந்திராதவரொன்று கொள்ளற்கிடனுகின்றது. இத்தேசத்தார் தமதுபிள்ளைகளுக்கு உயர்தரக்கல்வி கற்றுக் கொடாமல், அறிவீனராக்கி, பின்னர் லக்ஷம் பத்துலக்ஷம் ஆஸ்திவைத்துவிட்டு, ஒருவர்க்கு ஓர் காசும் தராது செத்துப் போகின்றனர். அமெரிக்கா கண்டத்தில் ஐக்கிய தேசத்தின்கண் இராநின்ற ஓர் கனவான், சீனுதேசத்தில் பாடசாலை ஏற்படுத்த 3-லக்ஷம்ரூபா தந்தனராம். நமது தேசத்தார் அறிவீனத்திற்கும், அன்னிய தேசத்தார் விவேகத்திற்கும் வித்தியாசம் எவ்வளவிருக்கின்றது பாருங்கள். இச்சென்னையில் எத்தனை பணக்காரரோ இருந்து செத்துப்போனுர்கள். அவர் காலத்திலாவது, அவர் பிள்ளைகள் காலத்திலாவது, பேரன்மார் காலத்திலாவதுஇறகுமுளைத்துப் பணமெல்லாம் பேர்ஊர்இல்லாமறபறக்கின்றன. வித்தியாவிஷயத்தில் செலவழித்து ஸ்கூல்களை ஸ்தாபித்த **பச்சையப்ப முதலியார், செங்கல்வராயநாயகர்** முதலியவர் செத்துப்போயும், பேர் எங்கெங்கு பிரகாசிக்கின்றது பாருங்கள். மற்றவர் இருக்கும்போதே,






செத்தவரும் பச்சையப்பமுதலியார், செங்கல்வராயநாயகர் முதலியவர் செத்தும் உயிரோடிருப்பவருமாவர். ஆதலால் கனவான்களே! செத்தும் சாவாமலிருக்கத்தக்க வித்தியாதானத்தையே செய்யுங்கள். அதற்கிரண்டாவதாக இதரதருமங்களைச் செய்யுங்கள். அன்னதானத்திலும் வித்தியாதானமே மேலன்றோ? இந்துதனவான்கள் வித்தியாதானம் செய்யப்புறப்பட்டால், பிறகு நமது மக்கள் பாதிரிமார் ஸ்கூல்களில் படிப்பதொழித்துக் கிறிஸ்தவராகாமலிருப்பார்கள். அன்றுதான் மாதாபிதாக்கள் வயிறு குளிர்ந்து, தாம்பெற்றபிள்ளைகள் தமக்கு நிலைக்குமென அகமகிழுவார்கள்.

---

## பொருளினால் அவசியமாகச் செய்யவேண்டிய

### உத்தம தருமங்கள் - கஉ.

க. பூர்வகாலத்திலே ஈசுராநுக்கிரகம் பெற்ற பெரியோர்களாலே செய்யப்பட்ட தேவாலயங்களுள்ளும் புண்ணியதீர்த்தங்களுள்ளும் சிலமாயுள்ளவைகளை முன்போலச் செய்வித்தல்வேண்டும். அப்படிச் செய்தவர் பெறும் பயன், முன் அவைகளைச் செய்தவர் பெற்ற பயனிலும், ஆயிர மடங்கு அதிகமாம். அத்தேவாலயமுதலியவைகளுக்குள்ளே பழுதடைந்த இடங்களைப்பழுதறப் புதுக்குவித்தல்வேண்டும். அப்படிப்புதுக்குவித்தவர் பெறும் பயன், அவைகளை முன் செய்தவர் பெற்ற பயனிலும், நூறு மடங்கு அதிகமாம்.

உ. பெரியோர்கள் தாபித்த தேவாலயங்களுள்ளே பூசைஉற்சவமுதலிய நடவாத தேவாலயங்களிலே, ஆகமவிதிப்படி வழுவறச் சிரத்தையோடு பூசை உற்சவமுதலியவை செய்வித்தல்வேண்டும்.

௩. தேவாலயத்துத்திருமதில்திருக்கோபுரமுதலியவைகளிலே அரசு முதலியவை முளைத்து அவைகளுக்குச் சேதஞ் செய்யாவண்ணம், கூலியாட்களை ஏற்படுத்தி, அவர்கள் காலந்தோறும் பார்வையிட்டு அவ்வரசு முதலியவற்றைக் களைந்தெறிந்து விட்டுச் சுண்ணம்பு பூசிக்கொண்டு வரும்படிச் செய்தல்வேண்டும்.

௪. தரிசனத்தின்பொருட்டுச் சமீபத்திலே தேவாலயம் இல்லாத இடங்களின்மாத்திரம் நூதனமாகத் தேவாலயம் கட்டுவித்து,இயன்றமட்டும் பூசை முதலியவைகளை விதிப்படி நடத்துவித்தல்வேண்டும்.

௫. கல்வியறிவொழுக்கங்களாலும் ஈசுரபத்தியினாலும் சிறந்து விளங்கும் போதகர்களைக்கொண்டு, தேவாலயங்களிலும், புண்ணியதீர்த்தக்கரைகளிலும், மடங்களிலும், சனங்களுக்குச் சமயத்தைப் போதிப்பித்தல் வேண்டும். இதுவே எல்லாத்தருமங்களிலும் மிக மேலாகிய தருமம். இத்தருமம் இல்லாவிடத்து மற்றைத்தருமங்கள் பயன்படாவாம். கடவுளுடைய குணங்களையும், மகிமைகளையும், அவரை வழிபடும் முறைமையையும், அவ்வழிபாட்டாலே பெறப்படும் பயனையும் அறியாதவர், கடவுளை வழிபட்டு உய்வது எப்படி? அவர்களுக்குத் தேவாலய முதலியவைகளினாலே பயன் யாது?

௬. வித்தியாசாலைகளைத் தாபித்து, கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்த உபாத்தியாயர்களைநியோகித்து, பிள்ளைகளுக்குக்கருவிநூல்களையும், லௌகிகநூல்களையும், சமயநூல்களையும், படிப்பித்தல்வேண்டும். கல்வி








யிலேமிக்கவிருப்பமும் இடையருமுயற்சியுமுள்ள பிள்ளைகளுள்ளே வறிய பிள்ளைகளுக்கு, அன்னமும் வஸ்திரமும் புத்தகமுங்கொடுத்தல்வேண்டும். வருஷந்தோறும் பரீக்ஷைசெய்து,சமர்த்தர்களாகிய பிள்ளைகளுக்குப் பரிசு கொடுத்தல்வேண்டும்.

(இன்னும்வரும்.)

---

## புத்தித்திறத்தைவிளக்கும் ஓர் கதை.

இரண்டு சித்திரக்காரர்கள், தங்களுக்குள் யார் கெட்டிக்காரனென்பதைருஜுப்படுத்தும்பொருட்டு,ஆளுக்கொருசித்திரமெழுதும்படித்தீர்மானித்துக்கொண்டார்கள். ஒருவன் திராட்சப்பழக் குலைக்குச் சமானமான ஒரு சித்திரமெழுதித் தன்வீட்டு வெளிக்கதவுக்குமேல் தூக்கிவைத்தான். அப்போது பட்சிகள் அது நிசமான பழக்குலையென்று நினைத்து அதைக் கொத்திக்கொண்டிருந்தன. இதைக் கண்டவர்களெல்லோரும் சித்திரக் காரனைமெச்சி, அவனோடுகூட மற்றச்சித்திரக் காரனுடைய வீட்டுக்குப் போய் உன் சித்திரமெங்கே என்றார்கள். அதற்கவன் திரைச்சீலை யொன்றைக்காட்டி, அதற்குப் பின்னாலிருக்கிறதென்றான்.மற்றச்சித்திரக்காரன் உடனேதன்கையை நீட்டித் திரைச்சீலையை இழுக்கப்போனபோது,அது சித்திரசீலை யென்று கண்டு சும்மா நின்றான். அப்போது திரைச்சீலை எழுதிய சித்திரக்காரன் மற்றவனைப்பார்த்து, நீ பட்சிகள் ஏமாறத்தக்க சித்திரம் வரைந்தாய், நான்எழுதிய படமோ? சித்திரக்காரர்கூடமயங்கத் தக்கதென்று சொன்னான்.

---

## பெண்களுக்குக் கல்வி.

(முன் 25 - வது பக்கத்தொடர்ச்சி).

முதலாவது:—நூறுகுருடர்கிணற்றில்விழுந்தார்களென்றால், எல்லோரும்அவ்வாறேசெய்யவேண்டுமென்பதற்கு,அது பிரமாணமாகுமோ?அப்படியாயின் கூழ்குடித்த வன்மக்கள் சோறுதின்பதும் பழுதாம். இதை ஒரு கொடியாவது ஒப்பமாட்டோமாகையால் சம்பிரதாயமென்னும் சொகுசானபதத்திற்கு எவ்விதபொருள்செய்து நாம் அனுஷ்டிக்கவேண்டுமென்கிற விசாரமுண்டாகி, அது ஸத்ஸம்பிரதாயம், துஸ்ஸம்பிரதாயம், என இருவகைப்படுமென்றும்,அதில் துஸ்ஸம்பிரதாயத்தை வரைந்து,ஸத்ஸம்பிரதாயத்தைக் கைக்கொள்ளவேண்டுமென்றும் நிச்சயிப்போமல்லவா? ஸத்ஸம்பிரதாயமின்னதென்று அறியப்புகுங்கால், பெரியோர் நடையே ஸத்ஸம்பிரதாயமெனச் சிலருரைப்பார்கள். இதுசரியான அபிப்பிராயமாகில், கிருஷ்ணனுடைய பாலியசேஷ்டைகளைப்பற்றிப் பாகவதத்தில் நன்றாய்ப்படித்தபெரியோர்கள், வேசிகளைக் கூடிக்கெட்டுப்போகும் சிறியோரைத்துன்மார்க்கா ளென்று பழிக்காமல், சன்மார்க்காளென்றே புகழ்ந்து கொண்டாடி,அவ்வாறே அவர்களும்நடக்கவல்லவோவேண்டும்!அப்படிச் செய்ய ஒருவரும் ஒப்பமாட்டாராகையால் அப்பதத்துக்கு அர்த்தம் அதுவல்லவென்று விசிதமாகும். அதன்கருத்துதானென்னவெனில், வேத சாஸ்திராதி நீதி நூல்களுக்கு ஒத்து, விரோதமின்றியுள்ள ஆசாரமே சிஷ்டாசாரமென்றும், ஸத்ஸம்பிரதாயமென்றும் தருமநூல்களுக்கு உரைசெய்த பெரியோர்களனைவரும் ஒருமித்து முறையிட்டிருக்கின்றனர். இது வேதசாஸ்திரங்களுக்கு ஒத்திருக்கின்றதோ? இல்லையோ? வென்கிறவிஷ




யத்தைக்குறித்து இனி சர்ச்சிக்கப்படுமாகையால், இப்போது அதை யோசிக்கவேண்டாம். இப்பரதகண்டமொன்றுதவிர, மற்றத்தேசங்களெல்லாவற்றிலும், ஆண்பிள்ளைகளைப்போலவே பெண்பிள்ளைகளும் பெரும்பாலும் கல்விப்பயிற்சிசெய்கிறார்களென்று சரித்திரக்காரர்கள் சொல்லக்கேட்டிருக்கின்றோம்.நமதுதேசத்திலும் ஆதியில்இவ்வாறேயிருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. உலகநீதிகளெல்லாம் பாகாய்த்திரட்டித்தாங்களும் அனுபவித்து அயலாருக்கும் அளித்த கார்கி, மைத்திரேயி,கோதை, ஔவை,வள்ளி, உறுவைமுதலிய, மேன்மகளிருடைய நடையே நமக்குப்பிரமாணமாகாவிடின், மற்றெதைத்தான்பிரமாணமாக்கிக் கொள்ளலாமோ ? நாங்களறியோம். உபதேசத்தாலும், அநுஷ்டானத்தாலும், நீதியை நிலைக்கச் செய்த இதர ஞானத்தாய்களை ஒழுங்கு தப்பினவரொன்று சொல்லவியலுமோ ? நம்முடையபெண்கள் அவ்வளவு நற்குண நற்செய்கைகளுள்ளவர்களெனில் போதுமல்லவா ?

இரண்டாவது:—பெண்களுக்குக்கல்வி ஆவசியகமல்லவென்பது வெகுபுதுமையாகவேயிருக்கின்றது. நமது நீதிநூல்களில் புருஷர்செய்யும் பாவபுண்ணியங்களுக்குப்பெண்களேபாத்தியஸ்தர்களெனவும்,அப்பெண்களின் பாவபுண்ணியங்களில் அவர்களுடையகணவர்களுக்குப்பங்கு உண்டெனவும், சொல்லியிருப்பதின் கருத்தைச் சற்றுயோசிப் போமாயின், அவர்களுக்கும் கல்வி அத்தியாவசியகமென்றுவிளங்கும்.இல்லறத்திலும் கடினமானது உலகில் வேறில்லை என்பதற்கு நமது அனுபவமே சாக்ஷி. அதைப்பழுதறச்செய்து பயன்களை யடையப்பெண்களுக்கு விசேஷகல்வியும் ஞானமுமின்றி முடியாது. பெண்களுக்கு இளமையில் பிதாவும், வயதில் கணவனும், மூப்பில் மக்களும் இரக்ஷகரேயன்றி, அவர்களுக்குச் சுவாதந்திரியமில்லையென்று, மனுமுதலிய இருஷிகள் விதித்திருக்கிறபடியாலும், ஸ்திரீகள் சபலைகளென்று எல்லோராலும்கொள்ளப்பட்டிருக்கிறபடியாலும்,அவர்கள் தாமே கல்வியைப்பயிலமுடியாதென்றும், அவர்களுடையநல்லறிவினால் விளையக்கூடியபயன்களை அடைய நாம் விரும்புவோமாயின், அவர்களுக்கு அறிவைப் புகட்டுவது நமதுவிலக்காக் கடமையென்று நாம்கொள்ளவேண்டியது. நம்முடைய கவிகளிற்சிலர் ஸ்திரீகளுக்குச்சர்ப்பத்தை யுபமானமாய்ச் சொல்லியிருக்கின்றனர். வரகவிகளுக்கெல்லாம் சிரேஷ்டராகவும், இங்கிலாண்டு தேசத்தாருக்குச் சிரோபூஷணமாகவும், அவர்கள் பாஷையின் சிறப்புக்குப் பிதாவாகவும் வந்துதித்த, ஷேக்ஸ்பியர் என்பவர் ஹாம்லெட்டு என்னும் நாடகத்தில், ஸ்திரீகள் சபலைகளென்று சொல்லுவது போதாதென நினைத்து, "சபலமே உன் பெயர் ஸ்திரீ"என்றருளினார். அநிஷ்டநிவாரணத்துக்காகவேமூலிமருந்துகளைச்சேர்த்து,விஷத்தையும்பயன்படுத்துவோமாகில், இஷ்டசித்திக்காகப் பெண்களுக்குக் கல்வியாவதுண்டாக்க வேண்டாமா? இந்த இல்லறமாகிய கடலில் மேடுபள்ளம், சுழல் நீரோட்டம், அலை பிசல்முதலிய பல இடையூறுகளுண்டென்பதற்குச் சாக்ஷியாக "ஸம்சாரசாகரகோரம்" என்று பெரியோருரைத்திருக்கின்றனர். இக்கடலில் சஞ்சரிக்க நமக்குக் கப்பலாய் உதவும், பெண்களுக்கு வழிகாட்ட அறிவெனும் மாலுமியில்லாவிட்டால், நாம்கரையேறுவதும் சாத்தியமோ? கண்ணில்லாமாட்டைக்கடல் நோக்கிப் போ வென்றுகொன்றாலும், போக அதற்கியலுமோ? அவ்வாறு கொல்வதிலும், உலகில் கொடியபாவமுண்டோ ? பெண்களெடுக்கமாட்டாத சுமையாகிய இல்லறத்தை அவர்கள்தலைமீதுவைத்துவிட்டு,அவர்கள் அதைஒருவாறுசெலுத்தவும், இன்றியமையாக்கருவியாகியகல்விப்பொரு

ளைத்தராவிடில், அவைகளைக்கொண்டு நாம் என்னபயனையடையக்கூடும்? பெண்களைக்கற்பிப்பதினால் உண்டாகத்தக்கபயன்களைக்குறித்துப்பின்னால் எழுதப்படுமாகையால், பெண்களுக்குக் கல்வியைக் காட்டிலும் அவசியமானபொருள் வேறொன்றுமில்லையெனத் தானாய் விளங்கும்.

(இன்னும்வரும்.)

---

## வியாதி மூலங்கள்.

(முன் 24-வது பக்கத்தொடர்ச்சி.)

நம்மதேசத்து ஜனங்களுக்கு, புசிக்கும் பதார்த்தங்களினாலுங் குடிக்கும்பதார்த்தங்களினாலுமாத்திரந்தான், வியாதிகள் வருமென்னும்ஞானம், சாதாரணமா யிருக்குமேயொழிய, வேறு வழிகளாலும், வியாதிகள் வரக்கூடுமென்னும் ஞானம் அற்பமுங் கிடையாது. தேகத்துக்கு ஒவ்வாத பதார்த்தங்களை யுண்பதனாலும் ஒவ்வின பதார்த்தங்களையும், அளவுக்கதிகமாயும் அகாலங்களிலும் உண்பதனாலும், வியாதிகள்வரும் என்பதை யுணரவேண்டும். அப்படியே, (புறம்பில்) ஆகாயவெளியிலுள்ள சீதோஷ்ணங்களாலும், மோதிவீசுங்காற்றினாலும், விஷவாயுக்கள் கலந்த ஆகாயத்தை உட்சுவாசிப்பதனாலுங்கூட வியாதிகள்வருமென்பதை நம்மவர்கள் உறுதியாய் நம்பவேண்டும். காற்றானது தேகசௌக்கியத்துக்கென்றே ஏற்பட்டுள்ள முக்கியபூதமா யிருந்தபோதிலும், அதிகப்பட்டால் அதுவுந் துன்பஞ் செய்யுமென்பதே ஆதலால், வெற்றுடம்போடு (தக்கபோர்வையில்லாமல்) இருப்பதும் நெடுநேரம்குளிரிலிருப்பதும், நெடுநேரம் உஷ்ணத்திலிருப்பதும், நெடுநேரம் மோதிவீசுங் காற்றிலிருப்பதும், துர்நாற்றமலிந்தவிடங்களில் இருத்தலும் ஆகிய இவை மிகுந்த கொடிய வழக்கங்களாம். இவ்வழக்கமானது கருப்பத்திலேயே பதிந்துள்ள வியாதிகளைக் கிளறியெழுப்புவது மல்லாமல், நூதன வியாதிகளையும் உண்டுபண்ணிப் பெருந்தீங்குக்கிடஞ் செய்யும். இவ்வுண்மை யறியாமல் எத்தனையோபேர், குளிர் முதலிய காலபேதங்க ளுண்டாகும்போது வியாதிப்பட்டுமடிகிறார்கள்.

தேகத்தை நெடுநேரம் குளிர் அல்லது குளிர்ந்துவீசுங் காற்றுக்கு வெளிப்படுத்துவதனால் (Exposure) வரும் முக்கியவியாதிகள், சாதாரண ஜலதோஷம், தொண்டைக்குரிய பலவியாதிகள், புட்டாளம்மை (இது அம்மையல்ல-வியாதி), சாதாரண இருமல், ஊஷ்ணஇருமல் (நியுமோனியா), மாருளைப்பு, இரத்தகாசம், க்ஷயம், சுவாசகாசம் (Asthma)குலைநோய், தலைநோய், சுரம், கண்நோய், காதுநோய், பேதி, வாந்தி, ஈரல் வியாதிகள், மண்ணீரல்வியாதிகள், இடுப்பு புறங்கழுத்துகளின் பிடிப்பு, சீல்வாதம், இப்படிச் சிறிதும் பெரிதுமான இன்னுமநேகவித வியாதிகள் சீதளாஸ்பதத்தாலுண்டாகின்றன. இவற்றுளொன்றுகாணும்போது, நம்ம ஜனங்கள் சாதாரணமாய்ச் சொல்லுங் காரணம் யாது? ஜலதோஷத்தால் மூக்கில் ஜலம்வடிந்து தொண்டை கட்டிக்கொள்ளும் போது, அதற்கு முன், பனியில் அல்லது குளிர்ந்தகாற்றில் வெற்றுடம்போடு அல்லது மெல்லியவஸ்திரம்போர்த்துநெடுநேரம்படுத்திருந்தஅல்லதுஉலாவித்திரிந்த துர்வழக்கத்தைக் காரணமாகச் சொல்லுகிறதில்லை. பனியில் விடியற்காலத்தில் வெற்றுடம்போடு அல்லது மெல்லிய வஸ்திரம் போர்த்து வெளியேசென்றும், பனிக்கட்டியைப்போற் குளிர்ந்திருக்கும் ஜலத்தில் ஸ்நாநம்பண்ணிக்கொண்டு வந்ததுமான துர்வழக்கங்களையுங் காரணமாகச்

சொல்லுகிறதில்லை. ஜலதோஷங் காணுவதற்கு முன்னுள், சாதாரணமாயுண்ட சீதள பதார்த்தங்களென்று சாதாரணமாயெண்ணப்படும் சுரை, முள்ளங்கி, வெங்காயப்பச்சடி, தயிர், மாதளம்பழம், கிச்சிலிப்பழம், கேழ்வரகுகூழ், பழஞ்சோறு ஆகிய இவைபோன்ற பதார்த்தங்களுள்ஒன்றை யுண்டிருந்தால், அதனுல்தான் ஜலதோஷம் பண்ணித் தொண்டை கட்டிக்கொண்டதுஎன்று “பாவமொருவர்மேலிருக்கப்பழியொருவர்மேற் போகுங்கதை” போலும், நிரபராதியும் உபகாரியும் ஒரோர்கால் குற்றவாளிகளாகத் தண்டிக்கப்படும் அநியாயம்போலும், சாதாரணஜனங்கள் பெரும்பாலுஞ் சொல்லுகிறவழக்கம். இவ்வஞ்ஞானத்தின்பயன் என்னவெனில், ஜலதோஷத்துக்கு மேற்சொன்னதுபோல் காரணம் வேறே தேடிக்கொண்டபடியால், உண்மையில் காரணமாயிருந்த துர்வழக்கங்களிலேயே மேலுமேலும் பிரவர்த்தித்துவர நேரிடுகிறது. நேரிடவே, ஆரம்பத்தில் வெறுஞ் ஜலதோஷமாத்திரமாயிருந்த வியாதி நாளுக்கு நாள்முற்றி, மேலேகாட்டியதுபோல், தலைநோய், சுரம், நுரையீரலின் (சுவாசாசயம்) விரோதிகளாகிய இருமல் (இதில் நியுமோனியா முதலிய மரண ஏதுவான வியாதிகளடங்கும்) க்ஷயம், சுவாசகாசமுதலிய பலத்த வியாதிகளாகிப் பிராணச்சேதத்தை யுண்டுபண்ணுகின்றது. இதற்குத் திருட்டாந்தமாகச் சீதளகாலம் வரும்போது நாம் கவனமாய்ப் பார்ப்போமானுல், அநேகர் மேற்சொன்ன வியாதிகளில் வருந்துவதைப் பிரத்தியக்ஷமாய்க்காணலாம். சீதளபதார்த்தங்களையுண்பதனுல், 'வியாதிகள்வாராவென்று யாம் சொல்லவரவில்லை. பனிக்கட்டியிட்ட ஜலம், எலுமிச்சம்பழரசம், மாதளைரசம் ஆகிய இவைபோன்ற சீதளவஸ்துக்களை அளவறியாமலுங், காலமறியாமலும் உண்டால்ஜலதோஷமுதலிய வியாதிகள்காணக்கூடும். ஆனுல், இக்காரணங்கள் சாதாரணமன்று. அளவறிந்துங் காலமறிந்தும் உண்டால், இவ்வஸ்துக்கள் தேகத்துக்கு ஆரோக்கியமே தரும். இருமல் முதலிய கபரோகங்களாலாகும் மார்பகவியாதிகள் (Chest complaints) காணும்போது, அவை ஊஷ்ணத்தாற் கண்டதென்று சொல்லிச் சீதளபதார்த்தங்களை யதிகமாயுட்கொண்டு வியாதியைப் பலப்படுத்திக்கொள்வாருமுண்டு. மார்பகவியாதிகள் எப்போதுஞ் சீதளாஸ்பதங் காரணமாகவே வரும். ஆதலால், சீதளகாலங்களில் முக்கியமாய் வீட்டை விட்டு வெளியிற்போக நேரிடும்போது, மார்பை (மற்ற அங்கங்களையுங்கூடத்தான்) ஊஷ்ணமான வஸ்திரப் போர்வையாற் போர்த்து, சர்மத்தை யிளஞ்சுடுகையாய் வைத்துக்கொள்வது வியாதியைத் தடுப்பதற்கும், வந்த வியாதியை யதிகப்படாமல் குறைப்பதற்கும், தேகத்தை ஆரோக்கியமாய்வைத்துச் சுகமடைவதற்குந் தக்க உபாயமாயிருக்கும். கம்பிளித்துணிகளால் (பிளாநெல்) அங்கி (கோட்) தைத்துப் போட்டுக்கொள்ளலாம். அல்லது, கம்பளத்தாற் செய்யப்பட்டுள்ள துப்புட்டாக்களைப்போர்த்து வெளியேபோகலாம். இவ்வுடுமானங்கள் ஊஷ்ணகாலத்துக்கு எவ்வளவும் உதவா. குளிர்காலத்தில் மெல்லிய வெறும்பஞ்சுவஸ்திரம் அல்லது அங்கிபோர்த்து வெளியேசென்று வரும் வழக்கம் வியாதியைத் தடுப்பதற்கான நல்லவழக்கமல்ல. சிலர், இருமல்முதலிய கபவியாதிகளில் வருந்தும்போது, வெற்றுடம்போடிருத்தல் நல்லதல்ல. கம்பிளித்துணியாற்செய்த அங்கிபோடும் என்று, தெரிந்த வைத்தியன் சொன்னுல், அப்படியேசெய்து சௌக்கியமடைவதை விடுத்து, ஓ! எனக்கு இருமல் ஊஷ்ணத்தாற் கண்டிருக்கிறது, கம்பிளியங்கி தரித்தால் அது அதிக ஊஷ்ணம்பண்ணி இருமலையதிகப்படுத்தும் என்று “தகப்பன் சுவாமிகளாய்”

ப்பேசுகிறதுண்டு. இது அறியாமை. பனி, குளிர்ந்துவீசுங் காற்று இவை நெடுநேரம் வெற்றுடம்பின்பேரில் தாக்குவதனுலேயே பெரும்பாலும் அவ்வியாதிகள் காணுமென்னு முண்மை மேற்போந்த விவகாரத்தால் விளங்குமாதலால், சொன்னபடி கேட்டுநடத்தலேசுகசௌக்கியாநுபவப் பேற்றிற்கு உரித்ததாயிருக்கும். (இன்னும்வரும்.)

---

## வீட்டுக்கடுத்த விஷயங்கள்.

சிக்கனம் என்பதே எல்லாக் குடும்பங்களிலும் கவனிக்க வேண்டிய முதல்விஷயம். புத்தியுள்ள ஒரு குடித்தனக்காரி வருமானத்துக்கேற்றது போலக் குடும்பச்செலவை மட்டுக்கட்டுவாள். வருமானத்துக்குமேல் நாம் செலவு செய்யாதிருக்க விரும்பினுல், எதையும் நாம் கையிலே பணங் கொடுத்து வாங்கவேண்டியது. அப்படிக் கூடாதபட்சத்தில் ஒவ்வொரு மாதமும் ஒழுங்காய்க் கடனைத் தீர்த்துவர வேண்டியது. இல்லாவிடில் "கடன்பட்டகந்தன்" பட்டபாடு படத்தான் வேண்டும்.

வசதியாயிருக்கும் ஒரு சுத்தமான வீடும், நன்ருய்ச் சமைக்கப்பட்ட சௌக்கியமான ஆகாரமும், நாம் பாக்கியமுள்ளவர்களா யிருப்பதற்கும், சன்மார்க்கமாய் வாழ்வதற்கும் பேருதவிகளாக இருக்கின்றன.

பத்துப் பலம் அரிசியை நன்ருய்க் கழுவி, நாலு ஆழாக்குப் பாலில் கொட்டிச் சுடவைத்து, அரிசி இளகுமுன்னே பால் வற்றிப்போகுமாகில், கூடக்கொஞ்சம் பால்வார்த்து, அதனுேடு நாலு கரண்டி சர்க்கரை சேர்த்து, ஒரு அகப்பையால் எல்லாவற்றையும் நன்ருய்க்கிண்டி, அதை எற்கனவே குளிர்ந்த சலத்தில் கழுவப் பட்டிருக்கும் கோப்பைகளில் வைத்து நிறைத்து, பணிகாரத்தோடாவது, பழம், நன்னுரிவேர் முதலியவற்றிலிருந்து இறக்கப்பட்ட பாகினுேடாவது கலந்து சாப்பிட்டால் வெகு இனிப்பாயிருக்கும்.

---

## இரைப்பையில் உண்டாகும் விசித்திர சேஷ்டைகள்.

---

ஆகாரம் உட்சென்றவுடனே ஜீர்ண நீர் சுரக்கிறதுந் தவிர இரைப்பையில் இன்னுஞ் சில விந்தைகள் நடக்கின்றன. நாம் பட்டினியாயிருக்கும்போது இரைப்பையின் பக்கங்கள் வெறும் பையைப்போலத் தளர்த்தியா யிருக்கின்றன. சாப்பிட ஆரம்பித்தவுடன் அந்த இரைப்பையின் பக்கங்கள் விலகி, ஆகாரம் வந்துவிழ இடங்கொடுக்கின்றன. அப்போது இரைப்பையில் ஓர்வித அசைவுண்டாகி தயிர்கடையும்வண்ணமாய் ஆகாரம் முன்னும் பின்னும் சுழல்கின்றது. இந்த அசைவு ஆரம்பத்தில் மெதுவாயிருந்து ஜீர்ணம் ஆக ஆக வேகமாகின்றது. இரண்டு வஸ்துக்களை ஒரு பாத்திரத்தில் போட்டுக் குலுக்கிக் கலக்குவதுபோல, அந்த அசைவினுல் ஆகாரம் ஜீர்ண நீரோடு நாலண்டையுங் கலந்து ஒத்துக்கொள்ளுகிறது.

நாம் சாப்பிடும் ஆகாரம் அன்னப்பாகாக மாறின பிறகு இரைப்பையினின்றும் குடலில்போய் விழுந்து இன்னுஞ் சில வேறுபாடுகளை அடைகின்றது. மேற்சொன்ன அசைவு போசனத்தை ஜீர்ண நீரோடு கலப்ப






துமன்றி, அது பாகானபிறகு இதைப் பையின் எந்தப்பக்கத்தில் குடலுக்கு வழியிருக்கின்றதோ அங்கே கொண்டுபோய்த் தள்ளுகிறது.

ஜீர்ண மாவதற்குமுன் ஆகாரம் குடலுக்குள்ளே செல்லுவதா யிருந்தால் வெகு சங்கடமுண்டாகும். இது உண்டாகாம லிருக்கும் பொருட்டு குடலின் துவாரத்தண்டை மூடி அல்லது வாசற் காப்பான் ஒன்றுண்டு. அதன் காரியம் என்னவென்றால், ஜீர்ணமான பதார்த்தங்களைக் குடலுக்குப் போகவிட்டு, அப்படி ஆகாதவைகளை மறுபடி இரைப்பைக்கே திருப்பி விடுகின்றது. இந்த விசித்திரமான சக்தியைச் சிருஷ்டி கர்த்தாவாகிய கடவுள் அதற்கு அமைத்திருக்கிறார்.

(இன்னும்வரும்.)

---

## சுகாதார முறைமைகள்.

போஜனக் கவலையைப்பார்க்கிலும் நமது இளைப்பை ஆற்றும் கவலையே அதிகப் பெரியதாயிருக்கிறது. நாம் அப்படிக் கவலைப்படுவது, அதன் விசேஷத்தைப் பற்றியல்ல. அது அகப்படுவது கஷ்டமாயிருப்பதினாலே தான். அதிக இளைப்பாறுதல் சுகமான நித்திரையினால் உண்டாகிறது. எல்லா விஷயங்களிலும் சமானமான இரண்டு ஸ்திரிகளில் சுகமாய் நித்திரைசெய்பவள் அதிக நல்லொழுக்க முள்ளவளும், சுகமுள்ளவளும், பலசாலியுமாயிருப்பாள். சடுதியில் கோபமுண்டாதல், முறுமுறுப்பு, மனசஞ்சலம் முதலியனவற்றை நித்திரை நீக்கிவிடும்; அதிக யோசனையால் தடுமாறும் புத்திக்குப் புது ஊக்கத்தை அது திரும்ப உண்டாக்கும்; களைத்ததேகத்துக்குப் பலம் கொடுக்கும்; தலைவலியைச் சொஸ்தமாக்கும்; மெய்யாகவே, நித்திரையானது நீக்கிவிடும் வியாதிகள் வெகு ஏராளமாக இருக்கின்றன.

---

## பாகசாஸ்திரம்.

### எலுமிச்சங்காய் ஊறுகாய்.

ஒருபெரியபாத்திரத்தில் ஏழுபடிச்சுத்தநீர்விட்டு, அடுப்பின்மீதுகொதிக்கவைத்துக் கொதித்துவருஞ் சமயத்தில் இறக்கிக்கொண்டு, நூறுபெரிய எலுமிச்சம்பழத்தை அதிற்போட்டு ஒருநிமிஷம் தாமதித்துக் கொதிநீரினின்றும் எடுத்து, வெள்ளைக்குட்டையால் ஒவ்வொன்றையும் துடைத்து வைத்துக்கொண்டு கல்மண்போக்கிச் சுத்திசெய்து, வெயிலில்காயவைத்த ஒன்றரைபடி உப்பையும், நல்லெண்ணெயில் தனித்தனியே வறுத்தமூன்றரை அல்லது-சு-பலம்மிளகாயையும்,க-பலம்சீரகத்தையும்,பொடிசெய்துஅப்பொடிகளையும்,ரு-பலம் இஞ்சிரசத்தையும், பதினைந்துபலம்சிறுக அரிந்த பச்சை மிளகாயையும், பத்துப் பலம் நல்லெண்ணெயில் சேர்த்துப்பிசைந்து,மேற்படிகாய்களை விட்டுப்போகாமல் நான்காகப்பிளந்து, ஒவ்வொன்றிலும் அச்சம்பாரத்தை நிரப்பிவைக்க வேண்டும். பின்பு ஒருபெரிய ஏனத்தில் பத்துப்பலம் நல்லெண்ணெய்வார்த்து, அதில் உ-பலம் உரித்தவெள்ளைப்பூண்டும்,வகையொன்றுக்கு அரைபலமாக சீரகவெந்தயங்களும், ஒருபிடிக் கறிவேப்பிலையும், போட்டுவறுத்து வரும்போது, மேலே பக்குவப்படுத்திவைத்திருக்குங்காய்களை ஒன்றுசேரக்கொட்டித்தாளித்துப் புகையடங்கியபின் வேறொருசாடியில் எடுத்துவைத்து வாயைச் சீலையால் மூடி இருபதுநாள் வெயிலில்வைத்துப் பிறகு உபயோகப் படுத்திக்கொள்ளவேண்டும்.

---




No. 5. கடவுள் துணை. நெ. ௫.

# விவேகசுந்தரம்.

———:◡:*:◡:———

விநாயகர் துதி.

பெரும்புகழ் பெறும்படி யருந்துயர் கெடும்படி
பிரியம்பல வரும்படியுளம்
விரும்பிய தனம்பெற மிகும்பெறு பதம்பெற
விளங்கிய தவஞ்செய்நெடுங்
கரும்பவல் பெரும்பய றருங்கனி ரசங்கொடு
கவர்ந்ததென வந்தருள்புரிந்
திருங்கரி முகன்சிறு சதங்கையொடு கிண்கிணி
யிலங்கிய பதம்பெறுவனே.

## நீதிவாக்கியங்கள்.

(முன் 28-ம் பக்கத்தொடர்ச்சி.)

21. உள்ளதுபோதும் என்று அமைந்த மனமே குறைவற்ற களஞ்சியம்.

22. மனத்திருத்தியிலும், சரீராரோக்கியத்திலும், நற்குண நற்செய்கைகளை உடையராய் வாழ்தலிலுமே அன்றி திரவியத்திலே இன்பம் உண்டாகாது.

23. வருவாய்க்குத்தக்க வாழ்க்கை இல்லாதபொழுது செல்வராவார் ஒருவரும் இலர்; அது உள்ளபொழுது, வறியராவார் மிக அரியர்.

24. கடன்படும் செல்வர்களினும், கடன்படா வறியவர்களே மிகுந்த சுகம் உடையவர்கள்.

25. கோட்கேட்பவன் இல்லையாயின், கோட்சொல்பவனும் இல்லை.

26. பிறருக்கு வரும் கல்விச்செல்வங்களைக் காணும் பொழுது, பொறாமை இன்றி மகிழ்தலே நன்மனசுக்கு அழகு.

27. நாம் செய்த குற்றங்களை நாமே வெளிப்படுத்தி, பச்சாத்தாபப் படுவோமாயின், அறிவினால் மூத்த பெரியோர்கள் நம்மேல் இரங்கி, அவைகளைப் பொறுத்துக்கொள்வார்கள்.

28. நம்முடைய குற்றங்கள் இவைகள் என்று நமக்குத்தெரிவித்து, அவைகளை நீக்கி நடக்கும் நெறியை நமக்குப் போதிக்கின்றவர்களே நமக்கு உத்தம சிநேகிதர்கள்.

29. நம்மேல் அன்பு இல்லாதவர்கள் மேலும், நாம் அன்பு உள்ளவர்களாகவே இருத்தல்வேண்டும்.

30. பிறர் உனக்குச் செய்த குற்றங்களினாலே உனக்குக் கோபம் தோன்றும்பொழுது, நீ பிறருக்குச் செய்த குற்றங்களை நினைப்பாயாகில், அது அடங்கிவிடும்.

(இன்னும்வரும்.)

# வஞ்சனை.

வஞ்சனைகாரன் கொடும்பாவி. அவன் என்னதான்படித்திருந்தாலும், பழிபாவங்களொன்றிற்கு மஞ்சாது பாதகம் புரிவான். பசுவின் றோல்போர்த்த புலிபோலப் பார்வைக்குமட்டும் மிகநல்லவன்போலப் பாசாங்குசெய்வான். வயிற்றுப்பிள்ளை நழுவிவிழும்படி நயங்காட்டிப் பேசி மோசம்பண்ணுவான். எப்பொழுதும் தன்னுள்ளக்கருத்தை வெளியிடாமலே மறைத்துப்பேசுவான். முகத்தைப் பார்த்த மாத்திரத்திலே அவன் வஞ்சகனென்று எளிதிலறிந்துகொள்ளலாம். குரங்குத்தனமாய்த் தான்பிடித்தபிடி தப்பாமல் அது கைகூடவேண்டுமென்று அரும்பாடு பெரும்பாடுபடுகையிலும், ஒன்றிலுஞ் சம்பந்தப்படாத பரமயோக்கியன் போல நடப்பான். கெட்ட எண்ணமே எப்பொழுது மவனிடங்குடிகொண்டிருக்கும். தன்னாலாகாதகாரியங்களைத் தந்திரமாய்ப் பிறரைக்கொண்டு செய்துகொள்வான். இவன் சூதையறிந்து, உள்ளதத்துவமென்னவென்று கேட்டால், தன்னையொளிப்பான். பெரியோர்களண்டைபோய் அநேகம் சங்கதிகளை இச்சகமாய்வளர்த்துப்பேசி, தன்சங்கதியைப்பற்றி முடிவில் இரண்டொரு வார்த்தைசொல்லி வெகுநல்லவன்போல மாயாஜாலம்பண்ணுவான்; கடிதமெழுதுகையிலோவெனில், ஊர்வம்புகளையெல்லாம் வளர்த்தெழுதி, எதோமறந்துவிட்டவன்போலத் தன்காரியத்தைப் பற்றி முடிவில் இரண்டொரு வரிமாத்திரமெழுதுவான். இவ்வாறு உள்ளொன்று வெளியொன்றாய்ப் பேசிவருகின்ற ஆஷாடபூதிகள் வார்த்தையை மெய்யென்று நம்பி மோசம்போனவர் அநந்தங்கோடி. வஞ்சனைகாரனுக்குத் தானெடுத்தகாரியம் கைகூடிவருகையில், தான் அதைக்கண்டு சந்தோஷப்படாதவன்போல் பாசாங்குசெய்வான். தான்முழுப்பூசுணைக்காயைச்சோற்றிலே மறைக்கத்தக்க ஜாலக்காரனாயிருந்தும், ஹரிச்சந்திரனைப்போல மேலுக்குப்பேசுவான். தனக்கு ஆகவேண்டிய காரியங்களையெல்லாம் பிறரறிந்து தனதுசிந்தை வெளிப்படாமலே அநுகூலங்கிடைக்கும்படி வழிதேடுவான். தனக்கு ஆகாதவர்கள் விஷயத்தில் அநுகூலஞ்செய்வதுபோல முதலிற்காட்டி பின்பு அவர்களை வேரோடுகளைவான். யாரென்னசொன்னாலும் நல்லவன்போல ஊருக்கு மெய்க்கக்காட்டி, க்ஷாத்திரமே விரதமாகக்கொண்டிருப்பான். ஓரவஞ்சனை அவன் உடம்போடு காய்த்ததாயிருக்கும். தான்செய்கிற ஸாஹஸகிருத்தியங்களையெல்லாம் பிறரறியாமற் காப்பதிலே நாட்டமுடையவனாய், தர்மபுத்திரர்போல் தன்னைமிக நல்லவனென்று காட்டி வேஷம்போடுவான். ஊராருக்குத் தன்னை நல்லவனென்று காட்டுவதற்காகவே, தனக்கு வேண்டியவர்கள்மேல் வெறுப்பாயிருப்பதுபோலக் காட்டுவான். இந்நோக்கத்துடனே சிற்சில சமயங்களில், தன்னைக்கட்டிக் காத்திருக்கிறவர்கள் விஷயத்தில் சற்றே கெட்டவிதமாய் அபிப்பிராயப்படுகிறவன்போலக் காட்டுவான். இப்படிச்செய்வதென்னையெனின், தனது துரோகசிந்தையை மறைத்துத்தன்னை நல்லவனென்று வெளிக்குக் காட்டுவதற்கு வேறுவழியின்மையினாலேதான். வஞ்சனைகாரர்கள் அதிகாரிகளானால், அவர்களால் அநர்த்தத்தின்மேல் அநர்த்தமேயொழிய க்ஷேமங்கிடைப்பதரிது. மூடத்தனமே வஞ்சனைக்குக் காரணம். வஞ்சனைசெய்பவன் தன் கள்ளச்சிந்தை வெளிப்படாமலிருக்கும்படி என்னதான் தந்திரவாதியாயிருந்தாலும் எல்லாம் அப்படியே வெளிப்படும். அதிலும், அயோக்கியர்களுடைய ஸகவாஸமுஞ் சேர்ந்தால், காற்றும் நெருப்புங் கலந்தாற்போலப் பெருங்கேட்டை விளைக்கும். வஞ்சனை அதிகமானால், காமக்குரோதாதிகள் வரம்புகடந்து பேயா

ட்டமாட்டிவைத்து, ஊர்சிரிக்கும்படித் தெருவிலிழுத்து நாற்றத்தை யெல்லாங் கிளப்பிவிடும். வஞ்சனைகாரர்கள் அதன்வலையிலிருந்து தப்பி னலன்றி, அவர்களுக்கு க்ஷேமங்கிடையாது. வஞ்சனைகாரன் தனது சாமர்த்தியத்தைக்கண்டு வியந்து ஆனந்தப்படுகிறதுமுண்டு. இது மதியீனமே:—

"வஞ்சித் தொழுகு மதியிலிகாள்! யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு"

---

# பொருளினால் அவசியமாகச் செய்யவேண்டிய

## உத்தமதருமங்கள் - கஉ.

---

(முன் ௩௧ - ம் பக்கத்தொடர்ச்சி.)

எ. அன்னசாலை இல்லாத இடத்திலே அன்னசாலை ஸ்தாபித்து, சிரத்தையோடு ஸ்தலயாத்திரை தீர்த்தயாத்திரை செய்பவர்களுள்ளும் கடவுளுக்கு இடையறாது திருத்தொண்டு செய்பவர்களுள்ளும் வறியவர்களாய் உள்ளவர்களுக்கும், தொழில்செய்து சீவனஞ்செய்யச் சக்தியில்லாதவர்களாகிய குருடர் முடவர் சிறுகுழந்தைகள் வியாதியாளர்கள் வயோதிகர்கள் என்னும் இவர்களுக்கும், அன்னங்கொடுத்தல்வேண்டும். குருடர் முதலானவர்களுக்குச் சரீரசுகத்தின்பொருட்டு அன்னங்கொடுத்தன்மாத்திரத்தால் அமையாது; அவர்களுக்கு ஆன்மசுகத்தின்பொருட்டுக் கடவுளுடைய குணமகிமைகளைப் போதிப்பித்தலுஞ் செய்யவேண்டும்.

அ. வைத்தியசாலை இல்லாத ஊரிலே வைத்தியசாலை ஸ்தாபித்து; வைத்தியசாஸ்திரத்திலே அதிசமர்த்தர்களும் இரக்கமுடையவர்களுமாகிய வைத்தியர்களை ஏற்படுத்தி, வியாதியாளர்களுக்கு மருந்து செய்வித்தல் வேண்டும்.

கூ. ஆன்மார்த்தபூசைக்கும் பரமார்த்தபூசைக்கும் உபயோகமாகும் பொருட்டு, விதிப்படி திருநந்தனவனம் வைப்பித்துப் பாதுகாத்தல்வேண்டும். திருநந்தனவனத்துள்ள புட்பங்களைக் கடவுட்பூசையினன்றிப் பிறகருமங்களிலே உபயோகித்தல் அதிபாதகம்.

௰. குளம் இல்லாத ஊரிலே குளந்தோண்டுவித்தல்வேண்டும். தூர்ந்த குளத்திலே தூர்வாருவித்தல்வேண்டும். படித்துறையில்லாத குளத்துக்குப் படித்துறை கட்டுவித்தல்வேண்டும். கடவுட்பூசகர்களுக்கு உபயோகமாகும்பொருட்டுக் குளக்கரையிலே பூசைமண்டபம் கட்டுவித்தல் வேண்டும். ஸ்நானம் சந்தியாவந்தனம் தீர்த்தபானம் முதலியவைகளுக்கு உபயோகமாகுங் குளங்களை, சௌசஞ்செய்தல், அழுக்குவஸ்திரந் தோய்த்தல், இருதுவுடைய பெண்கள் ஸ்நானஞ்செய்தல், இலை முதலியவைகள் விழுந்து அழுகுதல் முதலியவைகளாலே அசுசி அடையாவண்ணம் காவலாளர்களை ஏற்படுத்திப் பாதுகாத்தல்வேண்டும்.

௰க. வழிப்போக்கர்களுக்கு நிழலிடும்படி வழிகளிலே மரங்களை வைப்பித்தல்வேண்டும். வழிகளிலும் குளக்கரைகளிலும் ஆவுரிஞ்சுகல் நாட்டல்வேண்டும். வழிகளிலே வேனிற்காலத்திலே தண்ணீர்ப்பந்தர்கள் வைத்தல்வேண்டும்.

கஉ. அநாதப்பிள்ளைகளை வளர்த்துக் கல்வி கற்பித்துவிடல்வேண்டும். திக்கற்ற விதவைகளை அன்னவஸ்திரங்கொடுத்துக் காப்பாற்றல் வேண்டும். விவாகமின்றி இருக்குங் கன்னிகைகளைப் பொருள்செலவிட்டு அவ்வவர் வருணத்திலே விவாகஞ்செய்து கொடுத்தல்வேண்டும். அநாதப்பிணங்களைச் சுடுதல்வேண்டும்.

## பேராசை பெருநஷ்டம்.

### இரசவாதிகளைநம்பி மோசம்போன தியாகராஜச்செட்டியார்கதை.

இரசவாதிகளை நம்பும் கனவான்களே! சிறிது கவனியுங்கள்.

கலிங்கநாட்டிலே அரிபுரத்திலே வணிகர் குலத்திலே ஞானசூரியன் என்றொருவன் இருந்தான். அவனுடைய புதல்வனாகிய தியாகராஜன் மிக்கசெல்வத்தை யுடையனாய், தருமங்களைச்செய்து பெரும்புகழ் பெற்றான். அவன் தன்னுடைய தந்தையும் தாயும் இறத்தலும், தமியனாகித் துயருழந்து, பின் ஒருவாறு தேறியிருக்கும்பொழுது, ஓரிரசவாதி முண்டிதமாகிய சிரசையும், குண்டலம் பொருந்திய காதையும், விபூதியைத் திரிபுண்டரமாகத் தரித்த நெற்றியையும், உருத்திராக்ஷ மாலையையும், பிரம்புபொருந்திய கையையும் உடையவனாய், அவனிடத்து வந்தான். தியாகராஜன், அவ்விரசவாதியைக் கண்டு, வணங்கி, தன் வீட்டினுள் அழைத்துக்கொண்டு சென்று, அமுது செய்வித்து, முகமன்கூறி, பின்பு அவனை நோக்கி, 'சுவாமி! நீர் இங்குவந்ததென்னை?' என்றான். வாதி அதுகேட்டு 'நம்மிடத்து ஒருவித்தை உளது. அது எவருக்கும் பேசுந்தன்மையதன்று. குருபத்தியுடையோருக்கு மாத்திரம் சொல்லத்தக்கது. நெஞ்சிற் சிறிதும் மாசில்லாத உனக்கு நாம் அதைச் சொல்வோம். இரசத்தினாலே வேண்டிய பொன்னைச் செய்வோம். காரிரும்பை நாகமாக்குவோம். மீட்டும் அதனைப் பொன்னாக்குவோம். ஈயத்தையும் இரசத்தையும் வெள்ளியாக்குவோம். வங்கத்தைப் பொன்னாக்குவோம். இரும்பிற் செம்புண்டாக்குவோம். ஈயத்தையும் அப்படியே செய்வோம். நமது வன்மையை உள்ளபடி சொல்ல விரும்பினேமாயின், அளப்பில்லாத வருடங்கள் வேண்டும். ஒருபொன்னைக் கோடிபொன்னாக்குவோம். கோடிபொன்னை மலைபோலக் கோடி பொன்னாக்குவோம். உன்பொருளனைத்தையும் தருவாயாயின், உன்வீட்டிலே அப்பொருளை வைத்தற்கு இடமில்லையென்னும்படி செய்வோம்' என்றான். இப்படிச் சொல்லிய வாதியைத் தியாகராஜன் வணங்கி, முன்னே தன்னிடத்துள்ள நிதியையும், பின்னே தன்னாலே சம்பாதிக்கப்பட்ட நிதியையும் பெட்டிகளில் உள்ள ஆபரணங்களையும் கொண்டுவந்து அவன்முன் வைத்தான். வாதி அவற்றை நோக்கி 'ஓகோ! வணிகரிற்றிலகனாகிய உன்னிடத்துள்ள செல்வம் இதுதானோ' என்று கைதட்டிச் சிரித்து, 'இப்பொருள் நமது வித்தையில் இறைக்கும் போதாது. இது நாம் உருக்குமுகத்திலே சிந்துகின்ற அளவுங்காணாது. நீ நமக்குப் பின்னே திரிவாயாயின், அளப்பில்லாத பொருள் தருவோம். இதனை வைத்துக்கொள்வாயாக' என்றான். அப்பொழுது தியாகராஜன் 'சுவாமீ, கோபிக்கவேண்டாம் நீர் வேண்டிய பெருநிதி முழுதும் தேடிக்கொண்டு வருவேன். இரும்' என்று சொல்லிவிட்டுப் போய், வஸ்திரங்களையும், நிலங்களையும், இரத்தினங்களையும், ஆபரணங்களையும், வீடுகளையும், ஆடுமாடுகளையும் விற்று, மதிமயக்கத்தினாலே தருமத்

தையும் விற்ருன். இவ்வாறு தேடிய பெருநிதியனைத்தையும் கொண்டு வந்து, வாதிமுன்வைத்து நிற்றலும், வாதி மனமகிழ்ந்து, அவையெல்லாவற்றையும் அக்கினியிலே உருக்கித் திரட்டி, ஒருருவாக்கி, அதனிரட்டி எடைகொண்ட இரசத்தை ஒரம்மியிலிட்டு, அப்பொன்முழுதையும் உரைத்து, அதனை உருட்டி, மட்குகையினுள்ளே மருந்தை உள்ளுறுத்திப் பொன்னை உள்ளிட்டு, அதனிடத்தே ஓர்களங்கத்தை இட்டு, சீலமண் செய்து, அக்கினியிலே நூற்றெட்டுக் குக்குடபுடமிட்டு, அதனைப்பார்த்து, 'மிகவும் மாற்று வந்தது, இனி ஒருவராகியிலே பழுக்கும். காற்றில்லாத ஒருறையுள்காட்டு' என்ருன். தியாகராஜன் ஒருறையுளைக் காட்டலும், இரசவாதி அதனுள்ளே போய், விறகின்மீது, சுடலையக்கினிகொண்டு வராகிமேலிட்டுப் புகைப்பித்தான். அதனுலே தியாகராஜன் கண்ணீர்பொழிய, சரீரம் வெதும்ப, எங்கும் வேர்ப்ப, ஊமைபோல் ஒன்றும் பேசாமலும், போகமுயலாமலும், சும்மாவிருந்தான். அப்பொழுது இரசவாதி பொற்குகையை எடுத்து, மெல்லெனத் தனது வஸ்திரத்தினுள்ளே மறைத்துக்கொண்டு, அதுபோலத் தன்னிடத்திருந்த வேறொருகுகையைப்பெய்த்துவைத்து, புகையைத் தணித்து, தியாகராஜனை நோக்கி; 'இக்குகையை உன்கையினுல் எடுத்து, இவ்வக்கினிமேல் வைப்பாயாக' என்ருன். தியாகராஜன் அப்படிச் செய்தலும், இரசவாதி அதற்குரியன யாவற்றையும் அமைத்துச் சேமஞ்செய்து, தியாகராஜனை நோக்கி, 'நீ உணவில்லாமலும், ஒருவரோடும் பேசாமலும், பிறரைப்பாராமலும், மூன்றுநாள் நம்மையே சிந்தித்துக்கொண்டிருக்கக் கடவாய். நாம் காளிசந்நிதியிலே ஒரு யாகம் முடித்தல்வேண்டும். முடித்துக்கொண்டு நாலாநாள் இங்கே வருவோம்' என்ருன். தியாகராஜன் 'அப்படியே செய்க' என்று சொல்லி, அவனை மும்முறை வணங்கி, அவன்பின் செல்லாது நின்ருன். இரசவாதி அங்கு நின்றும் விரைந்து நெடுந்தூரம் போய், உருமாறி, வேறோரிடத்தை அடைந்தான். தியாகராஜன் இரசவாதி விதித்தபடியே இருந்து, மூன்று நாட்செல்லலும், 'பெரியவர் சொல்லிய நாளெல்லை சென்றுவிட்டதே. இன்று வந்திலர். அவர் சொற்றப்புவாரா' என்று தளர்ந்து, காளிகோயிலினும் நகரத்தினும் அவனைத் தேடிக்காணுது மயங்கிவாடி, வீட்டுக்குத் திரும்பினுன். முன்வைத்த குகையை எடுத்துப்பார்த்து, அது இரும்பாயிருக்கக் கண்டு, மிகுந்த துயரமடைந்து வீழ்ந்திறந்தான்.

ஆகையால் பேராசைகொண்டு இரசவாதிகளைநம்பி மோசம்போகிறவர்கள் அநேகர். இனியாகிலும் அவ்வாறு மோசம்போகாதிருக்கும்படியே இங்குவிரித்துரைத்தோம். பேராசை பெருநட்டம் விளைக்கும் என்பதிற் சிறிதும் ஐயமின்று எனத்திடசித்தமாய் அறியக்கடவோம். இவ்விஷயத்தைச் சுட்டியே ஒரு பை புத்தகம் ஒன்று பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதனைப்பார்த்தும் அறிந்துகொள்ளலாம். அப்புத்தகம் பிரதி 1-க்கு பை ஒன்று. 100-க்கு விலை அணு ஆறு. வேண்டுவோர் மதராஸ் ரிப்பன் பிரெஸ், சை. ர. நமசிவாயசெட்டியாரிடத்திலே பெற்றுக்கொள்க.

---

## தாய்செய்நன்றி.

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று"

தாயானவள் பத்துமாதம் கர்ப்பத்திற் சுமந்து வருந்திப்பெற்று, கண் திறவாமல் இறகுமுளையாமல் இருக்கிற சிறுகுஞ்சுகளைப் பறவைகள், தம






து சிறகின்கீழ்ச்சேர்த்து அணைப்பதுபோல, ஈமொய்க்காமலும், எறும்பு கடியாமலும், குருகு பறவாமலும், வெய்யில்படாமலும், காற்றுவீசாமலும், பனிபெய்யாமலும், மார்பிலும் தோளிலும் வயிற்றிலும் அணைத்து,

"முன்னநின் னன்னை முலையூட்டி மையிட்டு மூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளிய நாளல்லகாமிணன்னைக் காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போர் விருபெண்கொண்ட ஆண்பிள்ளைநீ
இன்னமுஞ் சின்னவன்தானோ செந்தூரி விருப்பவனே."

என்ற பாட்டிற்சொன்னபடி முலையூட்டி, மூக்குச் சிந்தி, நாசியூதிச், செவியுருவி, நீராட்டி, நெற்றிக்கு திலக்காப்பிட்டு, விழிக்கு அஞ்சனந்தீட்டிப், பலபணிகளும் பூட்டி, கன்னங்கிள்ளி, உச்சிமோந்து, கண்ணோடு கண் வாயோடு வாய் முகத்தோடு முகம்வைத்துக் கொஞ்சி, முத்தாடி அருந்தனம்போலப் பாவித்துப் பொற்றொட்டிலிட்டு,

"ஆராரோ ஆராரோ ஆராரோ ஆராரோ
சீரார் பசுங்கிளியே தெவிட்டாத செந்தேனே
பேரார் குலக்கொழுந்தே பெருமானே ஆராரோ ஆராரோ
இருகண் மணியே இலஞ்சியமே யென்னுயிரோ
ஒருகுடைக்கீழ் நீயிவ் வுலகாள வந்தவனோ ஆராரோ
தெள்ளமுதகும்பமே தித்திக்குஞ் செங்கரும்பே
பிள்ளைகலிதீர்த்த பெரியமத குஞ்சரமே ஆராரோ
மாணிக்கக் கால்நாட்டி வஜ்ரவடம் பூட்டி
ஆணிப்பொற் றொட்டிலிட்டேன் அருமருந்தே கண்வளராய் ஆரா
அத்தைமடிமேலும் அம்மான்மார் தோள்மேலும்
வைத்துமுத்தாடும் மரகதமே கண்வளராய் ஆராரோ ஆராரோ;

என்று தாராட்டிச் சீராட்டி நாடோறும் வாயது, கையது, கொடுத்துப் போஷித்து, தன் கன்றுக்கிரங்குங் கறவைபோல நெஞ்சிரங்கி, நோயணுகாது மருந்தளித்துப் பத்தியமிருந்து, கண்ணை இமைகாப்பதுபோல அபாயம்வராமற்காத்து, நாளொருமேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து, பெற்றதாயென்று குறியாமல், தன்னைக் கைப்பிடித்தலாகிய செய்தற்கரிய குற்றத்தைச்செய்தாலும் அதை அப்படி நினையாமல், பிறருடனுஞ் சொல்லாமல், தன்புருஷனுக்கும் தெரியவொட்டாமல், தானுந்தண்டியாமல், ஐயோ மகனுக்குப் பித்தம் தலைமண்டைகொண்டு விட்டதேயென்று துக்கப்பட்டு, பித்தசாந்திக்கேற்ற சாதனங்களை அடுத்துச் செய்து, பின்பு இப்படிச் செய்தானே என்பதையும் கடுகளவாவது நினையாமல் அன்பாய்ப் பாவிப்பதையும் நாம் அறிகின்றோமன்றோ!

---

## சித்திரக்குள்ளன் கதை.

---

முன் ஒரு காலத்திலே ஒரு சிறுகுப்பத்தில் வேடன் ஒருவன் கட்டை வெட்டி விற்று ஜீவனஞ்செய்துகொண்டிருந்தான். அவனுக்குப் பிள்ளைகள் ஏழு. எல்லாம் ஆண்பிள்ளைகள். மூத்தவனுக்குப் பத்துவயது, கடைசிப் பிள்ளைக்கு ஏழுவயது; மூன்றுவருஷகாலத்தில் ஏழுபிள்ளை பிறந்தது எவ்வளவு ஆச்சரியமானது! தெய்வசங்கற்பத்தால் ஒவ்வொருதடவையும் இரண்டும் மூன்றுமாகப் பிள்ளைகள் பிறந்தபடியால் அப்படியாயிற்று. அவ்வளவு பிள்ளைகளையும் காப்பாற்றச் சக்தியில்லாமல் அவன் தரித்திரத்தால் மிகவும் வருத்தம் அனுபவித்துவந்தான். பிள்ளைகளுள் ஒருவனுக்கா




வது வேலைசெய்து சம்பாதிக்கத்தக்க வயதுவரவில்லை. மேலும் கடைசிப்பிள்ளை மிகவும் குள்ளனாயும், வாயைத்திறந்து ஒரு பேச்சும் பேசமாட்டாதவனாயும் இருந்தான். இது அவன் நல்ல புத்திசாலியாய் இருப்பான் என்பதற்கு ஒரு அறிகுறிதான். ஆயினும் அவன் தாய்தந்தையர்கள், கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பலாகாது என்பது அறியாமல், அவன் அறிவில்லாதவன் என்றும், வரவர மிகவும் மூடனாவான் என்றும் நினைத்திருந்தார்கள். அந்தப்பிள்ளை உலகத்துக்கு ஒரு அற்புதக் குள்ளனாய் இருந்ததனால் அவனுக்குச் சித்திரக்குள்ளன் என்று பெயரிடப்பட்டது. அந்தப்பிள்ளையை ஒரு எளிய ஊழியக்காரன்போல நினைத்து, வீட்டிலுள்ள வேலைகளையெல்லாம் அவனையே செய்யச்சொல்லி அடிப்பதும் அன்றி, எந்தப் பழிவந்தாலும் அதை அவன்மேலேயே சார்த்துவார்கள். எது எப்படியானாலும் ஆகட்டும்; அந்தச் சிறுவன் மிகவும் வல்லமையுள்ளவன். நன்றாய்ப்பேசத் திறமை இல்லாவிட்டாலும் கேட்டறிகிற சக்தியும், நன்மைதீமைகளைப் பகுத்தறிகிற திறமையும் அவனிடத்தில் அதிகமாய் இருந்தது.

இப்படியிருக்க, மழையில்லாமல் தேசமெங்கும் விளைவற்றுப்பாழாகிப் பெரும்பஞ்சம் உண்டாயிற்று. அப்போது அந்த வேடன் தன் பிள்ளைகளைக் காப்பாற்ற யாதொரு வழியும் தெரியாமல் அல்லாடித் தவித்துக்கொண்டிருந்தான். வரவர க்ஷாமம் அதிகமாகவே அவன் ஒன்றும் தோன்றாமல், அந்தப் பிள்ளைகளை எவ்விதமாயாவது ஒழித்துவிடுவதே நல்லதென்று எண்ணி, ஒருநாள் இராத்திரி பிள்ளைகள் எல்லாம் படுத்துத் தூங்கினபின்பு, தன் பெண்சாதியைப்பார்த்துப் பெருமூச்சுவிட்டு, என் அருமை மனையாட்டி, இந்தப் பிள்ளைகளைக் காப்பற்ற நம்மால் முடியவில்லையே! இத்தனை குழந்தைகளும் பசியால் வருந்தி நமது கண்முன்னே சாக நாம் எப்படிப்பார்த்திருக்கிறது! மரம்வைத்தவன் தண்ணீர்வார்க்காமல்போவானா? அவர்களைப் படைத்த கடவுள் தானே காத்துக்கொள்ளுகிறாரென்றாலும், குழந்தைகள் வருந்துவதைப்பார்க்க மனம் தாளவில்லையே! ஆதலின் நாளைக் காலையில் எழுந்தவுடன், மனுஷிய சஞ்சாரமில்லாத பெருங்காட்டு மத்தியில் இந்தப் பிள்ளைகளைக் கொண்டுபோய்விட்டு, அவர்கள் வேறுகாரியத்தில் பராக்காயிருக்கிற தருணம்பார்த்து அவர்களுக்குத் தெரியாமல் ஒரு கிளைவழியாய் ஓடிவந்துவிடலாம் என்று நினைக்கிறேன். பின்பு அவர்கள் தலைவிதிப்படியாகிறது. இதுதவிர இவர்களை ஒழிக்கச் சுலபமானவழி வேறொன்றும் தோன்றவில்லை என்றான். அதைக்கேட்டு அம்மனைவி துக்கத்தால் மனங்கலங்கி, அப்படி ஒருபோதும் செய்யலாகாது, நமது குழந்தைகளை நாமே மனம் ஒப்பிக் காட்டிலே துரத்திவிட நினைத்தால் பிறகு அவர்களுக்குக் கதியென்ன? நாம் எவ்வளவு கஷ்டப்பட்டாலும் குழந்தைகளைக் கொல்ல மனம் வருமா என்றாள். தான் என்ன வருந்தினாலும் பிள்ளைகளைப் பறிகொடுக்கப் பெற்றவயிறு பொறுக்குமா? அவன் அடுத்தடுத்துத் தான் படுகிற கஷ்டத்தை எத்தனைதரம் முறையிட்டும் அவள், எப்படித்தான் ஆகட்டும் நாம் அவர்களை ஒழிக்கக்கூடாது என்றே பதில்சொல்லிக்கொண்டுவந்தாள். ஆயினும் கடைசியில், என்னசெய்யலாம்; பசியால் வருந்திக் குழந்தைகள் கண்முன்னே பிராணனை விடுவதைப்பார்க்க, கண்மறைவாய் ஒழித்துவிடுவதே உத்தமமல்லவா என்று கணவன் சொன்னதையே ஒத்துக்கொள்ளும்படி நேரிட்டது. இவ்வாறு சிறிதுநேரம் பேசியபிறகு அவர்கள் இருவரும் படுத்துத் தூங்கினார்கள்.

(இன்னும்வரும்.)

# வியாதிமூலங்கள்.

(முன் 37-ம் பக்கத்தொடர்ச்சி.)

சிலர், மார்பகவியாதிகள் (Chest complaints) வந்தபோதும் அவ்வியாதிகளுக்குக் காரணமாயிருந்த குளிர்ந்துவீசுங் காற்றுமுதலிய சீதளஹாஸ்பதத்துக்கு வெற்றுடம்பை மேலுமேலும் வெளிப்படுத்தி (expose) அதனால் வியாதியைப் பலப்படுத்திக்கொண்டு வருந்துவதைத்தெரிந்த வைத்தியனொருவன் கண்டு உள்ளமிரங்கி வியாதியஸ்தனை நோக்கி, நீரிப்படி வெற்றுடம்போடு சீதளஹாஸ்பதந்தருங்காற்று, பனி, ஈரமுதலியவற்றிலிருக்கப்படாது, கம்பிளி அங்கியொன்று தரித்துக்கொண்டு மார்பகத்தை யிளஞ்சூடுகையாய் வைத்துக்கொள்வீராகில், வியாதி யதிகப்படாது, உட்கொள்ளு மௌஷதங்களும் நற்பயன்பட்டுச் சீக்கிரம் வியாதியும் நீங்கிச் சுகமடைவீரென்று இதமதியுரைத்தால், ஓ! எனக்கு இருமல் ஊஷ்ணத்தால் வந்திருக்கிறது, கம்பிளியங்கி தரித்தால் அதுதேகத்தை யதிக ஊஷ்ணம் பண்ணி இருமலை யதிகப்படுத்தும், என்று, வியாதிமூலங்களும் வியாதிலக்ஷணங்களுந் தெரியாமல் "தகப்பன்சுவாமிகளாய்ப்" பேசுகிறதுமுண்டு. இவர்கள்நிலைமை. பரிதாபம்! ஆப்தவாக்கியத்தை யலக்ஷியஞ்செய்தபேர்க்கு ஆபத்தென்றே மேலோர் கூறுவார்கள். அதுபோலவே, இவ்வியாதியஸ்தரும், தெரிந்தவைத்தியன்சொன்ன இதமதியை யலக்ஷியஞ்செய்ததற்கும், இயற்கையை யெதிர்த்ததற்குந் தண்டனை யனுபவியாமற்போகிறதில்லை. யாரையெதிர்த்தாலு மெதிர்க்கலாம், இயற்கையை (Nature) மாத்திரம் எதிர்க்கப்படாது. அது தயைதாக்ஷணியம் பார்க்கிறதில்லை. அக்கினியிற்சூடும், ஜலத்திற் றண்மையும் இயற்கையிலமைந்துள்ள தருமம். நெருப்பில் உடம்பையிட்டால், அது சுட்டேதீரும். ஜலத்தில் தேகத்தையிட்டால் அது குளிர்ச்சியையுண்டாக்கியேதீரும். குளிர் அல்லது பனிக்காலத்தில், ஆகாயத்தில் ஜல அணுக்கள் விசேஷமாய் நிறைந்து வியாபிக்கு முண்மையினாலேயே அவ்வாகாயம் (air) நம்மேற்படும்போது ஜிலுஜிலுப்பை யுண்டாக்குகின்றது. குளிர்ச்சியாகிய அந்த ஜிலுஜிலுப்பு நெடுநேரம் தேகத்திற்பட்டுக்கொண்டிருந்தால் தேகத்தில் சீதளமதிகப்பட்டு மேற்சொன்ன வியாதிகள் காணும். இது இயற்கையிலமைந்துள்ளவிதி. காரணத்தையும் பிரயோஜனத்தையும் (cause and effect) இலக்ஷணமாயுடையது இயற்கையாதலால், நாம் எந்தக்காரணத்தைக் கையாடுவோமோ, அதற்குரிய பிரயோஜனத்தைத் தவறுமல் அடைந்தே தீருவோம். இவ்வளவுங்கூறியதால், குளிர்ந்தஜலத்தில் ஸ்நாநஞ்செய்தலையும், காற்றில் உலாவுதலையும் கூடாதென்று யாம் சொல்லுவதாக நினைக்கப்படாது. வெங்குளிர்காலத்தில் வெற்றுடம்போடு நெடுநேரங் குளிரிலிருத்தலையும், பனிபோற் குளிர்ந்தஜலத்தில், சூரியஊஷ்ணம் வியாபித்தற்குமுன் ஸ்நாநஞ்செய்தலையும், மற்றுமிவைபோன்ற இயற்கை விரோதமான காரியங்களைச் செய்தல்மாத்திரந்தான் பிழையென்று சொன்னோம். இயற்கைத் தருமத்தை நன்கு கற்றுணர்ந்த விவேகிகள் என்சொல்லை யாதரியாமற் போகார்கள். அன்றியும், பலவீனரும், வயோதிகரும், வியாதியிலடிபட்டோரும், எக்காலத்துங் குளிர்ந்தஜலத்தில் ஸ்நாநஞ்செய்யாதிருத்தலே அவர்களது ஆயுசுவிர்த்திக்கு அனுகூலமாகும். இதுநிற்க.

வழக்கப்பட்டுவிட்டால் வெங்குளிர்முதலியவை தங்களை யொன்றுஞ்செய்கிறதில்லை; அதோ! அவருக்கு ஒன்றும்வருகிறதில்லை, இதோ! இவ

ருக்கு ஒன்றும் வருகிறதில்லே, என்று சிலர் சொல்லுகிறதுண்டு. ஆம், பழக்கத்தால் அநேக காரியங்கள் நமக்குச்சுவாதீனப் படுமென்பது உண்மையே. ஆனால், பழக்கத்துக்கு வருவதன்முன் அவற்றால்விளையுந் தீமைகளிலிருந்து தேறுவது, பலதடவைகளில் பிராணகண்டமாய் முடிந்தாலும் முடியும். அங்ஙனமுடிந்ததைப் பலர் அநுபவத்திற்கண்டுமிருக்கலாம். அன்றியும், அங்ஙனஞ் சீதளாஸ்பதந்தரும் காரணங்களிற்பழகி உரம்பெற்றிருக்கிறவர்களாக எண்ணப்படுவோருடனிருந்து பார்க்கில், அவர்களும், இயற்கைவிரோதமான காரியங்களிற்பழகிய நெடுநாள்பழக்கத்தால் விளைந்த ஒவ்வோர் வியாதிக்கு உட்பட்டவர்களா யிருக்குமுன்னம் விளங்காமற்போகாது. திட்டாந்தமாக, யாமறிந்த சிலவிடங்களில், பனி, மழை, காற்றுமுதலியவற்லைறச் சட்டைபண்ணமல், சாதாரணகாலங்களில் வெற்றுடம்போடு அல்லது மெல்லியவஸ்திரம்போர்த்து வெளியிற்றிரிவதுபோல் திரிந்தும், பனிபோற் குளிர்ந்தஜலத்தில் மூழ்கியும்வரும் சிலரைக் கண்டிருக்கிறோம். அவர்கள், மேற்பார்வைக்கு வெவ்வியசீதளத்தாற் பாதிக்கப்படாதவர்கள்போற் காணப்படினும், சுவாசகாசம் (asthma) முதலிய சீதளாஸ்பதத்தால் வரும் மார்பகவியாதிகட்கும், வேறு சிலவியாதிகட்கும் ஆட்பட்டே ஒரோர்கால் வருந்துகிறவர்களா யிருக்கிறார்கள். ஆனால், அவ்வியாதிகள், தாங்கள்பழகி வரும்பழக்கத்தால் விளைந்தனவென்றெண்ணமல், சூட்டினாலும், வாயுவினாலும் விளைந்தனவென்று சமாதானஞ்சொல்லிக்கொண்டு ஆ! இவர், மழை, பனி, குளிர்முதலியவற்றைச் சட்டைபண்ணுகின்றாரில்லே? என்று சிலர் மெச்சுவதற்கிச்சைவைத்து மேலுமேலும் அவற்றை யலக்ஷியஞ்செய்தே வருவார்கள். இது அவர்கள் கர்மாநுசாரமென்றே யநுதாபப்படத்தக்கது. இம்மட்டோ, புறம்பிலுள்ள அதிசீதோஷ்ணங்களுக்கு, (இயற்கைத் தருமத்தைக் கொஞ்சமும்மதியாமல்) உடம்பை வெளிப்படுத்திவரும் துர்வழக்கமுடையோருக்கு ஏதாவது வியாதிகள்வந்தால், அவை யிலேசாய்ப்போகிறதில்லே. சாவுக்கும் பிழைப்புக்குமாய் வருமென்பதே சத்தியம். கவனமாய்ப்பார்க்கில், இதற்குத் திருட்டாந்தம் உலகில் அநேகமகப்படும். (இன்னும் வரும்.)

## கண்ணேய்களுக்குக் கைகண்ட அவுடதங்கள்.

கண் ஒளி; கண்சிவப்பு; கண் நோய்; கண் எரிவு; கண் துடிப்பு; கண் நடுக்கம்; கண் குளிர்:—

அதிமதுரத்தை முலைப்பாலிலுரைத்து, நேத்திரத்திலிட ஒளியுண்டாகும்; அபினியுடன் குங்குமப்பூச் சேர்த்துக் கோழிமுட்டை மஞ்சட் கருவிலிழைத்துக் கண்ணில்விடக் கண்சிவப்பு நீங்கும்; காரீயத்தைக் கையிலுரைத்து, அந்த மை எடுத்துக் கண்ணிலிடக் கண்ணேய், கண் சிவப்பு, கண்ணெரிவு விரைவிற் சுகமாகும். ஜடாமாஞ்சில் கொத்தமல்லி இலேச்சாற்றிலுரைத்துக் கண்ணில்விடக் கண்சிவப்பை மாற்றும்; ஒளியுண்டாகும். சன்ன லவங்கப்பட்டையை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிட ஒளி அதிகரிக்கும்; நடுக்கல் நீங்கும்; துடிப்பை மாற்றும். தான்றிக்காயைச் சூரணஞ்செய்து சமனெடை சர்க்கரைசேர்த்து நித்தமும் ஒருவராகனெடையை வெந்நீரிற் சாப்பிட்டுவரக் கண்களுக்கு அதிக தெளிவுண்டாகும். விளாம் பிசினைப் பனிநீரில் உரைத்துக் கண்ணிலிடக் கண்சிவப்பு நீங்கிக் கண்குளிரும். கோரோசனையை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிடப் பிரகாசம் அதிகரிக்கும். பாம்பு தாஞுரித்த தோலைக் கஷாயமிட்டுக் கண்ணில் வார்த்துக் கழுவக் கண்ணேய் தீரும். துரிசு கண்க

ளுக்கொளி கொடுக்கும்; மூங்கிலுப்பைப் பன்பாஷாவின் எண்ணெயில் உரைத்துப் பூசக் கண்ணொளி அதிகப்படும். வெள்ளைக் குங்கிலியத்தை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிடக் கண்ணொளியுண்டாகும். பாம்பின் கொழுப்பைக் கண் இரப்பைகளில், மையிடுவதுபோலிடக் கண் சிவப்பு நீங்கும். மூங்கில் இலையின் மீதிருக்கும் பனிநீரைக் கண்ணிலிடக் கண் சிவப்பு நீங்கும். ஷாத்னுவென்னுங் கல்லை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிடக் கண்ணோய் கண்ணெரிவுமுதலிய சகலநேத்திரரோகங்களுந் தீரும். கசப்பு வாதுமைப் பருப்பை முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிடக் கண் பிரகாசமதிகப்படும்.

## இரைப்பையில் உண்டாகும் விசித்திர சேஷ்டைகள்.

(முன் 38-ம் பக்கத்தொடர்ச்சி.)

அந்தந்த சரியானகாலங்களில் தானாய்த்திறக்கவும் மூடிக்கொள்ளவும், உள்ளே போகவேண்டியவர்களை உள்ளேவிட்டு, வெளியிலே தள்ளவேண்டியவர்களைத் தள்ளவும் சக்தியுள்ள ஒரு கதவை ஒரு தச்சன் செய்வானாகில் அவன் மிகச்சமர்த்தனென்று நாம் மெச்சிக்கொள்வோமல்லவா? அத்தன்மையாகக் கதவைப்போலவே இந்தமூடியும் வெகு விசித்திரமாய் அமைக்கப்பட்டிருககிறது. இந்தமூடி மெதுவான அன்னப்பாகைக் குடலுக்குள் செலுத்தி மற்றதை இரைப்பையில் தள்ளாமற்போனால், சாப்பிட்டவுடன் ஒரு ஜாமகாலம்வரைக்கும் நமக்கு வெகு உபத்திரவம் உண்டாகும்; மரணம் நேர்ந்தாலும் நேரும்.

இப்படியிருக்க ஜீர்ணமாகமாட்டாத பதார்த்தங்களை நாம் புசிப்போமானால் வியாதியுண்டாகும்; எனெனில் அந்த விசித்திரமான மூடியானது நம்பிக்கையுள்ள வாசற்காப்பானாகக் கண்காணித்து ஜீர்ணமாகாததைப் பலதரம் இரைப்பைக்குள் தள்ளித்தள்ளிப் பார்த்துக் கடைசியில் தன்னாலும் கூடாவிட்டால் குடலுக்குள் விட்டுவிடும்; அப்போது நமக்கு இரைப்பையிலும் குடலிலும் வருத்தம் உண்டாகும். (ஜ-னி.)

## போகிப்பண்டிகை பொங்கல்பண்டிகையின் விபரம்.

ஒருவருஷத்தில் உத்தராயணமென்றும் தக்ஷிணாயனமென்றும் இரண்டு அயனமுண்டல்லவா? அவற்றுள் உத்தராயணமாவது:—சூரியன் வடபாதிகோணத்தைச்சார்ந்த மகரமுதல் மிதுனம் ஈறாக ஆறுராசிகளில் சஞ்சரிக்கும் காலம். தக்ஷிணாயனமாவது:—தென்பாதி கோளத்தைச்சார்ந்த கற்கடகமுதல் தனுசு ஈறாகிய ஆறு ராசிகளில் சஞ்சரிக்கும் காலம். அயனம் சஞ்சாரம்; உத்தரம்—வடக்கு; தக்ஷணம்—தெற்கு. நம்முடைய ஒரு வருஷம் தேவதைகளுக்கு ஒருநாள்; ஆகையால் உத்தராயணம் பகலும், தக்ஷிணாயனம் இரவுமாகும். இராக்காலத்தின் கடைசி முகூர்த்தம் பகற்காலத்துக்கு விடியற்காலமானதுபோல, சூரியன் தனுசில் சஞ்சரிக்குங்காலமாகிய மார்கழி மாதம் உத்தராயணமாகிய பகலுக்கு விடியற்காலமாகின்றது. ஆனதால், இந்த மாதமுழுதும் விடியற்காலத்தில் நீராடிக் கடவுளைப்பூசித்துத் தோத்திரம்செய்வது விசேஷமென்று சாஸ்திரம்சொல்லியபடி, இத்தேசத்தில் தேவாலயங்களிலும், கிரகங்களிலும் பூசைகளும், உற்சவங்களும் நடந்து வரும். இந்தமாதமுழுதும் விரதமிருந்தவர்களுக்கு இஷ்டம் நிறைவேறியிருப்பதாகப் புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படிப்பட்ட விசேடமாதத்தின் கடைசியாய் இஷ்டசித்தி பெற்ற நாளாயிருப்பதால், இந்தநாளுக்கு போகியென்று பெயருண்டாயி





ற்று. போகத்திற்கிடமானகாலம் போகி. போகமென்பது சுகத்தை யனுபவித்தல் அன்றைக்கு விடியற்காலத்தில் பெருந்தி கொளுத்திக் குளிர்காய்வதும், தப்பட்டைகளைக கொட்டுவதும், இழிந்தவர்களுடைய வழக்கம். இது ஆதாரமற்றது. இந்த நாளில் ஆலயங்களில் சிறப்பான திருவிழா நடக்கும். மாளிகைகளில் ஓகோனா வகைகள் பணியார வகைகளோடு இஷ்டரும் தாமும் விருந்துகொண்டாடுவார்கள். பொங்கற்பண்டிகையென்பது உத்தராயணத்தின் முதல்நாள். அன்றைக்குத் தான் சூரியன் வடபுறம் திரும்புகிறான். இத்தேசத்தில் இதற்கு முந்திய காலமெல்லாம் விளைவுகாலமாயிருந்தது, இக்காலமோ தானியங்களை அறுத்துச்சேர்க்கிற காலமாயிருப்பதால், சூரியன் முகாந்திரமாய் விளைவுக்கு வேண்டிய மழை முதலானதுகளை பெய்வித்து க்ஷேமத்தையுண்டாக்கின கடவுளுக்கு உபசாரமாய், முதலில் அறுத்த தான்யத்தின் அரிசியைப் பாலும் வெல்லமுஞ்சேர்த்துச் சமைத்துப் பழம்முதலிய சிறப்போடு சூரியனுக்கு அல்லது சூரியமண்டலத்தில் எழுந்தருளி இருக்கிற கடவுளுக்குப் படைத்து பந்துக்கள் முதலானவர்களுடன் பெருநாள் கொண்டாடுவார்கள். ஞானிகளோ, இந்நாளை நினைத்துப் பரமாத்வைத் தியானம் பண்ணுவார்கள். இதற்குமுன்பே பேதை ஜனங்கள் வீடுகளைப்பழுதுபார்த்து செப்பனிட்டு வைப்பார்கள். தைமாதம் இரண்டாந்தேதியாகிய இப்பொங்கலின் மறுநாள், உழவுமுதலான சகலத்துக்கும் இந்நாட்டாருக்கு மாடுகளே விசேஷ உதவியானதுபற்றி, அந்தமாடுகள் விர்த்தியடையவேண்டுமென்னும் கோரிக்கையினால் பிற்பகலில் பொங்கலிட்டுக் கடவுளுக்குப் படைத்துத்துதித்து, மாடுகளை அலங்கரித்து கீதவாத்தியங்களோடு ஊர்க்கோலமாக வருவார்கள். பொங்கல் இடுவதினால் இந்நாட்களுக்கு பொங்கலென்று பெயர்வந்தது. பயிர் வளப்பத்தின் நன்றிக்காகப் பொங்கலிட்டு முதனாளைப் பெரும்பொங்கலென்றும் மாடுகளின் வளர்த்திக்காகப் பொங்கலிடும் மறுநாளை மாட்டுப்பொங்கலென்றும் சொல்வார்கள். செல்வமுள்ள மருமகன் முதலானோர்க்கும் சிநேகிதர்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் கோடிவஸ்திரங்கள் கொடுப்பார்கள். இந்த இரண்டு நாளிரவிலும் அடுத்த நாட்களிலும் ஒருவரையொருவர்கண்டு "பால் பொங்கிற்றா" என்று க்ஷேமம் விசாரித்து, தாம்பூலம் முதலிய உபசாரங்களைப் பெறுவார்கள். இவ்வழக்கம் பெரும்பாலும் பிராமணர்களல்லாதாரிடத்திலேயே உண்டு. இது ஒரு முக்கியநாள்.

### பாலப்பருவமே படிப்புக்குத்தகுதி. (இளமையிற்கல்.)

சிறுபிள்ளைகளுடைய மனம் இளக்கமாயும் மிருதுவாயுமிருப்பதால், இளமைப்பருவத்தில் அவர்களுக்குப்போதிக்கும் கல்வியும் சுகுணங்களும் அவர்களுடைய புத்தியில் பதிந்துநன்றாய்வேரூன்றிக்கொள்ளும். பெரியவர்களானபின்பு போதிப்பதினால் பிரயோஜனமில்லை. பொன்வெள்ளி முதலிய பஞ்சலோகங்களையும் மெழுகு, ஸ்படிகம் முதலியவைகளையும் உருக்கி இளகி யிருக்கும்பொழுது, வேண்டிய விக்கிரகங்களையும், நகைகளையும், பாத்திரங்களையும், செய்துகொள்வது போலவும், சச்சைமண்ணைக் கொண்டு பலகடாதிகள்செய்வதுபோலவும், உழுதுதிருத்தி இளக்கமாயிருக்கிறநிலத்தில் வேண்டியதானியங்களைவிதைப்பது போலவும், இளமைப்பருவத்திலே வித்தையையும், நற்புதுமையையும் கற்பிக்கவேண்டும். "விளையும்பயிர்முளையிலேதெரியு" மென்பதுபோல நற்குணமுந் தூர்க்குணமும் சிறுபிராயத்திலே உண்டாகித்தேகத்துடன் வளருகிறபடியால்பயிரிட்டவன் அடிக்கடி களைபிடுங்கிச்சர்வ ஜாக்கிரதையாகப்பயிரைக்காப்பா

 

ற்றுவதுபோல சிறுவர்களுடையபுத்தியில் துர்க்குணமாகிய களைகள் வளராதபடி தாய்தகப்பன்மார்கள் எப்போதும் எச்சரிக்கையா யிருக்கவேண்டும். சிறுபிள்ளைகளுடைய ஒவ்வொருவார்த்தையையும் செய்கைகளையும் நடைகளையும்கவனித்து அவர்களிடத்தில் நன்மையைக்காணும்பொழுது பிரியத்தைக்காட்டியும், தீமையைக்காணும்பொழுது தகுந்தபுத்திசொல்லியும் நயமும்பயமுமாய்ப் பிள்ளைகளைவளர்க்கவேண்டும். பிள்ளைகளை அதிகமாய்க் கண்டிப்பதனால் அவர்கள் தாய்தகப்பன்மார்களுக்குப் பயந்து பல பொய்களைச்சொல்லவும், கபடம், வஞ்சகம்முதலான துர்க்குணங்களைக்கற்றுக்கொள்ளவும், ஆஸ்பதமுண்டாவதுந் தவிரத் தாய்தகப்பன்மார்களிடத்தில் வெறுப்பு உண்டாகுமானதால் பிள்ளைகளை அதிககண்டிப்புசெய்வது தகுதியல்ல. பிள்ளைகள் குற்றஞ்செய்தாலும் அதைப்பொய்சொல்லி மறக்காமல் உண்மையை ஒப்புக்கொள்வார்களானால் மெய்சொன்னதற்காக அவர்களிடத்திற் பிரியத்தைக் காட்டவேண்டுமேதவிர அவர்கள் செய்த குற்றத்தைப் பாராட்டக்கூடாது. தாய்தகப்பன்மார்கள் நல்வழியில் நடத்தாதுபிள்ளைகளும் துன்மார்க்கத்தில் நடப்பார்களானதால் தாய்தந்தைகள் எப்போதும் புண்ணியவழியிலே நடக்கவேண்டும்.

## பாகசாஸ்திர விநோதங்கள்.

### நெல்லிக்காய் ஊறுகாய்.

௪-படி உப்பும் ௪ பலம் மிளகாயும், வகைக்கு ௧வ-பலம் வெந்தயம் சீரகம் மஞ்சள், ௨-பலம் கடுகு, இவைகளையெல்லாம் வறுத்துப்பொடிசெய்துவைத்துக்கொள்ளவேண்டும். பின்பு பதினைந்து படி நீரையாவது ௬-படி மோர் சேர்த்த ௫-படி நீரையாவது கொதிக்கவைத்துக் கொதிக்கிறசமயத்தில் அதிக முற்றலாய்க்காயப்படாததாயுள்ள ௮-படி நெல்லிக்காய்களை அதிற்கொட்டி ஒரு நாழிகைவரையும் வைத்து, அப்புறம் எடுத்து வெள்ளைத்துண்டால் துடைத்துக்கொண்டு மேற்படி பொடியில் ௮-பலம் நல்லெண்ணெய் விட்டுப்பிசைந்து அதைஅக்காய்களோடு சேர்த்துப்பிசறி ஒரு ஏனத்தில் ஆழாக்கு நெய்வார்த்து அடுப்பிலேற்றி கடுகொதிக்கும்பொழுது அரைப்பலம் உரித்த வெள்ளைப்பூண்டும் வகைக்கு ௧வ-பலம் ஆக வெந்தயமும் சீரகமும், கொட்டி தாளித்துப் புகை அடங்குகிறபரியந்தம் மூடிவைத்துப்பிற்பாடு வேறொருசாடியில் கொட்டிக்கொண்டு வெள்ளைக்குட்டையால் வாயைக்கட்டி ௮-நாள் வைத்துப்பின்பு உபயோகப்படுத்தவேண்டும்.

### தேங்காய்த் துகையல்.

நல்ல தேங்காயை உடைத்து ஓட்டைப்போக்கிவிட்டு அதனை நெகிழ அரைத்து ௨-பலம் உளுத்தம்பருப்பும் ஒருரூபாயெடை மிளகாயும் நெய்யில் வறுத்து இவ்விரண்டையும் தேங்காயுடன் போதுமான உப்புஞ்சேர்த்து மறுபடியும் ஒன்றாக அரைத்து ஒருநல்லபாத்திரத்தில் பத்திரப்படுத்தி புதியபோசனத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்ளவும்.

### பால் கறி.

இரண்டுபடி எருமைப்பாலைக் காயவைத்து பொங்கிவரும்போது அதில் உழக்குத்தயிர்விட்டுக் கலக்கி பால்முறிந்து வரும்போது எடுத்து உடனே ஒருவஸ்திரத்தில்விட்டு முட்டையாக ஒருகயிற்றினால் இறுகக்கட்டி மேலே மூன்று சாமம்தொங்கவிட்டு பின்பு மூட்டையை அவிழ்த்து உண்டையை அவிழ்த்து உண்டையை எடுத்து வில்லையாக அரிந்து மேற்சொல்லிய விதமாய் சித்தப்படுத்திய குழம்பில் விட்டுப் புசிக்கவேண்டியது. போகமுண்டாம்.

உ

NO. 6. கடவுள்துணை. நெ. சூ.

# விவேகசுந்தரம்.

விநாயகர் துதி.

நல்ல சொற்பொரு ளாளு நடாத்தவும்
எல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வெல்லு மானை முகத்தினை மேவிவாழ்
வல்லபைக் குரி யானை வழுத்துவாம்.



## விநோதக் கதை.

### சூரிய சந்திர வாயுக்கள் விருந்துண்டது.

ஒருநாள் சூரியன், சந்திரன், வாயு இவர்களெல்லாம் தங்களுக்குச் சிற்றப்பனும் சிற்றம்மையுமாகிய இடிமின்னல்களுடனே ஓரிடத்திற்கு விருந்துண்ணப்போனார்கள். அவர்களுடைய தாய் (அதாவது ஆகாயத்தில் வெகுதூரத்திலே நமது கண்ணுக்குப் புலப்படுகிற நக்ஷத்திரங்களுள் ஒன்று) தனியே இருந்துகொண்டு தன் மக்கள் எப்போதுதிரும்பிவருவார்களோவென்று அவர்கள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள்.

சூரியன் வாயு ஆகிய இருவரும் பேராசைகொண்டவர்களும் தன்னயம் பார்க்கிறவர்களுமாயிருந்தார்கள். வீட்டில் தாயொருத்தியிருக்கிறாளே, அவளுக்கு ஏதாவது ஒரு துளி கொண்டுபோய்க் கொடுப்போமென்கிற எண்ணம் எள்ளளவுமில்லாமலே அந்தச் சூரிய வாயுக்கள் இருவரும் தங்களுக்கு அளித்த நல்விருந்தைத் தாங்களே திருப்தியாய்ப் புசித்துக் களிப்படைந்தார்கள். சாந்தகுணமுள்ளசந்திரனோ தன் தாயை மறக்கவில்லை. தனக்குப் பரிமாறின ஒவ்வொரு பண்டத்திலும் சிறிது சிறிதுபங்கு எடுத்துத் தன் தாய்க்கு என்று ஒரு மூட்டையாகக் கட்டி வைத்துக்கொண்டான்.

மிகவும் பிரகாசமுள்ள தன்கண்களைக்கொட்டாமலே மலரவிழித்துக்கொண்டு நெடுநேரம் தன் மக்கள் வருகிறவழியையே பார்த்துக்கொண்டிருந்த தாய், அவர்கள் திரும்பி வீட்டண்டை வந்தவுடனே, "என் அருமைக்குழந்தைகாள்! நீங்கள் எனக்கு என்னகொண்டுவந்தீர்கள்." என்று கேட்க, மூத்தமகனான சூரியன் "நான் ஒன்றும் உனக்காக வீட்டுக்குக் கொண்டுவரவில்லை. நான் என்நேசர்களோடு உல்லாசமாய்விருந்துண்ணப் போனேனேயன்றி, தாய்க்குச் சோறெடுத்துக்கொண்டு வருவதற்கன்றே" என்றுசொன்னான். பின்பு வாயுவானவன்: 'அம்மா! நானும் ஒன்றுங்கொண்டுவரவில்லை. விநோதத்திற்காக நான் எங்கேயாவது வெளியேபோனால், அப்பொழுது நீ நமக்கு நல்ல வுணவுகள் வந்து சேருமென்று ஒருபோதும் எதிர்பாராதே" என்று சொன்னான். கடைசியில் சந்திரன்: "என்தாயே! ஏதாவது ஒரு ஏனங்கொண்டுவா, இதோ நான்






கொண்டுவந்த பண்டங்களைப்பார்' என்று சொல்லித் தன் கைக்குட்டையில் கட்டிவைத்திருந்ததை அவிழ்த்துக்காட்டினான். அதிலிருந்தவையெல்லாம் அவள் ஒருநாளும் கண்டிராத சிறந்த வாசனையும் ருசியுமுள்ள இனியபண்டங்களாயிருந்தன.

அதைப் பார்த்தவுடனே தாய்நக்ஷத்திரம் சூரியனைநோக்கி: அடா! நீ உன் விநோதத்தையே பெரிதாய் நாடி வீட்டில் தாய் ஒருத்தி இருக்கிறாளேயென்கிற எண்ணமேயில்லாமல், உன் வயிற்றைமாத்திரம் நிரப்பிக்கொண்டு களித்துவந்ததனால், இன்றுமுதல் உன் கிரணங்களெல்லாம் நெருப்புப்போல் வெப்பமுடையவைகளாகவும் எதையும் எரித்துப்போடத்தக்க தன்மையுடையவைகளாகவும் ஆகக்கடவன: உன் கொடுமையைக் கண்டு யாவரும் உன்னைப் பகைக்கக்கடவர்கள்; உன்னைக் கண்டவுடனே எல்லோரும் தங்கள் தலையை மூடிக்கொள்ளக்கடவர்கள் என்று சாபமிட்டாள். அதனாலேதான் சூரியன் நாளைக்கும் கொடிய வெப்பமாய் எரிகிறான்.

அதன்பின்பு அவள் வாயுவைநோக்கி: உன் கோலாகாலத்திலும் கொந்தளிப்பிலும் நீ சிறிதேனும் என் நினைவேயில்லாமல் என்னைமறந்துபோனாயல்லவா? ஆகையால் எதையும் எரிக்கிற கிரீஷ்மகாலத்திலேயே நீயும் வெப்பமாய் வீசத்தலைப்பட்டு எந்தப்பிராணியையும் வதக்கிக்கொளுத்தக்கடவை; அதனால் உன்னை எவரும் அருவருத்துத் தடுக்கக்கடவர்கள் என்று ஆணையிட்டாள். அதனாலேதான் கோடைகாலத்தில் தீக்காற்று மிகவும் நாம் வெறுக்கத்தக்கதாயிருக்கின்றது.

அவள் கடைசியாய்ச் சந்திரனைநோக்கி: என் அருமைக் குழந்தாய்! நீ சுகமனுபவிக்குங்காலத்திலும் உன் தாயை மறவாமல் அவளுக்கும் உன் உணவிற் சிறிதுபங்கு கொண்டுவந்ததனால், இது முதல் நீ எப்போதும் குளிர்ந்தகுணமும், சாந்தமும், ஒளியும் பொருந்தியிருக்கக்கடவை. மிகவும் தெளிவான உன் கிரணங்களோடு விஷத்தன்மையுள்ள கிரணம் ஒன்றும் சேராது; பிராணிகள் உன்னை எப்போதும் குளிர்ந்தவன் என்று கொண்டாடக்கடவர்கள் என்று வாழ்த்தினாள். இதுதான் சந்திரகிரணம் எக்காலத்திலும் அழகாயும் சீதமாயும் யாவரும் நேசித்துக் கொண்டாடத்தக்கதாயும் இருப்பதற்குக் காரணமாம்.

---

## பெண்கள் புருஷர்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள்.

ஸ்திரீகள் படித்தால் புருஷர்களுக்கு அடங்கமாட்டார்களென்று சிலர்சொல்லும் ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ் சொல்லுகிறோம். பக்ஷி எவ்வளவு உயரப்பறந்தாலும் ஆகாயத்துக்கு உட்பட்டிருப்பதுபோல, ஸ்திரீகள் எவ்வளவுபடித்தாலும் புருஷர்களுக்குத் தாழ்ந்தவர்களேதவிர மேற்பட்டவர்களல்ல. சிருஷ்டிக்கிரமத்தில் ஸ்திரீயைப்பார்க்கிலும் புருஷன் சிரேஷ்டனென்பதற்கு அநேக சாக்ஷிகள்உண்டு. சகல சமயத்தார்களும் தெய்வத்தை ஆண்பாலாகப் பேசுகிறார்களேயல்லது பெண்பாலாக ஒருசமயத்தாரும் பேசவில்லை. கடவுள்முந்தி ஆணை உண்டுபண்ணிப்பிறகு பெண்ணை உண்டுபண்ணினதாகச் சகல மதஸ்தர்களும் நிராக்ஷேபமாக அங்கீகரிக்கிறார்கள். சரீரபலம், தைரியம், பராக்கிரமம், விவேகம் அறிவு, முதலிய சாமார்த்தியங்களில் ஸ்திரீகளைப்பார்க்கிலும் புருஷர்கள் விசேஷித்தவர்களென்பது நிஸ்ஸந்தேகமா யிருக்கின்றது. சிலஸ்திரீகள் மேற்கண்ட சாமர்த்திய விஷயங்களில் சிலபுருஷர்களுக்கு மேற்பட்டிருந்தாலும் இருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட சாமர்த்தியமுள்ளபெண்




களையும், புருஷர்களையும் எண்ணிப்பார்க்குமிடத்தில் புஜபலபராக்கிரமும் புத்திதீக்ஷண்யமும், விவேகமும் உள்ள புருஷர்களுடைய தொகை அதிகரிக்குமென்பதற்கு அற்பமும் சந்தேசமில்லை. இராஜர்கள் மந்திரிகள்பிரதானிகள், தளகர்த்தர்கள், படைவீரர்கள், முதலிய சகல அதிகாரிகளும், மற்றஉத்தியோகஸ்தர்களும், புருஷர்களேதவிரப் பெண்கள் அல்லவே.

இங்கிலீஷ் தேசமுதலிய சிலதேசங்களில் தவிர, இதரதேசங்களிலெல்லாம் பெண்கள் பட்டாபிஷேகத்துக்கு அருகர்களென்று திரஸ்கரிக்கப்படுகிறார்கள். இங்கிலீஷ் தேசத்திற்கூட இராஜகுடும்பங்களில்புருஷசந்ததி யில்லாமற்போனால் மட்டும் ஸ்திரீகளுக்குப் பட்டங்கட்டலாமென்கிற விதி யிருக்கின்றது.

சத்துருக்களுடன் யுத்தஞ்செய்து செயித்தல், துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் செய்தல், சட்டசாஸ்திரங்கள் உண்டுபண்ணுதல், பாலம், இருப்புப்பாதை முதலியவைகளைக் கட்டுதல், ஆறு, குளம், எரி, முதலியவைகளைவெட்டுதல், காடுவெட்டிக்கரம்பு திருத்திப் பயிரிடுதல், தேசாந்தரங்களிலும் தீபாந்தரங்களிலும்சென்றுவியாபாரங்கள்செய்தல், நாட்டிலும், காட்டிலும், கடலிலும், கரையிலும் பலவிதமாகப் பாடுபடல் இவைமுதலிய தேசநன்மைக்கடுத்த சகலகாரியங்களும் புருஷர்களால் நடத்தப் படுகின்றனவே யல்லாமல் பெண்கள் அந்தவேலைகளுக்குச் சுத்த அசமர்த்தர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்குச் சகஜமான துர்ப்பலம்அதைரியம், பேதைமைத்தனம், நாணம், அச்சம், முதலியகுணங்களாலும், கர்ப்பம், பிரசவம் முதலிய துன்பங்களாலும் அவர்கள் கஷ்டமான தொழில்களுக்கும் மற்றையஉத்தியோகங்களுக்கும் அசக்தர்களென்பதை அவர்களே நிர்விவாதமாக ஒப்புக்கொள்ளுவார்கள்.

---

## நீதிவாக்கியங்கள்.

(முன் 39-ம் பக்கத்தொடர்ச்சி.)

31. உண்ணும்வகை யறிந்து உண்ணுதலும், உண்டபின் நூறடி உலாவுதலும், பகலிலே நித்திரை செய்யாமையும், வாரந்தோறும் எண்ணெய் இட்டுத் தலைமுழுகுதலும் உளவாயின், உடம்பிலே நோய்உண்டாகாது.

32. நீ உன் உடம்பை வளர்த்தற்குப் பிறிதொன்றின் உடம்பை உண்பையாயின், எவ்வகையால் அருளை ஆளுவை?

33. உன் உள்ளத்திலே செல்வமிகுதியால் அகந்தைதோன்றுமாயின், உன்னின் மிக்காருடைய செல்வத்தையும், வறுமைமிகுதியால் துக்கந்தோன்றுமாயின், உன்னின் இழிந்தாருடைய வறுமையையும், நினை; நினைப்பாயாகில், அகந்தை துக்கங்கள் உன்னை எக்காலத்தும் அணுகாவாம்.

34. சூதாடலானது, ஒன்றினை முன் பெற்று இன்னும் பெறுவேன் என்னும் கருத்தால் நூற்றினை இழந்து வறியன் ஆதற்கு ஏதுவாம்; ஆதலால், அதனை ஒருபொழுதும் நினைத்தலும் செய்யாதொழி.

35. சூதாடலை விரும்புவாய் ஆயின், காலமும் கருத்தும் பெறப்படாமையால், கல்வி, செல்வம், ஊன், உடை என்பன உன்னை அடையாவாம்.

36. நன்மை தீமையைப் பகுத்தறியும் அறிவை மயக்கி, அது பயக்கும் ஒழுக்கத்தைக் கெடுத்தலால், கள்ளுண்டலே பாவத்துக்கெல்லாம் தலையாயது.

37. சரீரவருத்தத்துக்கு அஞ்சிப் பிறதொழில்களைச்செய்து பொருள் பெற்றும், உணவின்பொருட்டும் வேளாளரிடத்துச் செல்லல்வேண்டுதலாலும், பொய்முதலிய பாவம் கலவாமையாலும், வேளாண்மைக்கு நிகராவது ஒன்றும் இல்லை.

38. செல்வம் முதலியவற்றினாலே செருக்கு அடைந்து, முன் உன்னோடு பயின்ற சிநேகிதனை மறந்துவிடாதே.

39. பாவத்துக்கு அஞ்சிப் பொருள்சம்பாதித்து, பெரியோர்களுக்கும் வறியவர்களுக்கும் பங்கிட்டு, நீயும் உண்ணு.

40. பாவத்தால்வந்த பிறன்பொருளைப்பங்கிட்டு உண்பையாகில், தருமம் பொருளுடையானையும், பாவம் உன்னையும் அடைந்து, உன் சந்ததி நாசம் அடையும். (இன்னும்வரும்.)

---

## திருக்கோயிலிலே செய்யலாகாத குற்றங்கள்.

ஆசாரமில்லாதுபோதல், கால் கழுவாது போதல், சனனசௌசமரணசௌசத்தோடுபோதல், எச்சிலுமிழ்தல், மலசலங்கழித்தல், மூக்குநீர்சிந்துதல், அபானவாயு விடுதல், பாக்குவெற்றிலையுண்டல், தம்பலமுமிழ்தல், போசனபானம்பண்ணுதல், நித்திரை செய்தல், மயிர்கோதிமுடித்தல், சூதாடல், சிரசிலே வேட்டிக்கொள்ளுதல், தோளிலே உத்தரீயமிட்டுக்கொள்ளுதல், போர்த்துக்கொள்ளுதல், சட்டையிட்டுக்கொள்ளுதல், வாகனமேறிச்செல்லுதல். குடைபிடித்துக்கொள்ளுதல், பாதரட்சையிட்டுக்கொள்ளுதல், உயர்ந்த தானத்திருத்தல், ஆசனத்திருத்தல், தூபி துசத்தம்பம்பலிபீடம், விக்கிரகம் என்னும் இவைகளின் சாயையை மிதித்தல், விக்கிரகத்தையும் நிர்மாலியத்தையும் தீண்டுதல், பெண்களைத் தீண்டல், பெண்களை இச்சித்துப் பார்த்தல், ஒருதரம் இருதரம் நமஸ்கரித்தல், ஒருதரம் இருதரம் வலம்வருதல், ஓடி வலம்வருதல், கடவுளுக்கும் பலிபீடத்துக்கும் குறுக்கே போதல், அகாலத்திலே தரிசித்தல், வீண்வார்த்தைபேசுதல், சிரித்தல், வீண்கீதம்பாடல், வீண்கீதம் கேட்டல், திருவிளக்கவியக்கண்டும் தூண்டாதொழிதல், திருவிளக்கில்லாதபோது வணங்குதல், உற்சவங் கொண்டருளும்பொழுது அங்கேயன்றி உள்ளே போய்வணங்குதல் முதலானவைகளாம். இக்குற்றங்களுள் ஒன்றை அறியாதுசெய்தவர் கடவுளுடைய மந்திரத்தைச் செபிக்கின், அக்குற்றம் நீங்கும். இக்குற்றங்களை அறிந்துசெய்தவர் நரகத்தில் வீழ்ந்து வருந்துவர், அவருக்குப் பிராயச்சித்தமில்லை.

---

## உழைப்பின் சிறப்பு.

உழைப்பு எவ்வளவு சிறப்புள்ளது! அது என்னென்ன அருமையான காரியங்களைச் செய்கிறது பார்! அது தன் உத்தேசத்தை நிறைவேற்றுவதில் எவ்வளவு வருத்தமாயிருந்தாலும் அஞ்சுகிறதில்லை; எவ்வளவுமுயற்சி வேண்டுவதாயிருந்தாலும் தளருகிறதில்லை. எவ்வளவு இடுக்கண்வந்தாலும் பின்வாங்குகிறதில்லை; மனிதருடைய நல்லவாழ்க்கையை வளர்ப்பதில் ஆரவாரத்தோடு அருணோதயமாகிய பொற்கதவைக் கைகளால் தள்ளிக்கொண்டுபோய் எப்போதும் ஊற்றமுள்ளதாய் ஒரு நிமிஷங்கூட வீண்போகவொட்டாமல் எப்போது விடியப்போகிறது விடியப்போகிறது; என்று காத்திருந்து, வேலைக்கு ஆரம்பித்து நாள்தோறும் நவநவமான மகோபகாரங்களைச் செய்துகொண்டே வருகின்றது.

காட்டை அழித்து, சதுப்புநிலத்தைச் சீர்ப்படுத்தி, பார்க்கப் பயங்கரமான வெட்டவெளியைக் கண்ணுக்கு இனிப்பாகத் தளிர்க்கச்செய்வது எது? ஏர் உழுது, நிலத்தைக்கொழுமையாக்கி, பயிர்செய்து, தாறிப் பழுத்தபின் அறுப்பறுத்து, உணவுக்கு உபயோகப்படும்படியாகப் பக்குவம்பண்ணி, இவ்வுலகத்திலுள்ள கோடாகோடி ஜனங்களையும் போஷிக்கிறது எது? செங்கல் சூளைபோட்டு, சுரங்கத்திலிருந்து கல்வெட்டியெடுத்து, அரசர்கள் வசிக்கத்தகுந்த சிங்காரமான அரண்மனைகளையும், அடியில்பருத்து நுனியில் சிறுத்து அழகாய் விளங்கும் கோபுரங்களையும், விந்தையானபற்பல கட்டடங்களையும் கட்டுவது,எது? பூமியின்கீழ்க் கிடக்கும் பாறைகளைப் பரிசோதித்து, பொன் வெள்ளி பித்தளை தகரம் இரும்பு முதலிய உலோகங்களை எடுப்பதும், இரும்பை உருக்கிப்பெரியஸ்தம்பம் முதல் சிறிய ஊசியீறுகவும், கனமான நங்கூரமுதல் இலேசான கம்பியீறுகவும், புகையந்திரத்தை இயக்கும் சக்கரம்முதல் மெல்லிய வளையமீறுகவும் உள்ள பற்பலவித சாமான்களாகச் செய்வதும் எது?

காட்டிலுள்ள மரத்தை வெட்டிக் கப்பல்செய்து, அகாதமான சமுத்திரத்தின்வழியாய் அலைகளை இலட்சியம்பண்ணுமலும் புயலுக்குப் பயப்படாமலும் நாலு திக்குகளிலுமுள்ள தேசங்களெல்லாம் சுற்றி அங்கங்கே அகப்படும்நல்லபொருள்களைப்பிறதேசங்களுக்குக் கொண்டுபோய்ப் பிறதேசங்களிலுள்ள சிறந்த பொருள்களை அவைகளுக்கு மாறுகக்கொடுத்து, இப்படியே ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு நகரத்திலும் ஒவ்வொரு ஊரிலும் அவரவர்கள் இனிதுவாழ்வதற்கு வேண்டிய சகல சாமான்களையும் நிரப்பி, இவ்வுலகத்தின்கண்ணுள்ள யாவரும் ஒரேதன்மையாய்ச் சௌக்கியம் பெறுதற்குக் காரணமாக நிற்கின்ற வர்த்தகத்தை நன்றாய்த் தழைத்துச் செழித்தோங்கும்படி செய்வது எது?

மந்தமான பாறைகளின்றும் பற்பலவகைக் கண்ணுடிகள்செய்து அவைகளைத் தகுந்தவிதமாய் ஒன்றோடொன்றுசேர்த்து, கண்ணுக்குச்சம்பவிக்கும் பார்வைதோஷங்களைப் போக்கடித்து, தூரத்திஞல் கண்ணுக்குத் தெரியாமலிருந்த அண்டங்கள் இவ்வளவு அளவுள்ளவை இவ்வளவு நிறையுள்ளவை என்று சரியாகச் சொல்லும்படி அவ்வளவு சமீபத்தில் இருக்கிறதுபோல் கண்ணுக்குக்காட்டி, மிகவும் நுட்பமாய்ப் பார்வைக்குப் புலப்படாமலிருந்த அணுக்களும் இப்படிப்பட்ட அதிசயமானகாட்சியா என்று வியக்கும்படி செய்வது எது?

அற்பலோகங்களைப் பொன்னுக மாற்றுவதற்கு ஒரு இரகசியமான உபாயம் உண்டென்கிறுர்கள்; அதைவிட விசேஷமகிமையுள்ள உபாயத்தை உடைத்தானதாய், ஒன்றுக்கும் உபயோகமில்லையென்று தள்ளப்படும் பொருள்களை, மிகவும் உயர்ந்த பதார்த்தங்களாகமாற்றி, தரையிலும் தண்ணீரிலும் உண்டாகும் குப்பைகோதுகளினின்று ரசாயனசாஸ்திரவிதிகளின்படி வாசனையுள்ள திராவகங்களையும் ஆரோக்கியமான மருந்துகளையும் இன்னும் இவைபோன்ற மேலான பல பதார்த்தங்களையும் எடுக்கிறது எது?

அசாத்தியமாகவும் பிரயாசமாகவும் காணப்படும் செய்கைகளைஎவ்வளவும் லட்சியம்பண்ணுமல், பெரிய பிரவாகமாக ஓடும் நதிகளை அளவிட்டு, உளைவிழும் சதுப்புநிலத்தின்மேல் செவ்வையான பாதைகளை உண்டுபண்ணி, அழகான காலுறுகளின்மேல் அந்தரத்தில் தொங்குவதுபோல் வாரதிகள் கட்டி, பாறைகளைத் துளைத்து மலையின் கீழாகக் குகைபோல் வழிபண்ணுவதுஎது? பள்ளம் மேடாம், மேடு பள்ளமாம் என்






னும் பழமொழியின் கருத்தை இப்பூமியிலுள்ள எல்லாத்தேசத்தாரும் ஒத்துவாழும்படிக்கூட்டிவைப்பதனால் நிறைவேற்றுவதுமல்லாமல், அந்த சொற்களுக்குப் பதப்பொருள் எப்படியாகின்றதோ அதையும் உண்மையாக்குவது எது?

ஒரு நகரத்திலிருந்து மற்றொருநகரத்திற்கும், ஒரு தேசத்திலிருந்து மற்றொருதேசத்திற்கும், மலைகளின்வழியாகவும், சமுத்திரத்தின் வழியாகவும் மெல்லியதாய் இரும்புக்கம்பியை இழுத்து அதன்வழியாய் வாயுவேகமும் மனோவேகமும் இணையென்று சொல்லலாகாத வேகத்துடன் சமாசாரம் தெரிவித்து, ஒருவரும் கனவிலும் நினைக்கவொண்ணாத இந்த அதிசயத்தைச் செய்வது எது?

புத்திமான்களிடத்தினின்று உதிக்கிற விஷயங்களையும், சாஸ்திரபாரங்கதருடைய கொள்கைகளையும், பெரியோர்களுடைய புத்திமதிகளையும் எல்லாரும் எக்காலத்திலும் அறிந்துகொள்ளும்படி வெற்றுக்கடுதாசியில் அச்சிட்டு அதற்குக் கற்பிக்கும் திறமையைக் கொடுப்பது எது?

பளிங்குக் கல்லினால் கட்டி, சூரியகாந்தியில், தளதளவென்று பிரகாசிக்கிற வில்வளைவான மண்டபங்களோடு கூடி, வெற்றிஸ்தம்பங்களும் மற்ற ஜயக்குறிகளும் நிறைந்து அலங்காரமுள்ளவைகளாய் கட்டடங்கள் கட்டி கண்ணுக்கு இன்பத்தைக்கொடுப்பது எது?

நிர்மானுஷியமான பிறதேசத்துக்குள் பிரவேசித்து, ஜாலவித்தைக்காரன் தன் கையிலேந்திய மந்திரக்கோலைச் சுழற்றி விநோதத்தைக் காட்டுவதுபோல், சுத்த சூன்னியமான பள்ளத்தாக்குகளில் நவதானியங்களும் செழித்துப் பயிராகவும்; வெறுங் கல்மலைகளிலெல்லாம் பசுமையான மரங்களடர்ந்த சோலைகள் நிறையவும் உலக்கடம் முதலான கைத்தொழிற் சாலைகள் விளங்கவும், உலோகங்கள் முதலானவைகளை அடிக்கும் நாதங்களும், பல சக்கரங்கள் சுழலும் யந்திரசாலைகளின் ஒலிகளும் ஓங்கவும், வாணிபங்கள் வேரூன்றிச் செழிக்கும் அடைக்கலஸ்தானமாயும், சகல சாஸ்திரங்கள் முழங்கும் விலாசமண்டபமாயும், சமயசித்தாந்தங்கள் ஓங்கி வளருகிற திவ்வியாலயமாயும், கோபுரம்முதலாகிய மேலான கட்டடங்கள் உயர்ந்து காட்சிதருவதான நகரம் தோன்றவும் காரணமாயிருப்பது எது? பிறதேசத்துச் சாமான்கள் கப்பல் கப்பலாய் வந்திறங்குவதும், இவ்விடத்துப்பொருள்கள் அவ்விடங்களுக்கெல்லாம் போவதுமாக வர்த்தகத்தை விருத்திசெய்து, சாஸ்திரநியாயங்களால் பஞ்சபூதங்களையும் மன்னுயிர்க்கு உதவியாகும்படி ஸ்வாதீனப்படுத்தி, கைத்தொழில்களை உண்டுபண்ணி, அவ்வேலைகளுக்கு அழகைக்கொடுக்கச் சிற்பவித்தைகளைக் கற்பித்து, இவைகளெல்லாம் அழியாமல் என்றென்றைக்கும் விளங்குவதற்குச் சாதனமாகக் காவியங்களைப் பெருக்கி, நாகரீகம் பரவச்செய்து, ஜனங்கள் சகல க்ஷேமங்களையும்பெற்று சந்தஷ்டியையும் அனுபவிக்கும்படி அனுகூலித்து நல்லொழுக்கமும் தெய்வபக்தியும் மேன்மேலும் விருத்தியாகும்படி வகைதேடுவது எது?

இப்படியாக நாற்புறங்களிலும் விளங்கும் எண்ணிறந்த அதிசயமான காரியங்களைச் சாதிப்பது உழைப்பல்லவா? அப்படியானால் உழைப்புக்குச் சிறப்பு இல்லையென்று யார்தான் சொல்வார்கள்?

## தந்தைசெய்நன்றி.

தந்தையானவன் பசியாமல் ஊணும் உடையுந்தந்து, துஷ்டசகவாசஞ் செய்யவாவது, ஓடி யொளித்துத் தூர்த்தனாய்த் திரியவாவது, சூதா




டிப் பொய்பேசிப் புறங்கூறவாவது, தாசிகாந்தனாய் வேசிவீடுநுழையவாவது, துர்வியாச்சியந் தொடுக்கவாவது தன்னிச்சையாய்விடாமல் அடக்கி,

"அள்ளிக் கொடுக்கின்ற செம்பொன்னுமாடையு மாதரவாக்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்கு மென்னைக் குறித்ததல்லால்
துள்ளித்திரிகின்ற காலத்திலே யென் துடுக்கடக்கிப்
பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே."

என்று நினைத்து, பின்பு தான் வியசனப்படுதற்கு ஏதுவாகத்தன்னை மூடனாய்ப் போகவொட்டாமல், இதந்தெரிந்து ஐந்துவயதிலே கல்விக்சழகத்தில் விடுத்துப் பூரண பண்டிதனாகக் கல்விபயிற்றுவித்து, சபையாரெல்லாம் பூஜ்யதைபண்ணத்தக்க யோக்கியனாம்படி செய்வதையும்மறவாமல்,

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்" என்பதனாலும் "தந்தை தாய்ப்பேண்" என்பதனாலும், அவர்களைத்தெய்வமாக எண்ணி இகழாமல் வணங்கி அவர்களுக்குக் கீழமைந்து, அவர்கள் குற்றங்களைப் பிறரறியாது மறைத்து, "தாய்சொலிற் சிறந்த வாசகமில்லை" என்றும், "தந்தைசொன் மிக்க மந்திரமில்லை" என்றுஞ் சொல்வதனால்,அவர்கள் சொல்லைக்கடவாமற் சிரசாவகித்து மாதிரு பிதிருவாக்கிய பரிபாலகனாய், தாய் தந்தையர் தன்னை அன்னவஸ்திராதிகளிற் குறைவில்லாமற் போஷித்ததுபோல, ஒன்றுலொன்றுங் குறைவில்லாமல் அன்புடனே தானும் அவர்களைப் போஷிக்கவேண்டும். பெற்றவர்களுக்குப் புத்திரனன்றிப் போஷகன் வேறேயார்?

குழந்தைப் பருவத்தில் தானிச்சைபட்டுக் கேட்ட பதார்த்தங்களை எல்லாம், தனக்கவர்கள் பிரியத்துடன் வழங்கியதுபோல, முதுமையில் அவர்கள் ஆசைப்பட்ட பண்டங்களை எல்லாம், தன்னைக் கேளாததற்கு முன்னமே குறிப்பறிந்து தான் அவர்களுக்கு வழங்கவேண்டு மல்லவோ? "தாயிடப்பிள்ளையிடத் தானேமகிழ" என்கிறார்களே.

தன்மேல் ஈப்பறவாமல் அவர்கள் தற்காத்ததுபோல, அவர் மேல் தூசுபறவாமல் தானும் பாதுகாக்க வேண்டும்.

மாதிரு பிதிரு கைங்கரியம் தனக்கு லபிக்க வேண்டுமென்று, தான் கடவுளைப் பிரார்த்தித்து, எதிர்பார்த்திருந்து, அவர்கள் தேகவியோகமானவுடனே அவர்களுக்குப் பிரேதசமுஸ்கார முதலாகிய கடன்களெல்லாம், லோபமில்லாமற் சிரத்தையுடனே நடத்தவேண்டும். தாய்கடன் கழிப்பதற்குச் சர்வசங்க பரித்தியாகஞ் செய்த சந்நியாசிகளும் காத்திருக்கின்றார்களே. இதற்குத் திருஷ்டாந்தம்:—முற்றத்துறந்த பட்டினத்தாராகிய திருவெண்காட்டடிகள், தாய் இறக்கு மளவும் காத்திருந்து அவள் மரித்தபின்பு, வாழைமரங்களைக்காஷ்டமாக அடுக்கி அதன்மேல் அவளைக் கிடத்தி வாய்க்கரிசியிட்டு,

"முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையில்
அன்னையிட்டதீ யடிவயிற்றிலே
யானுமிட்டதீ மூள்க மூள்கவே."

என்று சொல்லிக் கொள்ளிவைத்துக் குடமுடைத்துப் பால்தெளித்து உத்தரகிரியைகளும் செய்துமுடித்துச் சென்றாரொன்பதே.

தனதுகல்வி, அறிவு, ஆண்மை, பொறுமை, உண்மை, ஒழுக்கமுதலியவைகளைப் பார்த்து, இந்த மகானுபாவன் வித்தையில் அகத்தியனோ, அறிவில் ஆதிசேஷனோ, ஆண்மையில் விக்கிரமாதித்தனோ, சாந்தத்தில் தருமராஜனோ, வாய்மையில் அரிச்சந்திரனோ, நீதியில் மநுச்சக்கரவர்த்தி

யோ, என்று அதிசயித்து அம்மம்மா! "மகன்றந்தைக்காற்று முதவியிவன் றந்தை - என்னோற்றான்கொ லெனுஞ்சொல்" என்றபடி இவனைப்பெறு வதற்கு இவன்பிதா என்னதவத்தைச்செய்தானோவென்று சகலமானவர் களும் சொல்லும்படி, நல்லகீர்த்தியைப் பிதாவுக்குச் சம்பாதித்துக் கொடு க்கவேண்டும். பெரும்பாலும் தாய் தந்தையர்பெயரை விளக்குகிறதற்குத் தானே பிள்ளைபிறக்கிறது. (இன்னுமவரும்.)

---

## சித்திரக்குள்ளன் கதை.

(சடு-வது பக்கத்தொடர்ச்சி.)

கடைசிப்பிள்ளையான சித்திரக்குள்ளன் தூங்காமலே தன் பெற்றோர் பேசியதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். தகப்பன் பேசத்தொ டங்கினவுடனே அவன் தன் படுக்கைவிட்டு அவர்கள் படுக்கையண்டை போய் ஒளித்து, அவர்கள் பேசினதை எல்லாம் நன்றாய் உற்றுக்கேட்டி ருந்தான். அவர்கள் பேசிமுடிந்தபின்பு மறுபடி தன் இடத்திற்கு வந்து, காலையில் எழுந்து தான் செய்யவேண்டுவது என்னவென்றுஅதைப்பற்றி ஆலோசனை செய்துகொண்டே அந்த இரவு முழுமையுங் கழித்தான்.

விடியுநேரமானவுடனே எழுந்து அவன் ஆற்றங்கரைக்கு ஓடி, அநே கம் சிறு வெள்ளைக் கூழாங்கற்களைப் பொறுக்கி மடி நிரம்பக் கட்டிக்கொ ண்டு வீடுவந்துசேர்ந்தான். அவன் வந்தவுடனே முதனாள் இராத்திரி தீர் மானம்செய்தபடியே அந்தவேடன் தன்மனையாளோடுகூடப் பிள்ளைகளை எல்லாம் அழைத்துக்கொண்டு காட்டுக்குப்போகப் புறப்பட்டான். இரா த்திரி நடந்த செய்தியைப்பற்றித் தன் சகோதரர் ஒருவரோடும் ஒருபேச் சுகூடப் பேசாமல் சித்திரக்குள்ளனும் அவர்களைப் பின்தொடர்ந்துபோ னான். வெகுதூரத்திற்கு அப்பால், ஒருவரைவிட்டு ஒருவர் இரண்டடி ஒதுங்கினால் ஒருவர் கண்ணுக்கு ஒருவர் தெரியமாட்டாத ஒருபெருங்காடு இருந்தது; அவ்விடம்போனவுடன் வேடன் கட்டைகள்வெட்ட ஆரம்பித் தான். பிள்ளைகளும் அங்கங்கே இறைந்திருந்த குச்சுகளையும் கட்டைகளை யும் பொறுக்கத் தொடங்கினார்கள். அந்தப் பிள்ளைகள் வேறுநினைவேயில் லாமல் அதிக உற்சாகமாய் வேலைசெய்கிற தருணம்பார்த்துத் தாய்தந்தை கள் இருவரும் அவர்களுக்குத்தெரியாமல் மெல்லமெல்ல அவ்விடம்விட்டு நழுவி வீட்டுக்கு வந்துவிட்டார்கள்.

சிறிதுநேரம் கழித்து அந்தப்பிள்ளைகள் திரும்பிப்பார்த்துத் தங்கள் மாதாபிதாக்களைக் காணாமல் கதறத்தலைப்பட்டார்கள். சித்திரக்குள்ளன் தான்ஆற்றங்கரையினின்றும், பொறுக்கிவந்த கற்களை வெகு ஜாக்கிரதை யாய் வழிமுழுதும் அடையாளமாகப் போட்டுக்கொண்டு வந்தபடியால், அதைப்பார்த்துக்கொண்டேவீடுபோய்ச்சேரலாமென்றுதைரியமாய், தன் சகோதரர்களோடு மற்றொன்றும் சொல்லாமல், அவர்கள் போனால்போ கட்டும், பயப்படவேண்டாம்; பிசகாமல் என்பின்னேயே வருவீர்களா னால் நான் உங்களைச்சரியாக வீடுகொண்டு சேர்க்கிறேன் என்றுசொன் னான். அதைக்கேட்டு அவர்கள் அழுவதைவிட்டுச் சந்தோஷமாய்க் குள் ளன்பின்னேயே போனார்கள். அவன் அவர்களையெல்லாம் முன்வந்தவழி யே அழைத்துக் கொண்டுபோனான். வீடுபோய்ச் சேர்ந்தவுடன் பிள்ளைக ளெல்லாம் தாய்தந்தையர்கள் என்னசொல்லிக் கொள்ளுகிறார்களோ கேட்போம் என்று கதவைத்தட்டாமல் கதவோரமாய் ஒளித்துக்கொண்டு நின்றார்கள்.





அந்தவேடன் பிள்ளைகளைக் காட்டில் ஒழித்துவிட்டு வீடுவந்துசேர்ந்தவுடன் ஒரு கனவான், தான் நெடுநாளாய் அவனுக்குக் கொடுக்கவேண்டியிருந்த ரூபாய் இருபதையுங்கொடுத்து அனுப்பினான். தனக்கு ஒரு காசுகூட வரவேண்டுவதில்லையென்று நினைத்திருக்க, திடீரென்று இருபது ரூபாய் வரவே மிகவும் சந்தோஷமடைந்து வேடன், நெடுநாளாய்ப் போஜனம் இல்லாமல் இருந்ததனால் உடனே கடைக்குப்போய் எழெட்டு பேர் புசிக்கத்தக்க பழம் பணியாரம் முதலியவைகளை வாங்கிவந்தான். பிள்ளைகளெல்லாம் வீட்டிலிருக்கிறார்கள் என்ற நினைவாய் அவன் அவ்வளவு வாங்கிவந்ததேயொழிய வேறன்று; பிள்ளைகள் இல்லையென்பதை மறந்தான். வீட்டில்வந்து உட்கார்ந்து புசிக்கப்போகிற தருணத்தில் அவன் மனையாள் பிள்ளைகளை நினைத்துக்கொண்டு, ஐயோ! நம்பிள்ளைகள் இப்பொழுது ஆதரவற்று எங்கே அல்லாடுகிறார்களோ? இந்நேரம் பசியெடுத்துத்தவிப்பார்களே! நாம் இவ்வுணவை அவர்களுக்கு எப்படிக்கொண்டுபோய்க் கொடுக்கிறது! இது உன்னுடைய ஆலோசனைக்குறைவால் அல்லவோ நேர்ந்தது! நன்றாய் ஆலோசியாமல் அவசரப்பட்டு ஒரு காரியம் செய்துவிட்டால் பின்பு பச்சாத்தாபப்படும்படி நேரிடும் என்றுமுன்னமே நான் சொல்லவில்லையா? இனி அதைச்சொல்லிப் பயனென்ன? இந்நேரம்கோநாயோ குடத்தியோ, நம் அருமை மக்களைப் பிடுங்கித்தின்று விட்டிருக்குமே, ஐயோ! என் அருமைக் குழந்தைகாள்! உங்களுக்கு என்ன காலம் வந்துவிட்டது! என்று இப்படிப் பலதரம் புலம்பினாள்.

கதவண்டைநின்று இவை எல்லாம் கேட்டுக்கொண்டிருந்த பிள்ளைகள், இதோ வந்திருக்கிறோம்; இதோ வந்திருக்கிறோம்; தாயே! நீவிசனப்படவேண்டாம் என்று கூவினார்கள். அதைக்கேட்கவே தாய் ஆநந்தத்தால் உடம்பு பூரித்து ஓடிவந்து, பிள்ளைகளைக் கட்டியணைத்து முத்தமிட்டு, உள்ளே அழைத்துக் கொண்டுபோய் மிகவும்பரிவாய் அவர்களுக்குப் போஜனமிட்டு அவர்களோடு சிலநாள் சுகமாக வாழ்ந்திருந்தாள்.

(இன்னும்வரும்.)

---

## வைத்தியம்.

### மூக்கில் ஓடிவரும் உதிரம், நீர்வடிதல், சளி, ஜலதோஷம்.

காப்புலிக் கடுக்காயின் சாம்பலை மூக்கிலேற்றுவதினால், மூக்கிலோடிவரும் உதிரம் உடனே நிற்கும்; நல்ல மாட்டுப்பால் பலம் நான்கை ஜெயித்தூ ணெண்ணையிலாவது, நல்லெண்ணெய் பலம் பதினெட்டிலாவது கரைத்து மறுநாள் கரிநெருப்பிற் கொஞ்சம் சுண்டும் வரையில் வைத்திருந்து, வடித்துப் புட்டியி னிரப்பி, காற்றுப்போகாம லடைத்துவைத்து, வேண்டியபோதெடுக்கவும். இதை முகர்ந்தால் ஜலதோஷம் நீங்கும்; சலாரசம் என்னும் சலாரஸ் என்பதை வெந்நீரிற் கலந்து உட்கொள்ளப் பேதியின் வழியாகச் சளி, ஜலதோஷம், மூக்கில்நீர்வடிதல் தீரும். இதன் புகை பிடிப்பதற்கு மிதுவே குணம். சாம்பிராணிப் புகை பிடிக்க ஜலதோஷம் நீங்கும்; அரத்தையை ஆக்கிரணிக்கச் சளிபோம், பனிநீரைச் சுடவைத்து இளஞ் சூடாய்க் குடிக்க மூக்கில் நீர்வடிதலை நீக்கும்; பருத்திக்கஷாயத்தை வெய்து பிடிக்க ஜலதோஷம் நீங்கும். ஒருபங்கு காடியும், இரண்டுபங்கு தேனுமாகச்சேர்த்துப் பதமாய்க்காய்ச்சிவைத்துக்கொண்டு வேளைக்கொருமுறை குடிக்க ஜலதோஷ முதலிய சில ரோகங்கள் தீரும்.

---





 



## வியாதிமூலங்கள்.

(சஎ-வது பக்கத்தொடர்ச்சி.)

சாதாரணமாக நமது வைத்தியர்களுக்கும், வெற்றுடம்பைக் காற்று முதலியவற்றுக்கு வெளிப்படுத்துவதனால் (Exposure) வருந்தீங்குகளின்னவையென்று அநேகருக்குத்தெரியாது. உப்பு புளியில்லாக் கடும்பத்திய மாத்திரம் எந்தவியாதிக்கும் வைத்தவிடத்தெரியும். வியாதிவரும் வழிகளையும், வந்தவியாதி யதிகப்படுவதற்கான முக்கியகாரணங்களையுங் கண்டறிந்து அவற்றிற்குத்தக்க ஏற்பாடுகள் செய்கிறதில்லை. வியாதிசொஸ்தப்படுவதற்கு மருந்தொன்றேபோதாது. இடம், உணவு, உடைமுதலியவற்றை வியாதியொழிவுக்குக் குணமாகத்தெரிந்து வியாதியஸ்தனுக்கமைக்கவேண்டுவதோடு, குளுங்காற்றுமுதலிய வற்றால் வருங்கெடுதிகள் தடைபண்ணுவதற்கான ஏற்பாடுகள் செய்யவேண்டுவதும் அத்தியாவசியகம். வியாதிவந்ததற்கு, அல்லதுவந்தவியாதி யதிகரித்ததற்குக் காரணம், நேற்றென்ன, சுரைக்காயுண்டனையோ? எண்ணெயிட்டுத்தாளிதஞ்செய்துகொண்டனையோ? கடுகு சேர்த்துக்கொண்டனையோ? வேண்டாமென்ற உப்பு புளி கறியிலெதையாவது கலந்துகொண்டனையோ? ஊறுகாய்த் தொட்டுக் கொண்டனையோ? என்றிப்படி அகாரணவஸ்துக்கள் எல்லாங் காரணமாய்க்கேட்பது பெரும்பான்மையும் நமதுவைத்தியர்களுக்கு வழக்கம். யோசிக்குமிடத்து, அப்படிப்பட்ட வைத்தியரிடமிருந்துதான் நமதுஜனங்கள் சாதாரணமாய் வியாதிகளுக்கு மூலம் பூர்வஞ்சொன்னதுபோற் சொல்லக்கற்றுக்கொண்டார்களெனத் தோற்றுகிறது. வெற்றுடம்பைக் குளிர்ந்து வீசுங்காற்று முதலியவற்றிற்கு நெடுநேரம் வெளிப்படுத்துங் கொடியவழக்கத்தை விடும்படி வைத்தியன் வியாதியஸ்தனுக்குக் கண்டிப்பானகட்டளையிடவேண்டும். இது, வைத்தியன்செய்யும் பத்தியஏற்பாட்டில் முதன்மைபெற்றும் அதிமுக்கியமானதுமாயிருத்தல்வேண்டும். இங்ஙனம் வியாதியை வருவிக்க, அல்லது அதிகப்படுத்தும் வழிகளைமுதன்முதலடக்காமல், வெறுங்கடும்பத்தியம்வைத்து வியாதிக்கு ஔஷதப்பிரகாரஞ் செய்யவாரம்பித்தவினாலேயே பல தடவைகளில், வியாதிகள் ஔஷதங்கட்கு வசப்படாமலும், அற்பவியாதியாயிருந்தது பலத்தவியாதியாகியும், வைத்தியனைத் திப்பிரமிக்கச் செய்கின்றன. இதுமட்டோ, ஷையேற்பாடுகளைச் செய்யாதொழிவதனால், சீக்கிரஞ்சொஸ்தப்படவேண்டிய வியாதிகள் நெடுநாள்நீடித்துச் சொஸ்தப்பட்டுக் கடைசியாக வியாதியஸ்தனைச் சிலசமயங்களில் அற்பகாலத்துக்கோ, அல்லது தீர்க்ககாலத்துக்கோ, ஒன்றுக்கு முதவாதவனுகவுமாக்கி விடுகிறதுந்தவிர இனிவரும் நூதன வியாதிகளுக்கும் வித்திடுகின்றன. இதனால் நல்லமருந்துக்குக் கெட்டபேரும், வைத்தியன்பேரில் மதிப்புக்குறைவுஞ் சம்பவிக்கிறதுமல்லாமல், வியாதியஸ்தனுக்கும் பெருத்தநஷ்டமுண்டாகின்றது. ஆகவே, வியாதிமூலங்கள் என்னுந் தலைப்பின்கீழ் யாம்வற்புறுத்திக் காட்டப்புகுந்ததெல்லாம், சீதோஷ்ண முதலிய காலமாற்றங்கட்குத் தக்கவாறு நமது உடை, உணவும், உறைவிடமுதலியவற்றை யமைத்துக்கொள்ளுதல் வியாதிகளதிகரியாமைக்கும் போந்தவுபகாரவழியா யிருக்குமென்பதேயாம். இவ்வுண்மைகளை வைத்தியர்களும், பொதுவாக எல்லாஜனங்களும், யாம்கொஞ்சமாய்க் காட்டியிருந்தபோதிலும், விரிவாய்ச்சிந்தித்துணர்ந்து சுகப்படவேண்டுமென்பதே எமதபேக்ஷையென்க. காலபேதங்களிலிருக்கும் வித்தியாசங்களைக் கவனியாமல், உடையாதிகளில் ஒரேமாதிரியாய் நடந்துவருங் கொடிய

 





வழக்கத்தினாலேயே நம்மநாட்டில் சுதேசஜனங்கள் ஏனையோரைப்பார்க்கிலும், வியாதிப்பட்டு அதிகமாய்மடிகிறார்கள். முக்கியமாய்ச் சீதளகாலம் வரும்போதுதான் ஜனங்களுக்குக்கஷ்டம் அதிகப்படுகின்றது. இக்காலத்தில்தப்புவது சிலருக்கு ஒரு "கேண்டம்" போலுமிருக்கும்

குளிர்சாலங்களில் பெரியவர்கள்மெல்லியவஸ்திரத்தாலேனும் போர்வையிட்டுக்கொண்டு, தமது இளங்கைக் குழந்தைகளையுஞ் சிறுபிள்ளைகளையும் வெற்றுடம்போடிருக்க விடுங்குரூரத்தைப் பலவிடங்களில் நாம் காண்கிறோம். இவ்வறியாமைக்கு மன்னிப்பில்லை! இந்தமூடவழக்கமானது பாலர்களுக்கு அள்ளுமாந்தம், இருமல், சுரம், சன்னியிழுப்பு, பேதி, (தொண்டையிருண்டு குறள்மாறி மூச்சுத்திணறிப் பலதடவைகளில் குழந்தைகளைக்கொல்லும் தொண்டைவியாதியாகிய, இங்கிலீஷில் 'குரூப்" என்றுசொல்லப்படும் மரணவேதுவான) வியாதி, ஆகிய மற்றும் பலவித நோய்களுக்கிடஞ் செய்கின்றது. அப்படிப்பட்டநோய்கள் வரும்போதாவது சீதளத்தைத்தடுக்கத்தக்க ஏற்பாடுகளைத் தாய்தந்தையர் செய்கின்றனரா? இல்லை! இல்லை!! பின்னையென்னசெய்கிறது சாதாரணஜனங்களின் வழக்கம்? மருந்தாலானவெல்லாம்பார்த்துவிட்டுப் பின்பு, மந்திரத்தாலும் மாயத்தாலும் வியாதியைப்போக்கப் பார்ப்பார்கள்! "மந்திரத்தால் மாங்காய்விழாது" என்னுஞ்சங்கதி யிவர்களறியார்கள்! அன்றியும், ஆசாரபாராயிருப்பவர்கள் குழந்தைகளுக்குப் பருத்திநூல் வஸ்திரத்தாற் செய்த அங்கிமுதலியதரித்தால் அடிக்கடியெடுக்கப்பிடிக்க வுதவாதென்று கருதி, தமதிளங்குழந்தைகளை வெங்குளிரில் நடுநடுங்கி வாய்விட்டலறி வருந்தும்படி வெற்றுடம்போடு விப்படிருப்பதையும் பலவிடங்களிற் பார்க்கலாம். குளிருக்காற்றாது சிசுக்கள் அப்படியலறியழும்போது, சில மூடத்தாய்மார், பசியினாலழுகிறதென்றும் எண்ணி (உண்மைகாரணமறியாமல்) கொஞ்சநேரத்துக்குமுன்றான் பால்கொடுத்தோமே யென்பதையுங்கவனியாமல் மேலும்பாலூட்டி வயிற்றைக்கெடுத்துப் பலவியாதிகளுக்கிடந்தேடுவதும், வயிறிளைக்க எண்ணெய்முதலியவை யூற்றுகிறதும் பலருக்குத் தெரிந்தவிஷயம். ஆசாரபரராயிருப்போர், தங்களாசாரத்துக்குக் குறைவுவராதபடி நார்மடித்துணியிலாவது, சுத்தகம்பிளித்துணியிலாவது (பிளாநெல்) சிறுஅங்கி, பாவாடைமுதலிய தைத்துப்போட்டுக் குழந்தைகளுடம்பைப் பாதுகாப்பதிற் றாழ்வில்லையே. குளிரில்லாக் காலங்களிலும் குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் அங்கியிட்டு வழக்கப்படுத்துவது நந்தேசாசாரத்துக்கு எவ்வளவுமுதவாது. கெடுதியேபயக்கும். எதையும் விவேகத்தோடு ஆண்டு சுகிக்கவேண்டுமென்பது கருத்து. சுபம்.

முற்றிற்று. E.C.R.N.

---

## வீட்டுக்கடுத்த விஷயங்கள்.

நன்றாய்ச் சமைக்கப்பட்டிராத போசனம் அசௌக்கியத்தைத்தரும். சாதாரணமாய்ச் சனங்கள் சமைக்கும் செம்பு, பித்தளை பாத்திரங்களிலுள்ள விஷத்தால் அதிக வியாதி யுண்டாகின்றது; ஆகையால் அவைகளை எப்போதும் சுத்தமாக வைத்து அடிக்கடி அவைகளுக்கு ஈயம் பூசவேண்டியது.

ஒரு ஸ்திரி, அரிசியை வேகவைக்கும்போது, உலையில் எல்லாவற்றையும் ஒருமிக்கக் கொட்டிவிடுகிறாள். அவள் ஒழுங்கற்ற விதமாய் அரிசியைக் கொட்டிக்கொண் டிருப்பாளாகில், சாதம் நன்றாய்ச் சமைக்கப்பட்டிராது. அப்படியே அந்தந்த வேளைக்கடுத்த போசனத்தை நாம் குறித்

 






தகாலத்தில் சாப்பிடவேண்டியது. அப்போது நமதுவயிற்றில்அந்தவேளை போசனம் சீரணித்து, அடுத்தவேளை போசனம் தாராளமாய்ச் செல்லும்.

வெளிச்ச மில்லாத வீடு எப்போதும் சுகத்துக்குக் கேடு. 'வெளிச்சம்போகாத இடத்தில் வைத்தியன் போக நேரிடும்' என்பது ஒரு முதுமொழி. சூரிய வெளிச்சம் ஒரு வீட்டைச் சுத்தப்படுத்தி, அழுக்கடைந்திருக்கும் பண்டங்களைக் காட்டி, பாம்பு, விஷப்பூச்சி முதலியவைகள் அண்டாதபடி அகற்றிவிடுகிறது. வெளிச்சமும் சுத்த ஆகாயமும் இல்லாதவிடத்தில் ஸ்திரீகளையும், பிள்ளைகளையும் வசிக்கச்செய்வது அவர்களைக் காவல் கிடங்கில் அடைப்பதுபோலாம்.

வியாதியஸ்தனைக் குறித்து நாம் அதிகமாய்க் கவலைப்பட வேண்டியது. துர்க்கந்தம் வீசுகிறவைகளை உடனே அவர்களிருக்கும் இடத்திலிருந்து நீக்கவேண்டியது. வெகு மும்மரமான நோயில்லாத வியாதியஸ்தனின் உடம்பை ஒவ்வொருநாளும் இளஞ்சூடானநீரில்நனைத்த ஒருதுணியைக்கொண்டு மெதுவாய்த் துடைத்தல் அதிக ஆரோக்கியத்தைத்தரும்.

---

## பாகசாஸ்திரவிநோதங்கள்.

### நெல்லிக்காய்த்தொக்கு.

சித்திரைமாதத்தில் காய்ந்த இரண்டுபடி நெல்லிக்காயை வெந்நீரில் நாலுமணிநேரம் ஊறவைத்து, உரலிலேகுத்தி, விரைகளைநீக்கி, அதை ஒருபாத்திரத்திலேநிரப்பி, உ-படி பச்சைமிளகாயும், சுத்தப்படுத்திய உ-படி உப்பும் போட்டு வாயைமூடி எட்டுநாள்மட்டும்வைத்துப் பிற்பாடு வாயைத்திறந்து அதில் உ-ஆழாக்கு மிளகாய்த்தூளும், ஒருரூபாஎடைப் பெருங்காயமும் நெய்யில்வறுத்துப்போட்டு உ௦ - பலம் நல்லெண்ணெயை நன்றாய்க்காய்ச்சிவார்க்கவும்.

### மகாராஷ்டிரமிளகுநீர்.

ஒருபலம் மிளகும் கொஞ்சம் தொவரம்பருப்பும் நெய்யில்வறுத்து அரைத்துத் தகுமானசலத்திற்போட்டுத் தகுமான உப்பும்சேர்த்து அஞ்சு நாழிகைபரியந்தம் காயவைக்க, அது காய்ந்துக்கொண்டிருக்கும்போதே தனியேகொஞ்சம் சலத்தில் ஆழாக்குகடலையை வேகவைத்து சலத்தையிறுத்துப்போட்டு அதை மிளகுநீரில்சேர்த்து அஞ்சுநிமிஷம்வரையில் காயவைத்தபின்பு, சீரகம், கடுகு, கொத்துமல்லிவிதை, கொஞ்சம் கறிவேப்பிலை அஞ்சுநெல்லிடைபெருங்காயம் இவைகளை நெய்யில் தாளித்திறக்கிப் போடவும். மலம்போம்.

---

## விநோதயுக்திகள்.

(1) கல்கா கஷாயத்திலாவது, அழிஞ்சில் எண்ணெயிலாவது சிலேஷ்வாடகபழத்திலாவது எந்த விதையையாவது நூறுமுறை ஊறவைத்து நிலத்திலே அதனைப் புதைத்தால் அது உடனே கிளைகளுடனே வளர்ந்து பழங்கொடுக்கும்.

(2) பழங்கள் உலர்வனவாயின், கொள்ளையும், உளுந்தையும், அவரையையும், எள்ளையும், யவையையும் கலந்து காய்ச்சிச் சூடாறியபின்னர் வேர்களில்விடுக. அதனால் மரங்கள் மிகுதியும் பூத்துக்காய்க்கும்.

(3) கரும்பு, சீனி, கோஷ்டம், காட்டிலுப்பை என்பனவற்றைக் கலந்து பணிகாரஞ்செய்து காய்க்குமரங்களின் அடியிலேபுதைத்து மண்ணால்மூடிவிட்டால், பழங்கள் நார்முதலியன இல்லாதிருக்கும்.

(B.A.)







உ

NO. 7. கடவுள் துணை. நெ. எ.

# விவேகசுந்தரம்.

கடவுள் வணக்கம்.

ஆனைமுக னறுமுக னம்பிகைபொ னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணாடு.

ஆத்மஸ்வரூப வணக்கம்.

எவனருளினி னுலகுயிர்பர மிலகுறும்
எவனருளினி வினன்மதியரி யொளிபெறும்
எவனிலை தனினள விலமத னிலைபெறும்
அவனகிலமுநிறை யடிகளெம் மகமே.

---

## கலியாணஞ் செய்துகொள்ளல்.

இக்காலத்துப் பெற்றோர்கள் அநேகமாய்த் தமது பெண்களுக்குச் செல்வக்குடியிற் பிறந்த பிள்ளைகளையே கலியாணஞ் செய்விக்கவேண்டுமென்று அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள். கொஞ்சகாலத்திற்குமுன்னே நாடுகளில் இப்படியில்லை. சாதாரணமாய் அன்னவஸ்திரத்துக்குக் குறைவுபடாமல் வருந்தி உழைத்துச் சம்பாதித்து, சமுசாரத்தைப் போஷிக்கத் தகுந்தவனாய், நற்குண நற்செய்கையுள்ள ஒரு புருஷன் மருமகனாக வாய்ப்பானானால் அதுவே மேலானது; அதிக மேன்மை நமக்கு எங்கிருந்து வருமென்று நினைத்து, அப்பெண்கள் மேன்மேலும் விருத்தியாகும்படி அவர்களுக்குச் சம்சாரம் பண்ணவேண்டிய வழிகளையும், பிற்காலத்தில் அவர்களுக்கு முதன்மையாய்த் தெரியவேண்டிய மற்றுமுள்ள பல வேலைகளையும் நன்றாய்ப் பழக்கிவைப்பது வழக்கம். இப்போது அப்படிப்பட்ட மனிதர்களும் விசேஷமாய் இல்லை; அப்படிப்பட்ட எண்ணமும் விசேஷமாய்க் கிடையாது. பிற்காலத்தில் எப்படி வாய்க்குமோ? வருங்காலத்தைக் கண்டறிந்தவர்கள் யார்?

" மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை "

என்று சொல்லுகிறபடி, இல்லறத்துக்கு வேண்டிய குணங்களோடு தன்னைக் கொண்ட கணவனது வரவுக்குத்தக்க வாழ்க்கையுடைய பெண்களே இல்லறத் துணையாவார்கள், என்று முன்னமே தெரிந்து அதற்கேற்றபடி பெண்களைப் பயிற்றுகிறவர்கள் எங்கேயோஅருமையா யிருக்கிறார்கள்.




நகரங்களிலோ முழுதும் இதற்கு மாறாகவேயிருக்கின்றது. பெருஞ்செல்வக் குடியிற் பிறந்தவர்கள் முதற்கொண்டு பிச்சைக்காரன் வரையிலுமுள்ள எல்லாப்பெண்களும் கலியாணமாய்விட்டால் உடனே தாம் ஒரு வேலையுமில்லாமல் ஒரு சிம்மாசனத்தின்மேலேறி உட்காரவேண்டுமென்று எண்ணங்கொள்ளுகிறார்கள். அற்பவேலைக்காரர்கள்கூடத் தம்முடைய பெண்கள் பணக்காரனை மணம்புரிந்து சுகமாய் வாழப்போகிறதாய் எண்ணங்கொண்டு அவர்களுக்கு அவசியமாய்த் தெரியவேண்டிய வேலைகளைக் கற்பியாமல் தான்தோன்றியாய் விட்டுவிடுகிறார்கள். அப்படிப்பட்டவர்களுடைய பெண்களைக் கலியாணஞ் செய்துகொள்வது கெடுதியே. ஏனெனில், அந்தப்பெண்களெல்லாம் தாங்கள் சகல சம்பத்தோடு மிகவும் மேன்மையாய் வாழவேண்டுமென்று பேராசைகொண்டு, சாதாரணமானபுருஷர்களைக் கலியாணஞ்செய்துகொண்டு, அவர்களோடு குடித்தனஞ்செய்வதில் மிகவும் வெறுப்புற்றிருக்கிறார்கள். வீட்டுக்காரியத்திற்கு வேண்டியவேலை அவர்களுக்குத் தினையளவும் தெரியாது. ஸம்ஸாரத்திலுள்ள பற்பல காரியங்களிலும் வெறுப்புண்டாகும்படி அவர்கள்தாமே பழக்கிக்கொண்டிருக்கிறார்கள். இது மாத்திரமேயல்ல; அப்பெண்களுடைய பெற்றோர்கள் 'செடியில் வணங்காதது மரத்தில் வணங்குமா' என்பதைச் சிறிதும் அறியாமல், நமது குழந்தையும் காரியம் செய்கிறதாவென்று அவர்களை மரம்போல உட்காரவைப்பதுமல்லாமல், பெண்ணுக்குப் பணக்காரனாயாவது, மாதம் ஆயிரம் ஐந்நூறு சம்பாதிக்கிறவனாயாவது ஒரு புருஷனைத்தேடி விவாகஞ்செய்யவேண்டும்; குழந்தை கஷ்டப்படலாமா என்று அடிக்கடி அப்பெண்கள் முன்னிலையிலேயே சொல்லிவருகிறார்கள். அவர்களே அப்படிச்சொல்லும்போது அதைக் கேட்கிற புத்தியறியாத பெண்கள் என்ன நினையார்கள்? கலியாணமானவுடனே தாங்கள் பெருத்தசீமாட்டியாய்ப் போவதாக நினைத்துக்கொள்ளுகிறார்கள். அப்படிப்பட்ட பெண்களைக் கலியாணஞ்செய்துகொள்வது பலவகைப்பட்ட தொல்லைகளையும் அனுபவிக்க, தரித்திரத்தையும் மனவருத்தத்தையும் இன்னும் பலவகைப்பட்ட சங்கடங்களையும் விலைகொடுத்து வாங்குவதாகுமேயன்றி வேறல்ல.

" மனைமாட்சி யில்லாள் கணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில் "

ஆதலால் இப்படிப்பட்ட நடத்தைகளெல்லாம் மிகவும் பிசகானவை. இவைகளை விலக்கவேண்டுவது மிகவும் அவசியமானது. இத்தன்மையான எண்ணங்களும், நடத்தைகளும் உடையவர்கள் ஒருநாளும் அடக்கம், விவேகமும் உடையவர்களாகமாட்டார்கள். நம்முடைய முன்னோர்கள் புத்தியிலும், விவேகத்திலும் நமக்குக் குறைந்தவர்களோ? புத்தியிலும், சாமர்த்தியத்திலும் நாம் அவர்களுக்கு ஈடாகமாட்டோம். ஆதலால் அவர்கள் நடந்துவந்த வழக்கத்தை விட்டு வேறுவழி தேடுவது என்றைக்காவது சரியாகுமா? இப்போது நாம் சற்றுப் பொதுவாக நிதானித்துப் பார்ப்போம். தம்மக்கள் மேன்மையாய் வாழவேண்டுமென்கிற கோரிக்கையும் அதற்குத் தக்க முயற்சியும் யாவர்க்கும் இருக்கவேண்டியது அவசியமே. இல்லாவிட்டால் எளியவர்கள் விருத்திக்குவருவதெப்படி? அதைப்பற்றி நாம் இப்பொழுது ஆக்ஷேபிக்க வரவில்லை. வருங்காலத்தைக் கண்டறிய நாம் யோகீசுவரர்களோ? எந்தக்காலம் எப்படியிருக்குமோ? ஒருவேளை நமது கோரிக்கை நிறைவேறாமற்போனால் அப்போ

து என்னசெய்கிறது? ஆதலால் யாவரும் தற்காலத்தில் தாங்களிருக்கிற ஸ்திதியிலேயே தம்மக்கள் வாழ்நாள் முழுதும் இருக்கப்போகிறதாக நினைத்து, அதற்குத் தக்கபடி வேண்டிய நடத்தைகளை யெல்லாம் அவர்களுக்குப் பழக்கிவருவார்களானால் பின்பு ஒருநாளும் ஏமாந்துபோகும்படி நேரிடாது. நல்லகாலமிருந்து ஒருவேளை உயர்ந்த அந்தஸ்து கிடைக்குமானால் அப்போது விசேஷ மகிழ்ச்சி யுண்டாகின்றது. அதற்காக அவர்கள் அதிகமாய்க் கற்றுக்கொள்ளவேண்டிய வேலை யொன்றுமில்லை. முன்னே தாழ்ந்த ஸ்திதிக்கு வேண்டிய வேலைகளைப் பயின்றதினால் சேதமேதாவதுன்டோ? அப்படிப்பட்டதும் ஒன்றுமில்லை. மேலும் அதனால் உயர்ந்த அந்தஸ்து வருங்காலத்தில் தன் வேலைக்காரர்களையும் மக்களையும்சீராய்ஆளத் திறமை உண்டாகின்றது. ஆனதால் தம்மக்கள் மாட்சிபெறவேண்டுமென்கிற கோரிக்கை ஒருபக்கத்திலிருந்தாலும், அதற்காகப் பெண்களுக்குப் பேராசையுண்டாக்கி அவர்களை அநாதரணை செய்யாமல், ஒரு நாடோடியான புருஷனே மருமகனாய் வாய்ப்பதாகப்பாவித்து, அதற்கேற்றபடி பெண்களைப் பழக்கிவருவார்களானால், அப்பெண்கள் பிற்காலத்தில் வரவரச் செல்வமும் சீரும் சந்தோஷமுமாக வாழ்வார்கள் என்பதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. நமக்கு உள்ளது இவ்வளவுதான் என்று திருப்தியடைந்திருப்பவர்களுக்கு எதிர்பாராத ஏற்றமொன்று உண்டாகுமானால் அதைவிட வேறு ஆநந்தமுண்டோ? எல்லாம் நமக்குக் கிடைக்கவேண்டும்; நாமே யாவர்க்கும் மேலாயிருக்கவேண்டுமென்று பேராசைகொண்டிருக்க, ஒன்றும் கிடைக்காமற்போவதைவிட வேறு துக்கமுண்டோ?

---

## பொய் சொல்லல் மிகவும் கொடுமை.

பொய்யாவது உள்ளதை இல்லை என்றும், இல்லாததை உள்ளதென்றுஞ் சொல்லுவது. ஒரு பொய் வார்த்தையை ஸ்தாபிக்க ஒன்பது பொய் சொல்லவேண்டிவரும்; பெரும்பாலார் இந்து தேயத்திலுள்ள நம்மவர்கள் ஏழு பிராயமுதல், மரணபரியந்தம் பொய்வார்த்தையை நீக்கி நின்றாரில்லை; பொய் சொல்லத் துணிந்தவன் களவுசெய்யவும், மோசஞ்செய்யவும்,கொலைசெய்யவும்,நியாயசபை முன்னிலையில் காணாத விஷயங்களைக் கண்டதாகச் சத்தியஞ்செய்யவும் தடையில்லையல்லவா? பொய்யன் மெய்யைச் சொன்னபோதிலும் அதனைப் பிறர் நம்பார்கள்; ஆகையால் விளையாட்டுக்காயினும் பொய்பேசுவது பாபமே யல்லது வேறில்லை. தெய்வப்புலமை ஔவையாரும், ஆத்திசூடியில். "கெடுப்ப தொழி; தீவினை யகற்று; நன்மை கடைப்பிடி; இயல்பலாதனசெயேல்" என்றும், திருவள்ளுவநாயனாரும்:

> " எனைப்பகையுற்றாரு முய்வர்வினைப்பகை
> வீயாது பின்சென் றடும்."

> " அருங்கேடனென்ப தறிகமருங்கோடித்
> தீவினைசெய்யா னெனின்"

என்றுஞ் சொல்லியிருக்கின்றார். மேலும் மனிதர்கள் சீவனார்த்தங்களைச் செய்யும் விவகாரங்களுக்குப் பொய்களைப் புணர்த்தி நடத்தாவிட்டால் உலகத்திற் சீவனம் எப்படி நடந்துவரும்? ஒருவருக்குத் துன்பத்






தை செய்யும் பொய்களை நீக்கிவிட்டுப் (பதார்த்தங்களில் உப்பு சேர்ப்பதுபோல்) பொய்களைக் கலந்து சீவனத்தை நடத்துவது ஒருவர்று குற்றமில்லை யென்று நம்புகின்றார்கள். அந்தோ! இது மூடர்களுடைய எண்ணமேதவிர, அறிவுடையோர் கருதாரென்க; குறளில்

" தினைத்துணையாங் குற்றம்வரினும்
பனைத்துணையாக்கொள்வார் பழிநாணுவார் "

என்றும், அறநெறிப்புலமை ஔவையார்: "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும், பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர் " என்றும் நீதி நூல்களில் சொல்லியிருப்பதாலும், துன்பங்களைத் தராத பொய்களைச் சீவனத்தினிமித்தங் கலந்துகொள்ளலாமென்று சொல்வதுகூடாது. உலகத்தில் துன்பஞ்செய்யாத பொய்கள் இல்லை;

விருத்தம்.

ஏதேனும் பயன்வேண்டிப் பொய்சொல்லி னப்பொய்தானேவித்து
மாதரையில் வெளியாகு மப்பொழுதப் பயனழியும் வளருந்துன்பஞ்
சாதலின்மை வேண்டிவிட முண்ணலொக்கும் பயன்கருதிச் சலமுறாத்த
லாதலினா லுண்மைதனைத் துணைக்கொள்ளி னெப்பயனு மடைவோ
[நெஞ்சே.

ஆகையால் இதைவாசிக்கும் ஆண்பிள்ளைகளும், பெண்பிள்ளைகளும் கவனிப்பார்களாகில், பொய் ஒன்றால் தர்மன், அதர்மன் என்றும்; நியாயன், அநியாயனென்றும்; சத்தியன், அசத்தியனென்றும்; யோக்கியன், அயோக்கியனென்றும், இன்னும் அநேகவிதமான வசையைத் தருவது பொய்யல்லவா? மேலும், பாபத்திற்குக் காரணமாயுள்ள பொய்வார்த்தையைச் சொல்லத் துணியாதன்றோ? அரிச்சந்திர மகாராஜன் தன்னுடைய மனைவியையும், புத்திரனையும் விற்றதோடு, தானும் புலையனுக்கு அடிமையாகியது; அச்சமயத்தில் விஸ்வாமித்திரன் சுடலையில் வந்து அரிச்சந்திர மகாராசனைச் சந்தித்து ஓ! அரசே! இச்சமயம் ஒரு பொய் சொல்லுவாயானால் உன்னுடைய செல்வமுழுதும் பழையபடிதருவேன். என்றவுடன், அரிச்சந்திர மகாராசன் சொன்ன விடையாவது:

" பதியிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதியிழந்தனமினி நமக்குளதென நினைக்கும்
கதியிழக்கினுங் கட்டுரையிழக்கிலே மென்றார்
மதியிழந்துதன் வாயிழந்தருந்தவன் மறைந்தான்-"

மகாபாபத்திற்கு இடமாயுள்ள பொய், பொறாமை, விபசாரம், சூதாடல், களவு ஆகிய இவ்வைந்தும் துர்க்குணங்களுக்கே என்று முன்னோர்களாகிய விவேகிகள் நீக்கியிருந்தார்கள், இக்காலத்தோர்கள் பெரும்பாலார் இவ்வைந்து குற்றங்களோடு பொருந்தி யிருப்பதால்,

ஞானம் பெருமை நயங்கருணை யுண்மையபி
மானம் பொறுமை வணக்கமுயர்—தானமுடன்
சற்குண மாசாரந் தருகல்வி நீதிநெறி
துர்க்குணருக் கில்லென்றே சொல்.

பொய்மையே பாவமெல்லாம் விளைதரு பூமியாகும்
பொய்மையே பிறவியெல்லாம் புகப்புரி வித்துமாகும்
பொய்மையே வறுமையெல்லாம் போதரப் புரிவதாகும்
பொய்மையே நரகமெல்லாம் புகுதரப் புகுத்தாநிற்கும்.

இவ்வகையாக முன்னோர்கள் கூறியிருப்பதை இக்காலத்திலுள்ள அறிவிலிகள் கொஞ்சமேனுங் கருதாது லௌகிக விஷயங்களைப்பற்றி நியாயசபை முன்னிலையிலும், தெய்வசபை முன்னிலையிலும் பொய்பேசுகின்ற பாபிகட்கு, கடவுள் தண்டனை யில்லாது போகாதென்க.

வி. வே. கி. நா. பி.

## நீதிமொழிகள்.

தன் வல்லமையை உள்ளபடி உணர்ந்திருப்பவன் ஒருவனுமில்லை.

தன் குற்றங்களையும் குறைகளையும் குணங்களையும் கண்டிப்பதை விட, பிறருடைய பொல்லாச் செயல்களைக் கடிந்துபேசுவது எவர்க்கும் எளிது.

உண்மையும் சூரியனும் ஒக்கும்; பாதிநாள் சூரியன்போலவே சத்தியமும் சிறப்பாய் வெளித்தோன்றி உலகமெல்லாம் பிரகாசிப்பிக்கும்; பாதிநாள் இருப்பிடந்தெரியாமல் ஒளிந்துகிடக்கும்.

ஒருவன் அறிவீனனுவனென்று அறிவதற்கு ஓரேவழி போதும்; அறிவீனனுகானென்று அறிவதற்கோ பலவழியிருந்தாலும் போதாது. தான் தோன்றியாய்த் தனிவழியே போம்படி விடப்பட்டிருப்பவனே மூடனென்று உணரலாம்.

தெய்வசங்கல்பம் ஒருபோதும் ஒருவனைக் கெடுக்க முயல்வதில்லை. நல்லது கெட்டதாகிய இருவழிக்கும் வேண்டிய கருவிகளைமாத்திரம் அது தேடிவைத்திருக்கிறது. அவனவன் புத்திக்கு நேராய்த் தோன்றுகிறவழியில் அவனவன் நடக்கிறான். யானை தன் தலையில் தானே ஒரு விநோதம் போல் மண்ணைவாரிப் போட்டுக்கொள்வதுபோலவும், விட்டிற்பூச்சி வேண்டுமென்று தானே தீயில் விழுவதுபோலவும் ஒருவன் நல்லதிருக்கக் கெட்டவழியில் நடப்பனுயின் அதற்குத் தெய்வமென்னசெய்யும்.

நமதிஷ்டப்படியே எல்லாம் நடப்பதாயிருந்தால், இவ்வுலகத்தில் எவரும் குழந்தையாகவேயிருந்து அவ்வளவு ஜீவனுக்கும் உணவுக்கு வேண்டுமளவு பாலுமிருக்கவேண்டும்; அதைவிட ஆனந்தம் வேறொன்றுமில்லை. சிறுபிராயத்தில் கள்ளங்கவடற்று உண்மையாய் நடப்பவர்களெல்லாம் முதிர்ந்தபிறகு எவ்வளவு பொல்லாதவர்களாகிறார்கள்.

ஒருவன் எவ்வளவு புத்திமானுயிருந்தாலென்ன? எவ்வளவு சத்தியசந்தனு யிருந்தாலென்ன? ஒருதடவை சொன்னபடி நடவானுயின் அந்தப் பிரசித்தியாலென்னபயன்?

செம்மையாய் வாழ்வதற்குவேண்டிய வழிதெரியாமல் விசேஷமாய்ப் பொருள்விரயம்செய்தும், இவ்வுலகவாழ்க்கையை நரகவாதனைக்கு ஒப்பாக்கிக்கொள்கிறார்கள்; வழியோடு வாழத்தெரிந்தால் கொஞ்சம் பொருளைக்கொண்டே தேவேந்திரபோகமாய்ச் சுகமாக வாழலாம். இதற்கேற்ற வசனமொன்றுண்டு.

"ஒத்தகணவனு மொருநெல்லு முண்டானல்
சித்திரம்போலே குடிவாழ்க்கை செய்வேனுன்"






அணுவளவேனு மறிவில்லாதவர்கள் மேன்மேலும் எழுந்து துள்ளுவார்கள்; அவர்கள் எவ்வளவு துள்ளுகிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு, அறிவுமிருந்தவர்கள் அடங்கித்தாழ்வார்கள்.

"மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதென்றே தாழுந் துலைக்கு"

பாண்டித்தியமும் விவேகமும் ஒன்றல்ல; ஜோதிடசாஸ்திரத்தின் நுட்பங்களையும் கணிதசாஸ்திரத்தின் அருமைகளையும், மற்றுமுள்ள ரசாயனசாஸ்திரம் ஔஷதிசாஸ்திரம் முதலியவைகளையும் நன்றாய்க் கற்றறிந்தவர்களும் விவேகமற்றிருப்பார்கள்.

ஒருவனுக்குத் தன்மனையாளைச் சீராய் வைத்துக்கொண்டிருப்பதற்கு வேண்டியவழியிருந்து நற்குண நற்செய்கையுள்ளவளாய் ஒருமனையாளும் வாய்ப்பாளானால், அவனுக்கு இவ்வுலகவாழ்க்கையில் குறை ஏதாவதொன்றுண்டோ?

"இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ
னில்லவள் மாணாக் கடை."

எடுத்த கருமத்தை முடிக்கவேண்டுமென்று பிடிமானமுள்ளவனுக்குக் கைகூடாத பொருள் ஒன்றுமில்லை. துரதிர்ஷ்டமென்பது அவனைக் கண்டு அஞ்சிநிற்கும்.

"ஊழையு முப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்."

பொல்லாங்கு செய்தவர்கள் பச்சாத்தாபப்படவேண்டுவது அவசியமே; ஆயினும் ஒரு குடியனுக்குக் குடித்ததனால் உண்டான வெறியும், காமுகனுக்குக் காமச்செயலினாலுண்டான பெருநோயும் பச்சாத்தாபத்தால் தணியுமோ?

பிரசித்தியென்பது இப்படிப்பட்டதென்று தெரியாமல் அநேகர் பிரசித்திசம்பாதிக்கவேண்டுமென்று பல தீச்செயல்கள் செய்து தம்பேரை வெளிக்குக் கொண்டுவருகிறார்கள்.

ஆசையென்பது ஒரு விபரீதகுணம். அது இப்படிப்பட்டதென்று வரையறுத்துக் கூறவும் கூடாது. அதை அடக்கியாளவும் மாளாது. அது, காட்டிற் பூத்த மல்லிகைமலர்போலவும், காட்டிற்காய்ந்த நிலவுபோலவும், தன் அழகையும் பெருமையையும் வீணாக்குகின்றது. அதுபற்றியன்றோ தாயுமானவரு மிங்ஙனங்கூறியிருக்கிறார்:—

ஆசைக்கோரளவில்லை யகிலமெல்லாங்கட்டி யாளினுங்கடன்மீதிலே
ஆணைசெலவேநினைவ ரளகேசனிகராக வம்பொன்மிக வைத்தபேரும்
நேசித்துரசவாத வித்தைக்கலைந்திடுவர் நெடுநாளிருந்தபேரும்
நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி நெஞ்சுபுண்ணாவரெல்லாம்
யோசிக்கும்வேளையில் பசிதீரவுண்பது முறங்குவதுமாகமுடியும் [பற்றிப்
உள்ளதேபோதுநா னெனக்குளறியே யொன்றைவிட்டொன்று
பாசக்கடற்குளே வீழாமன் மனதற்ற பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமறநிறைகின்ற பரிபூரணாநந்தமே.

ஒருவனுக்கு நோயற்ற தேகமே நீங்காத செல்வம்; கபடற்றமனதே குறையாத பாக்கியம்.

உலகத்தில் அநேகர் தாம்செய்யும் பல பிழைகளுக்கும் விதியின்மேற் பழிபோடுகிறார்கள். கள்ளநினைவாய்க் கொடுமைசெய்பவர்க்குச் சகாயமாய் விதியொன்று வாய்த்திருப்பது அதிசயமே.








## வைத்திய விநோதங்கள்.

### தொண்டைவலி, தொண்டைநோய்நீக்க.

கடுகுக் கஷாயத்தில் காடி அல்லது தேன்கூட்டி வாய்கொப்பளி சகத் தொண்டைநோய் தீரும். தக்காளி மணித்தக்காளியைக் கஷாய மிறக்கி வாய்கொப்பளிக்கத் தொண்டைநோய் தீரும். நவசாரத்தைக் கோழிமுட்டையின் வெண்கருவிலுரைத்துப் பூசத் தொண்டைவலியை நீக்கும். நாகப்பூச்சி என்னும் பூநாகத்தை எள்ளெண்ணெயி லெரித்துக் குடிக்கத் தொண்டைவலி நீங்கும். நிஷாஷத்தா என்னுங் கோதுமைச் சத்தைக் காடியிலுரைத்துப் பூசத் தொண்டைவலி நீங்கும். ஷங்கேயே ஷம் என்னுங்கல்லை ஜலத்திலுரைத்துக் குடிக்கத் தொண்டைவலி நீங்கும்.

---

### தொண்டைகம்மல் நீக்க.

குபாசி என்னும் சிறுதுத்தியைச் சமூலத்தோடு கஷாயமிறக்கிச் சர்க்கரைசேர்த்து உட்கொள்ளத் தொண்டை கம்மல் தீரும். சிலாரஸம் என்னும் சலாரசை வெந்நீரிற் கலந்துட்கொள்ளப் பேதியின்வழியாகத் தொண்டைக்கம்மல் தீரும்; தேன்மெழுகைப் பசுவின் நெய்யிலுருக்கிச் சாப்பிடத் தொண்டைக்கம்மல் தீரும். வெள்ளாட்டுப்பாலை வாய்கொப்பளிப்பதினால் தொண்டைக்கம்மல் தீரும். சேதனு என்பதை மெல்லுவதினால் தொண்டைக்கம்மல் தீரும்.

---

## சிறுவரைத் தண்டிக்கும் முறைமை.

—:0:—

குற்றஞ்செய்த சிறுவரைத் தண்டிக்கும் விஷயத்தைப்பற்றி சற்று விசாரிப்போம். ஒரு பிள்ளை தப்புசெய்தது உண்மையென்று நன்றாய்விளங்கி, குடும்பத்தைச்சார்ந்த மற்றச் சிறுவர்கள் கெடாமலிருப்பதற்காக அவனைச் சிக்ஷிக்கவேண்டியது அவசியமாயிருந்தால், அப்பிள்ளையின் மானுஷமான உணர்ச்சிக்கும் குணகுணத்திற்கும் ஏற்றதாயும், மற்றக் குடும்பத்தாருடைய க்ஷேமத்துக்கு எத்தன்மையான சிக்ஷைவிதித்தால் போதுமோ, அத்தன்மைத்தாயும் சிக்ஷையை அளவிட்டுச் செய்ய வேண்டும். இது எப்படியென்றால், தந்தை தாயரை நேசித்து அன்புபாராட்டுகிற ஒரு பிள்ளைக்கு அவன் செய்த குற்றத்தால் அவனுடைய பெற்றோர் மிகவும் வருத்தப்பட்டார்கள் என்று அவன் மனதில் உறைக்கச் சொல்லிக்காட்டினால், அந்த வருத்தம் அவனுக்கும் உண்டாகி, மிகவும் வியசனப்படுவான். அதுவே அவனுக்கு ஒரு தண்டனையாகும்.

கடினசித்தமும் கவடுமுள்ள மற்றொருபிள்ளை, தேகதண்டனைக் கல்லாமல் மற்றொன்றுக்கும் அஞ்சாத துடுக்கனாயிருப்பதுகண்டு, அன்னியருடைய பழிப்புச்சொல்லைப் பொறுக்கிற குணமில்லாத மனமும் சங்கோசமுமுள்ள சாதுவான ஒரு பிள்ளையை நாலுபேர் யோக்கியர் முன்னிலையில் அவன் செய்தகாரியத்தைப்பற்றிச் சற்று கண்டித்துப் பேசினால், அவன் மிகவும் அவமானப்பட்டவனாய்த் துக்கத்தில் முழுகிப்போவான்.









நெஞ்சுரப்புள்ள மற்றொரு பிள்ளையோ, நாலுபேர்மத்தியில் தன்னை நிறுத்திவைத்துப் பேசினார்களே, அதுவே தனக்குப் பெரும் பிரக்யாதியுமென்று பாவிக்கும். மற்றொருபிள்ளை பைரங்கமாய் அவனை இழித்துப்பேசுகிறதையே மேலானதாய் நினைக்கிறான்.

நாம் சிக்ஷைசெய்யும்போது பிள்ளைகளுக்கு எளிதில் உண்டாகிற கோபதாபங்களைக் கிளறிப் பெருகச்செய்யாமல், தாங்கள்செய்த குற்றத்தின் அளவையும், அதனால் விளையும் தீமையையும் உணரும்படியாயும், அதற்காகச் சிந்தைநொந்து இனி இப்படி ஒருபோதும் செய்யலாகாதென்று தீவழியினின்று விலக முயலும்படியாயும் தண்டிப்பதே உசிதம். காரியம் இப்படியிருக்க, பல பெற்றோரும் உபாத்திமாரும் பிள்ளைசெய்த குற்றத்திற்காகக் கடினமாக தண்டித்துவிட்டால், தாங்கள் செய்யவேண்டிய கடமையெல்லாம் முடிந்ததாக நினைக்கிறார்கள். இதனால் விளையும் தீமை இன்னதென்று யோசிக்கிறதில்லை. அந்தக் கடினதண்டனையினால் அந்தப்பிள்ளை கடுகடுத்த முகமுள்ளவனாயாவது, எதிர்த்துப்பேசும் துணிவு உள்ளவனாயாவது, மிகவும் பயந்து மிரண்டவனாயாவது, நாம் தப்புவது அருமை என்று நிராசைபண்ணினவனாயாவது ஆய்விட்டால், அது அந்தப் பிள்ளைகளுக்குக் கெடுதியேயல்லாமல் க்ஷேமமல்லவென்று ஞாபகத்தில் வைக்கிறதில்லை.

நாம் அடிக்கடி நம்முடைய சிறுபருவத்தை ஞாபகம் பண்ணிக்கொண்டாலல்லாமல், நம்முடைய கடுஞ்சொற்களாலும் கடினதண்டனையினாலும் சிறுவர்களைக் கோபம், தாபம், அவமானம், பீதிமுதலானவைகளால் பீடித்து மனங்கலங்கும்படி செய்கிறோமென்கிற உணர்ச்சி நமக்குத்தோன்றாது. சிக்ஷிக்கவேண்டியது அவசியந்தான்; ஆனால் அவர்கள் நல்வழிக்குத் திரும்பி, தம்மைத் தண்டிப்பவர் தங்களுக்கு மித்திரரேயன்றி சத்துருவல்லவென்றும், தங்களுடைய நன்மைக்கும் விருத்திக்குந்தான் அவர்கள் சிக்ஷிக்கிறார்களென்றும் எண்ணும்படி ஒழுங்குபடுத்துகிறவரையில் பெற்றோர் தங்கள் கடமையைச் செய்துமுடித்ததாகத் திருப்தி அடையக்கூடாது.

இன்னும்வரும்.

## WHY MUST WE TAKE FOOD?
## என் ஆகாரம் கொள்ளவேண்டும்?

என் ஆகாரம் கொள்ளவேண்டும் என்று உன்னைக் கேட்டால் பசியினால் என்றும், அதில்லாமற்போனால் பட்டினியாய்த்தான் வருந்தவேண்டுமென்றும் உத்தரம் சொல்வாய்.

என் பசி உண்டாகிறது? ஆகாரம் இல்லாவிட்டால் நமது தேகம் என் வரவர இளைத்துச் சதைகரைந்து தோலால் போர்த்த எலும்பு கூண்டாய்விடுகிறது. சதை எப்படி கரைந்துபோகின்றது? மரப்பொம்மையும் கற்பதுமையும் ஆகாரம் கொள்ளாமையால் நாளுக்கு நாள் இளைத்து சுருங்கிப்போகிறதா?

நமக்கு ஆகாரம் வேண்டுவதற்கும் அதில்லாமையால் நாம் வாடி வதங்கிப்போவதற்கும் எது என்னவெனில்: அடுப்பில் நெருப்பு அவியாமலிருக்கப் போடும் கரி கட்டை முதலானவை எப்படி எரிந்து சாம்பலாய்ப்போகிறதோ அப்படி, ஜீவித்திருக்கிறவரையில் உயிரைக் காப்பாற்றும்பொருட்டு உடலிலுள்ள எல்லாப் பகுதிகளும் உபயோகப்பட்டுச்




செலவழிந்துபோகின்றன. நெருப்பு எரிய வெரிய கரி,கட்டைகள் குறைந்து நீராய்ப்போவதுபோல் உடலிலுள்ள ரத்த மாம்ஸம் முதலான சத்துக்கள் உயிரைக் காப்பாற்றும் தொழிலில் உபயோகப்பட்டுக்கரைந்துபோகின்றன. அடுப்பு நெருப்பில் அடுத்தடுத்து கரி,கட்டை சேர்த்துவராமற்போனால், நெருப்பு கொஞ்சம் கொஞ்சமாய் குறைந்து அணைந்துபோகின்றதே; அதுபோல நாம் ஆகாரம் ஏற்றுக்கொள்ளாவிட்டால் தேகம் வாடி வதங்கி வரவர உயிரும் திடமற்றுப்போய், கடைசியான தீப்பொறியானது புதிய பொடிக்கரி அல்லது, சரகு இல்லாமல் எப்படி சூனியமாகிறதோ அப்படியே தகுந்த போஷணை இல்லாமல் போய்விடும்.

நெருப்பு எவ்வளவு பிரகாசமாகின்றதோ அவ்வளவுக்குத் தீக்கருவிகளும் செலவாய்விடுகின்றன. அத்தன்மையாய் உடலில் உயிர்க்காதாரமான தீபனக்கினி எவ்வளவு பலங்கொண்டிருக்கிறதோ அவ்வளவுக்குத் தக்கதாய் போஷணைக்குரிய கருவிகளை எரிக்கின்றபடியால் மேன்மேலும் புதிய ஆகாரத்தை வேண்டுகிறது. ஆகவே நெருப்புக்குக் கரியும் கட்டையும் எப்படியோ அப்படியே உயிரோடுகூடிய உடலுக்கு அன்னபானுதி உணவுகள் ஆதாரமாகின்றன.

நமது தேகத்தின் உட்புறத்தை நாம்பார்க்கக் கூடுமானல் அங்குள்ள ஒவ்வொரு கருவியும் இடைவிடாத தொழிலால் தேய்ந்து மெலிந்துபோவதைக் காணலாம். நமது மார்பின்மேல் கைவைத்துப் பார்த்தால் மார்பு துடிப்பதை உணர்வோம். கணுக்கையைப் பிடித்துப் பார்த்தால் நரம்பின் வழியாய் இரத்தம் ஓடி, நாடி அடித்துக்கொள்வதை அறிவோம். மற்ற உருப்புக்களின் அசைவுகள் மிகவும் இலேசாயிருப்பதால் கண்டறிவது கடினமாயிருந்தாலும் ஜீவித்திருக்கும் உடலிலே ஒரு பகுதியாவது ஓய்ந்து ஸ்திரமாயிருக்கவில்லை என்பது தெரிந்தகாரியந்தானே. நாம் விழித்துக்கொண்டிருக்கையிலும், நித்திரைசெய்கையிலும், நடக்கையிலும், நிற்கையிலும் நம்முடைய உட்புறப் பகுதிகளெல்லாம் எப்பொழுதும் அசைதலும் மாறுதலும் உள்ளனவாயிருக்கின்றன. அசையும்பொருளுக்கெல்லாம் தேய்தலும் சுருங்குதலும் உண்டு. தறிமுதலான அசையும் யந்திரங்களின் உறுப்புகள் ஒன்றோடொன்று உராய்ந்து தேய்ந்துபோகின்றன. எவ்வளவு விரைவாய் இயங்குகின்றனவோ அவ்வளவு விரைவாய்த் தேய்ந்துபோகின்றன. உயிரோடு கூடிய நமதுசரீரம் இத்தன்மைத்தேயாம். நமது அவயவங்கள் எவ்வளவு அதிகமாக உழன்று ஓடியாடி உழைக்கின்றனவோ அவ்வளவுக்கு நமது சரீரம் தேய்ந்து இளைத்து நஷ்டப்படுகின்றது. இந்த நஷ்டத்தைப் போக்கத்தான் மேன்மேலும் ஆகாரங்கொடுத்து ஈடுசெய்ய வேண்டியிருக்கிறது.

ஆகவே ஒரு யந்திரம் தேய்வதுபோலவும், தீக்குத் தீனியாகிய கரி, கட்டை முதலியவை எரிக்கப்பட்டுப் போகிறதுபோலவும் நமது சரீரத்தின் உட்பகுதிகள் தேய்ந்து மெலிந்துபோகின்றன.

கரிக்கட்டைமுதலான திப்பண்டங்கள் எரிந்து உருவழிகையில் சிற்சில பகுதிகள் ஆவியாக எழும்பி புகைக்கூண்டின் வழியாய்ப் போகின்றது. அதுபோலவே உதர அக்கினியையுடைய நமது சரீரத்தில், பசையுள்ள உட்பொருள்கள் தேய்ந்து, கரைந்து, உருமாறி சுவாசமாகவும் வெயர்வையாகவும் தேகத்தில் நின்றும் வெளிப்பட்டும் போகின்றன.

ஆகையால் நமது உடலில் தங்கிய உயிரைக் காக்க, தினந்தோறும் போதுமான உணவை நாம் உட்கொள்ளவேண்டும். நமது தேகத்தினி

ன்று எவ்வளவு உறுமாறிக் கழிந்துபோகிறதோ அவ்வளவுக்குச் சரியாய் அளவிட்டு ஆகாரம் உட்கொண்டால் உயிருக்கு வேண்டிய போஷணை யாகின்றது. தேகக்கழிவினளவுக்கு உட்கொள்ளும் ஆகாரம் குறைந்தால் அப்பொழுது போதுமான போஷணையில்லாமல் நமது சுகம் கெட்டு தேக பலம் குறைந்துபோகின்றது.

## தந்தைசெய்நன்றி.

(58-வது பக்கத்தொடர்ச்சி.)

மேலும் தன்னைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியிலும் அதிக மகிழ்ச்சியைப் பெற்றதாய்அடைய,உன்மகன் சகலகலைவல்லவன், சாதுரியகுண சம்பன்னன் என்று அறிவுடையோர் சொல்லும்படி அவள் செவியிற் கேள்விப்படச் செய்யவும் வேண்டும்.

இவ்வாறன்றித் தாய்தந்தையர் தன்னைப்பெற்று வளர்த்த அருமை பெருமைகளை எவ்வளவும் நினையாமல்; அவர்களென்னை பெறுகிறதற்கு இரவும் பகலும் ஊணுறக்கமின்றி உபவாசித்து, உடம்மையொறுத்து, ஊசிமுனையில் நின்று, அருமையாகத் தவம் செய்தார்களோ? "ஆடுகனை கிறதென்று கோநாய் குந்திக்கொண்டழுமோ?" எங்கள் ஆத்தாளெதிர்ப் பட்டாள், அப்பன் மதப்பட்டான், நான் வெளிப்பட்டேனே யல்லாமல் வேறென்னவென்று வாய்கூசாமற் பிதற்றுகின்ற வம்பன் இவனென்றும்,

தன் குற்றத்தைக்கண்ட பிறனொருவன், வெட்கப்பட்டு நீ இப்படி அக்கிரமமாய் நடக்கலாமோ வென்று தன்னைக்கேட்க, தான் நாணுமல் அடபோ நீயென்ன் கண்டாய். இது அவசியம் பிதிராசாரமென்று தன் பிதா முதலானவர்கள்செய்த குற்றத்தையும் வெளிப்படுத்திய பேதை இவனென்றும்,

உட்சுவரிருக்கப் புறச்சுவர் பூசுவார்போலத் தன்னைப்பெற்ற மாதா பிதா முதலானவர்கள் தங்கள் உதரபோஷணைக்கு ஓரோதுவுமில்லாமல், கொழுகொம்பில்லாத கொடிபோல் அலைந்து கொண்டிருக்கையில், அவர்களை ஆதரியாமல், "மாதா மனமெரிய வாழாயொருநாளும்" என்பதையு முணராமல், தனக்கு யாதொரு சம்பந்தமுமில்லாத அந்நியர்மேல் இரக்கங்கூர்ந்து, அவர்களைச் சம்ரட்சணை செய்கின்ற டம்பன் இவனென்றும்,

ஒரு பெண்சாதிபோனுல் அனேகம் பெண்சாதிமார் வருவார்கள், பெற்றதாய்போனுல் வருவளா வென்று பார்மார்த்திகமாக யோசியாமல், ஏடாகூடமாய் எந்தப் பெண்டுகளையும் தாயென்ருற் குற்றம் பாராட்டார்கள். மனைவியென்ருற் குற்றம் பாராட்டா திருப்பார்களா? ஆதலால், தாய் முதலானவர்களிலும் மனைவியே தேடக்கிடையாத திரவியமென்று பெரிதாகமதித்து, அவள் பாதம் பூமியிற்பட்டால் அபசாரமாமென்று நடுங்கி,அவளைப்பஞ்சகல்யாணியாகிய குதிரைமேல் ஏற்றிப்பெற்றதாய் தலைமேற் புல்லுசுமைவைத்து, கொண்ட பெண்டாட்டிக்குக் குடைபிடித்துக்கொண்டு போகின்ற மாபாவி இவனென்றும்,

தாயைத் தாசியென்றும் வேசியென்றும் (வேசை, வேசியெனமருவியது) இருவாகப்பேசி ஏசி, கொஞ்சமாவது பழிக்கஞ்சாது கொலைசெய்த பஞ்சமாபாதகன் இவனென்றும்,

விளக்கைக் கையிலே பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுவாரைப் போல, பாவமென்று தெரிந்திருந்தும், காமவிகாரத்தாற் கண்தெரியாது

மதிமயங்கி முறைபாராமல் மிருகம்போலப் பெற்றதாயைப் பெண்டாள நினைக்குஞ் சண்டாளன் இவனென்றும்,

தன் தகப்பனுக்குத்தான் பிச்சைக்கஞ்சி வார்க்கும் எச்சில் ஓடுகாணு மற் போனதினிமித்தம், கொஞ்சமாவது பச்சாத்தாப மில்லாமற் பழி யென்றும் பாராமல், தடிகொண்டுசாடித் தகப்பனைத் தண்டித்த தறுதலை இவனென்றும்,

(இன்னும் வரும்.)

## சிறுவர்க்கான கதை.

### வாலில்லாக் குரங்கும் ஒரு கழுதையும்.

ஒருநாள் ஒரு மரத்தின்மேல் வாலில்லாக் குரங்கொன்று தன் கை யிலே சில பழங்களை வைத்துக்கொண்டு விநோதமாய்க் கடித்துத் தின்று கொட்டைகளைக் கீழே எறிந்துகொண்டிருந்தது. அந்தக் குரங்குக்குக் காது வெகு சிறிது; வால் அடியோடு இல்லவேயில்லை. தற்செயலாய் அவ்வழியேவந்த ஒரு கழுதை அதைப்பார்த்து, இது ஒரு விகாரமான ஜந்து என்று எண்ணிற்று. கழுதைக்கு நீண்டகாதும் நீண்டவாலும் இருப் பதைப் பார்த்த குரங்கும் அவ்விதமாகவே எண்ணிக்கொண்டது. கழு தை கெட்டியாய்க்கத்தவே, அதைக்கேட்ட குரங்கு கழுதையைப்பார் த்து, நீ என் இப்படிக் கத்துகிறாயென்று கேட்க, நான் உன்னைப் பார்த்துத்தான் கத்துகிறேன் என்று கழுதை சொல்லிற்று. உடனே குரங் குக்குக் கோபமுண்டாகி, நீ என்னைப்பார்த்துக் கத்துவானேன் என்று கேட்க, அதற்குக் கழுதை: உனக்குக் காது வெகு சிறியதாயிருக்கிறபடி யால், நீ ஒரு விகாரமான பிராணியாய்த் தோன்றுகிறாய்; மேலும் உன க்கு வாலேயில்லை; அதினாலேதான் எனக்கு இவ்வளவு சிரிப்புண்டாயி ற்று என்று சொல்லிச் சிரித்தது. அதைக்கேட்டுக் குரங்கும் கீயா கீயா என்று கீச்சிட்டுத் தன் பல்லையிளித்துக் கூவிற்று. உடனே கழுதை மிக வும் கோபமடைந்து, நீ என் என்னைப்பார்த்துப் பல்லையிளித்து அழகு காண்பிக்கிறாயென்ன, அதற்குக் குரங்கு: நீண்டகாதும், நடக்கும்போ தும் திரும்பும்போதும் ஒரு தடையாயிருக்கிற நீண்டவாலுமுடைய உன் னைப் பார்க்கவே எனக்குச் சிரிப்புண்டாகிறது என்றது. அதைக்கேட் டுக் கழுதை அதிக கோபம் அடைந்து, குரங்கைப் பிடித்து உதைக்கலா மென்று எண்ணி அம்மரத்தைச் சுற்றிச்சுற்றி வந்தது. குரங்கோ அதிக தந்திரமுடையதாகையால் கீழேவராமல் மரத்தினுச்சியிலேயே இருந்து விட்டது. கழுதை அதிக கோபத்தினால் வீணாய்க் கத்தி அடிமரத்தை உதைத்துக்கொண்டிருந்து கால் ஓய்ந்து ஓடிப்போய்விட்டது. அதைப் பார்த்துக் குரங்கு ஆ! ஆ! போகிறையோ? போ போ, நீ கழுதையான படியால் உன்னைப்போல் எனக்கும் நீண்டவாலில்லையே என்று என்னைப் பார்த்து நீ ஊளையிட்டாய்; அதனால் எனக்கு வந்த கெடுதியென்ன? சந் திரனைப்பார்த்து நாய் குரைத்தால் நாய்க்குச்சேதமோ சந்திரனுக்குச் சே தமோ எனச்சொல்லிற்று.

(ஜ-னி.)

## சித்திரக்குள்ளன்கதை.

(ருகூ-வது பக்கத்தொடர்ச்சி.)

ஆயினும் அந்த வில்லி வில்லிச்சிகளுக்குப் பிள்ளைகள் வந்து சேர்ந் ததனாலுண்டான சந்தோஷம் நீடித்திருக்கவில்லை. அப்போது கிடைத்த பொருளெல்லாம் செலவழிந்துபோனபின்பு மறுபடியும் முன்போலவே

சிந்திக்கத்தொடங்கினர்கள். அவர்களுடைய கஷ்டமும் நாளுக்குநாள் அதிகமாகிவந்தது. அதனல் ஒருநாள் இராத்திரி, அந்தப் பிள்ளைகள் ஒருபோதும் திரும்பிவராதபடி முன்னிலும் வெகு தூரமான காட்டிலே கொண்டுபோய் விட்டுவரும்படி ஆலோசித்தார்கள். அந்த ரகசியமும் சித்திரக்குள்ளனுக்குத் தெரியாமல்போகவில்லை. ஆயினும் அவன் அதை ஒரு பெரியகாரியமாய்க் கவனியாமல் முன்போலவே திரும்பிவந்து விடலாமென்று அலக்ஷியமாய் எண்ணியிருந்தான். அப்படியே விடியற்காலையில் எழுந்து கற்களுக்காக ஆற்றங்கரைக்குப்போகப் புறப்படுகையில், கதவுபூட்டியிருப்பதுகண்டு அவன் என்ன செய்கிறதென்று மயங்கி நிற்கையில் தாயானவள் வந்து, இனி இப்பிள்ளைகளைப் பார்க்கப்போகிறதில்லையே என்றுபரிதாபத்தோடு ஒவ்வொருபிள்ளைக்கும் ஒவ்வொரு அதிரசம் கொண்டுவந்து கொடுத்தாள். அதைப்பார்க்கவே குள்ளன், ஆயின் இனி ஆற்றுக்குப்போகவேண்டிய அவசியமில்லை; கற்களுக்குப் பதிலாய் இந்த அதிரசத்தைத் துண்டுதுண்டாக்கி வழியடையாளத்திற்குப் போட்டுக்கொண்டு போகலாமென்று தன்பங்கைத் தின்னுமலே வைத்துக்கொண்டிருந்தான்.

சிறிதுநேரத்திற்கெல்லாம் யாவரும் காட்டுக்குப்போகப் புறப்பட்டார்கள். வில்லியும் வில்லிச்சியும் வெகு ஜாக்கிரதையாய்ப் பிள்ளைகளையெல்லாம் அழைத்துக்கொண்டுபோய் வெகுதூரத்தில் முன்னதைப்பார்க்க மிகவும் பயங்கரமாயிருந்த மற்றொரு பெருங்காட்டிலே கொண்டுபோய் விட்டுவிட்டு, அவர்களுக்குத் தெரியாமலே மெல்லமெல்ல வெளியேவந்துவிட்டார்கள். அவர்கள் மறைந்துபோவதைச் சித்திரக்குள்ளன் குறிப்பாய்ப் பார்த்துக்கொண்டேயிருந்தானென்றாலும், அதற்காக அவன் விசாரப்படவில்லை. ஏனெனில், தான் வழிமுழுதும் அதிரசத்துண்டுகளை அடையாளமாய்ப் போட்டுக்கொண்டு வந்ததனல் அந்தக் குறிப்படியே வீடுபோய்ச்சேரலாமென்று நினைத்துத் தைரியமாயிருந்தான். மாலைப்பொழுதாகி வீட்டுக்குப்போகத் திரும்பிப்பார்க்கையில் ஒருதுண்டு அதிரசங்கூட அவன் கண்ணுக்குத் தென்படவில்லை. எப்படி தென்படும்? ஒன்றுதப்பாமல் எல்லாவற்றையும் பறவைகள் பொறுக்கிக்கொண்டுபோயினவே!

(இன்னும்வரும்.)

## இருமலை சாந்திசெய்யும் மருந்து.

அதிமதுரத்தை நறுக்கி வாயில் அடக்கிவைத்துக் கொண்டால் இருமல் இலகுவாயிருக்கும். விளக்கெண்ணை அல்லது சுண்ணாம்பு நெஞ்சுக்குழியில் தடவுவதும் உண்டு. கால்பலம் இடையுள்ள ஒரு வெண்காயம் எடுத்து, சிறுக அரிந்து ஒரு கிண்ணத்திலிட்டு சீனச்சர்க்கரையைத்தூவி இரண்டும் உரவுசெய்யும்படியாகப்பிசரி, பத்து பதினைந்து நாழிகைசெல்ல இளம்பாகுபோலத் தைலம் இறங்கி யிருக்கும். அதில் ஒரு நாழிகைக்கொருதரம், உரு உச்சிக்கரண்டி பிரமாணம் உட்கொள்ள படிபடியாக சாந்தியைத் தரும்.

## நாட்டு கோதுமை ரொட்டி.

குளிர்ச்சியும் கிளப்புமாம் அதிகவுணவாம் சூட்டுடம்புக்கு அனுகூலமாயிருக்கும் அழலையைமாற்றும், தாகமடக்கும் வியாதி, வயறு கனக்கும் மந்திக்கும் வயிற்றில் வலியுண்டாகும் வாயு அதிகரிக்கும் பரிகாரம்; மாம்பழரசத்தில் கூட்டிச் சாப்பிடவும்.

உ

No. 8. கடவுள் துணை. நெ. அ.

# விவேகசுந்தரம்.

கடவுள் வணக்கம்.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையுண் ணாடு.

ஆத்மஸ்வரூப வணக்கம்.

எவனருளினி லுலகுயிர்பர மிலகுறும்
எவனருளினி லினன்மதியரி யொளிபெறும்
எவனிலை தனினள விலமத னிலைபெறும்
அவனகிலமுநிறை யடிகளெம் மகமே.

---

## வாழ்நாள் போதாமையென்னும் பேதைமை.

முன் கல்பங்களிலே இவ்வுலகத்தில் மனிதர்கள் ஆயிரம் பதினாயிரம் என்று ஆயிரக்கணக்காகவே ஆயுளுள்ளவர்களாய் வாழ்ந்திருந்தார்களென்று நாம் அநேகமாய்க் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் அக்காலங்களில், இந்த உலகம் எந்த நிலையிலிருந்ததோ, ஜனங்கள் எவ்விதமாய் வாழ்ந்தார்களோ அவர்கள் காலத்தை எவ்விதமாய்ப் போக்கினார்களோ, எந்தக்காரியம் எவ்விதமாய் நடந்ததோ அவற்றின் வரலாறு இப்படிப்பட்டதென்று நமக்குத் தெளிவாய்த் தெரியாது. இந்தக் கல்பத்தில் கண்முன்னே நடந்துவருகிற வியாபாரங்களைப் பார்க்குமளவில், நாம் செய்ய வேண்டிய காரியங்களுக்கு நமதுவாழ்நாள் மிகவும் சொற்பமானது என்று சொல்லி இக்காலத்தவர் அநேகர் முறையிடுகிறார்களே; அது மிகவும் பேதைமைப் பிதற்றென்று நாம் துணிவாய்ச் சொல்லலாம். இக்காலத்து மனிதர் அநேகர் கோருகிறபடியே மன்னுயிர்களுக்கு வாழ்நாள் நீடித்து, எவரும் நெடுநாள் ஜீவித்திருக்கும்படி நேரிடுமாயின், ஜனங்களுக்கு வருத்தமும் அசவுக்கியமும் வரவர அதிகமாகி இவ்வுலகம் மனிதர் குடியிருப்பதற்கே உபயோகமற்றதாய்விடும். ஏனெனில்,

முதலாவது: இப்போது இவ்வுலகநிலை ஒருவகையாயில்லை. இவ்வுலகத்தில் சிலர் அதிகவிடத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். பெரும்பாலோர் ஒன்றுமில்லாமல் அன்றாடம் உடல்வருந்தி உழைத்தாகிலும், பொருளுள்ளவர்களை வருத்தித் தொந்தரைசெய்து அவர் கைப்பொருளைப் பறித்தாகிலும், அல்லது பல தந்திரவித்தைகள்செய்து பொருள் தேடியாகிலும் தமது காலத்தைக்கழித்து வருகிறார்கள். ஆகையால், இவ்வுலகத்தையே தமக்குக் கைவசமாக்கிக்கொண்டு களிப்பும் கோலாகலமுமாய் வாழ்கிற செல்வவான்களும் பிரபுக்களும் இவ்வுலகத்திலேயே பல நூற்றாண்டுகளைக்கழிக்க விருப்பங்கொள்வதற்குப் பல ஏதுக்களுண்டாயிருப்பதாகத் தோன்றினும், மானாவமானமில்லாமல் சாண்வயிற்றுக்






காக ஊரூராய்த் தெருத்தெருவாய் ஓடக் காசுபொறமாட்டாத அநாதைகளையெல்லாம் இந்திரன் சந்திரனென்று சொல்லித் துதித்து, அவர்கள் கழுத்தைப் பிடித்து நெட்டித்தள்ளத்தள்ள, கெஞ்சியிரந்தும், வயிற்றுக் கில்லாமையால் மதிகெட்டுப் பிறர்பொருளைக் கொள்ளையாடியும், பலருக்குஅடிமைசெய்தும் அல்லாடித் தவிக்கிற பேதைகளுக்கு வாழ்நாள் நாற்பது ஐம்பது வயதுவரைக்குங்கூட ஓடாமல் அதற்கும் உட்பட்டேயிருக்குமானால் அதுவே உத்தமம் என்று தோன்றுகிறது. குடிக்கக் கூழுங்கட்டக்கந்தையும் இல்லாமல் தவிப்பதும்,காலும் விலங்குமாய்ச் சிறைச்சாலையில் அல்லாடுவதுமாக இந்தச் சுகத்தை எத்தனைநாள் அனுபவிக்கவேண்டும்! அப்படியில்லாமல், சொற்பகாலம் தமது வாழ்க்கைக்குப் போதாதென்று நினைக்கின்ற மூடர்கள் பின்பு தெய்வசங்கல்பத்தால் தமக்கு என்னென்ன சம்பவிக்குமோ அவைகளை அஞ்சாமல் அனுபவிக்கஎதிர்பார்க்க வேண்டுவதுதான். ஆகையால் கொஞ்சம் ஏறக்குறைய எல்லாமனிதர்களும் தமது வாழ்நாள் சுருங்கியிருப்பதிலேயே விசேஷமாய்த் திருப்தியடைந்திருப்பதற்குக் காரணங்கள் அதிகமாயிருக்கின்றன. நாம் நெடுநாள் வாழவேண்டுமென்று ஆசைகொள்வதற்குக் காரணம் ஏதாவதொன்று உண்டோ? அது ஒன்றுமில்லை.

இரண்டாவது: இவ்வுலகத்தின் இப்போதைய நிலைமையைப் பார்த்தால், சந்ததிகள் ஒன்றின்பின் ஒன்றாய் விருத்தியாகிக் கொண்டேயிருக்கின்றன; இப்போது இவ்வுலகத்தில் எங்கும் பிரஜைகள் நிறைந்து குடிகொண்டு ஒவ்வோரிடத்தையும் ஒவ்வொருவர் கைப்பற்றிக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும் நாம் முன்சொல்லியபடியே, இப்பூமியில் அதிகதேசத்தைக் கைவசப்படுத்திக் கொண்டிருப்பவர்கள் விசேஷமாயில்லை. இப்போது, முன்னே நூறு இருநூறுவருஷங்களுக்கு முன்னிருந்த நம் பூர்வீகர்கள்மாத்திரம் அவரவர்களுடைய அந்தஸ்துகளோடும் ஆட்சிகளோடுங்கூட இன்னும் ஜீவித்துக் கொண்டிருப்பதாகப் பாவித்துக்கொள்வோம். அப்படியானால், இப்போது ஆஸ்தியும் அதிகாரமுமாயிருக்கின்ற இக்காலத்து மனிதர்களின் வாழ்வு எவ்விதமாயிருந்திருக்கவேண்டுமோ யோசித்துப்பாருங்கள்! மூன்று நான்கு ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த பெரியோர்களும் நமது காலத்தில் பிழைத்திருப்பதாய் இருந்திருக்குமானால் இவ்வுலகம் எப்பாடுபடுமோ? முதலில் அவ்வளவு ஜனங்களுக்கும் தங்க இவ்வுலகில் இடமெங்கே கிடைக்கும்? இப்போது எங்கே ஏழை மனிதன் ஒருவனைக் காண்கிறோமோ அங்கே ஐந்நூறுபேரைக் காணும்படியாகும். அல்லது இவ்வுலகம்முழுதும் ஏற்றத்தாழ்ச்சியில்லாமல்ஒரே அந்தஸ்துக்கு வந்துவிடும்படியாகும். அதாவது, எளியவர்கள் உயர்ந்து போவதல்ல; நெடுநாள்வாழ விரும்பும்படியான நல்ல போகங்களை அனுபவிக்குந் தனவான்களும் அந்த விருப்பத்தை உடனே விட்டு விடும்படி நேரிடும். ஆயினும் இவ்வுலகவியற்கை அப்படியே இருக்குமானால், உலகத்தில் ஒரு நன்மையுண்டாகுமென்று தோன்றுகிறது. வாழ்நாள் மிகவும் சொற்பமாயிருக்கிற அக்காலத்திலேயே, நமது தாய்தந்தையர்கள் சீக்கிரமாய் இறந்துபோவார்களா! நமது ஆஸ்திகளை நம்மிஷ்டப்படிச் செலவு செய்யமாட்டோமா! என்று கோருகிற இக்காலத்து வாலிபர்களுடைய கதி எவ்விதமாகும்? அதோ கதிதான். தம் ஆஸ்தி தமக்குச் சுவாதீனமாவதற்கு முன்னேயே கைக்கெட்டினமட்டும் சோராமற் சிலர்செலவழிப்பதெல்லாம் பறந்தோடும். எவர்க்கு எந்த எண்ணமிருக்கட்டும், இராமற்போகட்டும்; யாவரும் அக்காலத்தில் பெட்டியிலடங்கின பாம்பு










போல் அடங்கிக்கிடக்க வேண்டுவதுதான். அப்படிப்பட்ட வெட்கங்கெட்ட பிழைப்பு பிழைப்பதைவிட மரிப்பதே மேலானதென்று அவர்கள்தாமே நினைப்பார்களென்று தோன்றுகிறது. ஆதலால் அப்படிப்பட்டவர்கள், தம் தாய்தந்தையர்கள் அற்பாயுசாய் இறந்தார்களென்பதை ஒரு குற்றமாய்க் கடவுள்மேல் சார்த்தார்கள். நாஸ்திகவாதத்திற் புகுத்துகிற துஷ்டயுக்திகளும் அவர்கள் மனதில்தோன்றா. வாழ்நாள் நீடித்திருந்தால் அவ்வளவுகாலம் எற்றபடி செலவுசெய்யத் தங்கள் ஆஸ்திசிறிதும் போதாதாகையால், தங்களுக்குக் கடவுள் ஏற்படுத்திய ஆயுளளவு சொற்பமானதென்கிற எண்ணம் உதிக்கவே உதிக்காது.

மூன்றாவது: உண்மையாய்ப்பார்த்தால் இவ்வுலகமே பலவித வருத்தங்களையும் துக்கங்களையும் விளைவிக்கத்தக்கதா யிருக்கின்றது. சுபாவத்திலேயே நல்லோர்களா யிருப்பவர்கள், நாற்பது ஐம்பது வருஷகாலந்தான் இவ்வுலகத்தில் நாம் எவ்விதமாய்ப் போக்குகிறதென்று ஏங்குகிறார்கள். ஐந்தாறு நூற்றாண்டு இங்கேயே இருக்கும்படியிருந்தால் அப்போது அவர்களுக்கு எவ்வளவு சங்கடமாயிருக்கும்! மரணகாலம் வெகு சமீபத்திலிருக்கிறதென்று தெரிந்திருக்கையிலேயே இப்போது அநேக மனிதர் மிகக் கொடியராகி அளவற்ற தீமைகள் விளைவித்துக் கொண்டிருக்கிறார்களே. சிரஞ்சீவியா யிருப்போமென்று தெரிந்தால், அவர்கள் எப்பாடுபடார்கள்? இவ்வுலகம் முழுதும் மன்னுயிர் வாழ்க்கைக்குச் சிறிதும் ஒவ்வாமல் எவ்வளவு கேடுகெட்டதாய்விடும்! முற்காலத்தில் இவ்வுலகத்தில் பல கொடியமனிதர்கள் அளவற்ற தீமைகள் விளைவித்துக் கொண்டிருந்தார்களென்றும், அவர்கள் கொடுமையை அடக்க எவராலுமாகாமல், கடவுள்தாமே நேரில்வந்து உதித்து அவர்களைச் சங்கரித்தாரென்றும் பலவிடங்களில் படித்துங்கேட்டு மிருக்கிறோமே; அந்தத் தொல்லைகளுக்கெல்லாம் ஆதிகாரணம் அவர்கள் நெடுநாள் இவ்வுலகில் வாழும்படியிருந்ததென்பதேயொழிய வேறென்ன? ஆகையால் இவ்வுலகத்தில் நெடுநாள் வாழ விரும்புவதைவிடப் புத்தியீனமானது வேறொன்றுமில்லை. தெய்வபக்தியும் ஜீவகாருண்யமுமாய்க் காலத்தைக் கழிக்கின்ற மகாபுருஷர்கள் எப்போது இந்தக் கர்மபூமியைவிட்டுப் பரமாநந்தத்தை அடையப்போகிறோமென்று பேராவல் கொண்டிருப்பார்கள். பேதை ஜனங்களும் கொடியவர்களும் வெகுகாலம் பூலோகவாழ்க்கையை விரும்புவதற்கு இடமேயில்லை என்று அடியிற் குறித்த குறிப்புகளால் தெளிவாய் விளங்கும். மேலும் இப்போது கிடைத்திருக்கிற வாழ்நாளை வீண்போக்காமல் சரியாய் உபயோகிப்பார்களானால் அதற்குள் சாதிக்கக் கூடாதகாரியங் கூட ஒன்று உண்டோ? ஆகையால் எவரும் தமக்குக் கடவுள்கொடுத்த கால வரை போதுமென்று அவ்வளவோடு திருப்தியடைந்து, அந்தக்காலத்திற்குள்ளே தம்மால் கூடியவரையில் பல நன்மைகள்செய்து பொல்லாங்கென்பவை யெல்லாந்தவிர்த்துக் கடவுளின் கருணைகடாக்ஷத்திற்குப்பாத்திரராகி அவரது பொற்றாமரைப்பதத்தை எப்போது அணுகப்போகிறோமென்று ஆவல்கொண்டிருப்பதைவிட ஆனந்தம் வேறொன்றுமில்லை.

---

## POLYGAMY.

## பலமனைவியர் விவாகம்.

ஒருவன் பலபெண்களை விவாகம் புரிதல் நீதியோ அல்லது அநீதியோவென்று சற்றுநேரம் யோஜித்துப் பார்ப்போம். பலமனையாட்சி





கூடாதென்பதற்கு சாஸ்திராதாரமில்லை என்றும், அநேகரால் அநுஷ்டானம் பண்ணப்பட்டு வருகிறதென்றும், நல்லதிட, சரீரமுள்ள பலவான் தன் பலத்திற்குத் தக்கபடி பலரைமணந்து சுகித்து வாழலாமென்றும், இவ்வுலகில் புருஷர்களைவிடப் பெண்களைத்தான் கடவுள் அதிகமாய்ப் படைத்திருக்கிறாரென்றும், பெண்கள் அதிபாலியத்திலே பெரிய ஆகிருதியாய் வளர்ந்து பிரௌடையாகி மக்கட்பேறடைந்து சீக்கிரத்தில் கிழவிகளாகிறார்களென்றும், புருஷர்கள் அப்படிக்கில்லாமல் சற்றுநாட்கழித்தே பருவமடைந்து வெகுகாலமட்டும் பெண்களை விரும்புகிறார்களென்றும், இப்படிப்பட்ட விவாகம் அதிகமாய் நடவாததினாலேதான் பெண்கள் கற்பழிய ஏதுவாகிறதென்றும், அதிகமாய்ப் பலரை மணந்துகொள்ளாவிட்டாலும் முதலில் மணந்த மனைவி பிள்ளை குட்டிகளைப் பெற்ற பின்பு கணவன் தனக்கிஷ்டமான மற்றொருபெண்ணைப்பாணிக்கிரகணஞ் செய்து கொள்ளுவதில் தடையொன்று மில்லையென்றும், தரித்திரர்களாய் நிர்வாகமில்லாதவர்கள் மட்டுக்கும் இச்சங்கடமா யிருக்குமே யல்லாது தனவான் அப்படிச்செய்து கொள்ளுவதற்குத் தடையொன்று மில்லையென்றும், சிற்சில சமயங்களில் வேறுமனைவிகளைக் கலியாணம் பண்ணிக் கொள்ளும்படி மனைவியே அநுமதி கொடுக்கிறாளென்றும், இப்படியே பலவாறாக இன்னும் எத்தனையோ காரணங்களை எடுத்துக் காட்டுகின்ற காமாதுரர்களனந்தம். நாம்கேள்விப் பட்டவரையில் சாஸ்திரங்களில் பலமனைவிகளோடு கட்டிப்புரளும்படி ஆதாரமிருக்கிறதாகக் கேட்டதில்லை; ஒருத்தியைக் கலியாணம் பண்ணிக்கொண்டு கிரகஸ்தாச்சிரமநெறி முறைபிறழாது நடப்பவனே உத்தமனென்றுதெரியவருகிறது. இந்த வரம்புகடந்து ஒருவன் மிருகம்போலக் கொழுப்படைந்து அதிக மோகத்தினால் பலரைப் பெண்டுகொண்டால் அது நல்ல அநுஷ்டானமாகுமோ? ரத்தபுஷ்டியினால் பலரை மணந்து கொள்ளலாமென்றால், இதைப் பெண்கள்விஷயத்திலும் ஏன் இப்படியே யோஜிக்கக் கூடாது? இவ்வுலகத்தில் பெண்களே அதிகமென்பது மெய்யென்றும் வைத்துக் கொள்ளினும், புருஷர்கள் கொழுத்துப்போய், இது கிருஷ்ணலீலை செய்வதற்காகத்தானென்று துராக்ஷேபம் பண்ணுவார்களேயானால், ஸ்திரீகளும் பாஞ்சால லீலைசெய்வதில் தடையிராதன்றோ? ஸ்திரீகள் அதிபாலியத்தில் ரஜஸ்வலியைகளாகிப் பிள்ளைகளைப்பெற்று விருத்தர்களாகிறார்களென்று புருஷன் தன்வாலிபத்தின் முடுக்கை எடுத்துப் பேசினால், மாப்பிள்ளைக் காளைகள்போல் எப்பொழுதும் ஸ்திரீகளோடு காலங்கழிப்பதேபுருஷார்த்தமென்று ஞாயமா? அல்லது தான் கற்பகோடி காலமட்டும் சிரஞ்சீவியாய் வஜ்ஜிரகாயத்தோடு வாழப்போகிறதாக எண்ணமோ? புருஷர்கள் பல மனைவியர் விவாகம் பண்ணாததினாலே உலகத்தில் ஸ்திரிகள் அதிகமாய் விபசாரஞ் செய்கிறார்களென்று அஸந்தர்ப்பமாய்ச்சொல்லவந்தால், இது ஒரு நல்ல ஆக்ஷேபத்தோடு சேர்ந்ததல்ல; எனெனில், முக்கியமாய்ப் பலரை மணந்தவன் மனைவிகளே கற்புநிலையழிந்து கெட்டலைந்து நிற்கிறார்களேயல்லாமல், ஒருத்தியை மணந்தவன் பெண்டு அவ்வாறு கெடுகிறதில்லையே. இருமனையாட்சி கூடுமென்று, கொண்டவள் மனமெரியக் கண்டவளைக் கட்டியழுகிறது தருமமாகுமோ? கையில்துட்டிருக்கிறதென்று பணக்கொழுப்பினால்தான் முன்னே அக்கினி சாக்ஷியாகப் பாணிக்கிரகணஞ் செய்துகொண்ட தர்மபத்தினியின் மனம் புண்பட, அறநெறி புறழ்ந்து இன்னொருத்தியின் கைப்பிடித்தால் அவனுக்கென்ன கதி கிடைக்கும்? ஸ்திரீகள் புருஷர்களைவிடச் சற்றுத்தாழ்ந்த

வர்களென்று இவ்வாறு அவர்களையடக்கி யொடுக்கி மூலையிலடைத்துவை ப்பது தெய்வத்திற்கே உவப்பாமோ ? தெய்வத்திற்கு ஆணென்றும் பெ ண்ணென்றும் பாரபக்ஷமில்லையே யன்றோ? எங்கும்நிறைந்த பரம்பொரு ளே, ஆண்பெண் இரண்டுமணமந்த வஸ்துவென்று பெரியோர் உரைக்கக் கேட்கவில்லையா ? ஆகையால், காமாதுரர்களுடைய வீண்வாதங்களை நம்பி மோசம்போவது சரியன்று. நெருப்பெங்கேயென்றால், இருமனை யாட்சி யாளன்வயிற்றிலே என்று உலகம் சொல்லுகின்ற தல்லவா ? இத னால் அந்நியோந்நிய மழிந்து பலவகையான குடும்ப கலகங்களுண்டாவ தை எவர் தானறியார் ? சாதாரணமாயப் பொதுமகளை விரும்புகிறவர் களையே ஸ்திரீகள் வெறுக்கிறார்களென்றால், சக்களத்திக் காய்ச்சல் எளி தில்விடுமோ? விசேஷமாய்ப் பலரைப் பெண்டுகொள்ளுபவர்களுக்கே பிள் ளையில்லாமற்போகிறது. நாம் இதுவிஷயத்தைச்சுட்டிச் சாதாரணமாய் இவ்வுலகத்தின் நடபடிக்கையாய்க் கொஞ்சமெழுதினோம். சாஸ்திராதா ரங்களைக்கொண்டு யுக்திவாதஞ்செய்தால் அதிகமாய்விரியும்; மநுசொல்லு கிறபடியே, நெடுங்காலம் பிள்ளையில்லாவிட்டாலும், நீங்காத மகாரோகி யாயிருந்தாலும், எப்பொழுதும் பெண்களையே பெற்றுக் கொண்டிருந்தா லும், புத்திரஸந்தானத்தின் பொருட்டே, தான்கொண்ட முந்தியமனையா ளின் சம்மதத்தின்மேல் விவாகம் பண்ணிக் கொண்டால் மாத்திரமே நன்று. சமயங்கண்டபோது இது விஷயத்தைப்பற்றி எழுதலாமென்று இந்தமட்டோடு நிற்கலாயினோம்.

---

## சாக்குறியறியுந்தன்மை.

ஒருவருக்கு மரணகாலங்கிட்டிவரும்போது அறிந்துகொள்ளுந் தன் மை யெப்படிக்கென்றால் தெற்கேயிருந்து வடக்கேபோகிறவர்களை வடக் கேயிருந்து தெற்கேபோகிறவர்களைக் கண்டால் திசைமாறுபாடாய்த்தோ ற்றுமாகில், பார்த்தவர்கள் மூன்றுவருடத்தில் மூடிவார்கள். சூரியனை மண்டலமில்லாமலும் கண்ணைமூடிப் பார்க்கில் கதிர்கள் தோன்றாமலும், போனால் இரண்டுவருடத்தி லிறப்பார்கள். தன்னுடைய உடற்சாயல் தொண்டியாய்க் கண்டாலும் தோன்றாமல் விண்டாலும் ஒருவருடத்தி லொழிவார்கள். மேலும், தேகத்தினிழலானது பற்பலபேதமாய்க் காணு மாகில் ஆறுமாதத்தில் அழிவார்கள். தங்கள் கையினால் இரண்டுகாதையு மூடிப் பார்க்குமிடத்தில் ஓசையில்லாமலிருந்தால் ஒருமாதத்தில் உறங்கு வார்கள். வாயில் சலத்தை வார்த்துக்கொண்டு கொப்பளித்து வெயில நிழலில் உமிழ்ந்தால் அது இந்திரதனுசைப்போல் விழாமற் போமாகில ஆறுமாதத்தி லழிவார்கள். அருந்ததி தரிசனமாகாமற்போனால் ஆறுமா தத்தி லொடுங்கிப்போய் விடுவார்கள். நாவினுனியைநீட்டி மூக்கினுனி யையும் பார்த்து அப்பியாசம்பண்ணி நோக்கம் வைப்பவர்களுக்கு ஒரு நாள் நாக்குநுனி மறைந்து மூக்குநுனி வளர்ந்து எடுப்பாயிருந்தால் ஐந்துமாதத்தில் இறப்பார்கள். உதடும் நாவும் பல்லுங்கறுத்ததென்றால் ஆறுமாதமிருப்பது அருமையாகும். வயிறு இருதயஸ்தானம் கை கால் இவைகள் ஸ்தானம்பண்ணும்போது நனையாம லிருக்குமானால் ஆறுமா தஞ்சென்று கொன்றுபோடும். தான் அடிவைத்த இடத்தில் அடிச்சுவ டானது சிதைந்துகாணுமாகில் எலும்புடன்குன்றி சிறிதுநாளையி லிறந்து போவார்கள். கண்ணாடியில் தலைதெரியாமல் உடலினிழல் தோன்று மாகில் மாதமொன்றில் மரணமடைவார்கள். சூரியனைப்பார்க்குமிடத்தில்






இரண்டாய்ப் பிரிந்து தோன்றினுல் சிலநாள்கணக்கில் சிந்திப்போவார்கள். நட்சத்திரம் பகலிற்றெரிந்து இரவிற் றெரியாவிட்டால் கொஞ்ச நாழிகையில் மிஞ்சுவார்கள். பிரதமையில் பூரணச்சந்திரனைப்பார்த்தால் பிரகாசங்கொடாமல் புகைபோல்மழுங்கிக் காணுமானுல் சிலநாளிருக்கைதான். காதிலும் நாசியிலும் நடுக்கங்கண்டு இரண்டு கருவிழியும் கறுத்துதானுல் அப்போதே பயணமாவார்கள். தன்னுடைய நிழல் தனக்குத் தென்பாரிசத்தில் தோற்றுமாகில் அன்றைக்கே காலன்கடாமணி கலகலவென்னும். பின்கலையான சந்திரனிலே ஒருபகல் எட்டுமுகூர்த்தம் சுவாசமொடுங்கி யோடினுல் வருஷமூன்றில் மாய்வார்கள். இரண்டு பகலோடினுல் இரண்டுவருஷத்தில் சண்டன் கிட்டுவான். மூன்றுநாள் சுவாச மொதுங்கி யோடினுல் ஒருவருடத்தில் முடிவார்கள். உபயபாரிசத்திலும் ஒரே நெட்டாய் பத்துநாளோடுமாகில் ஏழுமாசத்தில் எழுந்தருளுவார்கள். சுவாசம் மூக்கின்வழியே ஓடாமல் வாய்வழிவந்தால் நாள்மூன்றில் நலிவார்கள். ஜென்மலக்கினத்தில் சூரியன்தேர்நடக்க திங்களும் ஏழாமிடத்தில் சூரியனுடனேகூடிப் பொருந்திய ஊஷ்ணகாலத்தில் தன்னுயரத்திற்குச் சரியாய் தன்னைப்போல் கறுத்த உருவந்தோன்றினுல் முடிவார்கள். அமலமென்னும் மலம்முதிர்ந்த உதிரமாகிய மூத்திரம் தைரிய சம்மந்தமான வீரியம் சுபாவங்கெட்டு மாறிப்புறப்பட்டுப் போனுலும் குறைந்தாலும் நிலையாய் உயிர்நிற்காது. ஆகாயத்தைப் பார்க்கும்போது கறுப்பாய் யானையைப்போல் தோன்றுமாகில் அப்பிராணனும் அவசரத்திலகலும். தன்னுடல் செவ்வையாயிருக்க நிழற்சாயை அலைந்துகாட்டுமானுல் சமீபத்திற்சமனேலை கிட்டியது. ஆறுவகை ருசிகளும் மெய்-வாய் மூக்கு-கண் செவி இவ்வைந்தும் முறையே கெடுமாகில் நான்குமாதத்திலாவது ஆறுமாதத்திலாவது நச்சுப்போவார்கள். துருவனிலை தெரியாவிட்டால் பெரியநாளில்லை; சிறியநாளே. உதடும் நாக்கும் மேலண்ணமும் பசையற்றுவறண்டுபோனுல் ஆறு மூன்றுமாதத்தில் அந்தகனுரிடத்திற்கு அடையவே போவார்கள். பின்பக்கத்திலும், பிடரியிலும் தலைமேலும் பச்சையோணன் விழுந்தானுல் தட்சணமே பறைமேளமுழங்கலாம். நெய், எண்ணெய், பால், நீர் இவைகளிற் பார்க்கின் தலையும் முகமும் தெரியாமற் போனுல் பதினைந்துநாளையில் பாசகரனைப் பார்க்கலாம். இரண்டாய்ப் பிரிந்து காணுமானுல்விருந்தினராகிய யமவீராள் வருவார்கள். நாலுதிக்கும் இந்திரவில்இரவிலும்தோணவும்பகலிலும் பசாசுகளாடக்காணவும் பர்வதத்தின் பேரிலும்மரத்தின்மீதிலும் காந்திருவலோகம் வந்திருக்கவும்கண்டால் அவனுவியைஅந்தகன்குடியாமல்விடான். எப்போதும் பருத்திருக்கிற தேகம், இளைத்துமெலிந்தாலும் மெலிந்ததேகம் அதிகம் பருத்தாலும் மாதமொன்றில்வைச்சுதமாநகர் புகுவார்கள். பேய், பூதம், நரி, நாய், கழுதை, அவுணர், ராட்சதர், அண்டங்காக்கையாகிய கருங்காக்கை, பருந்து, குரங்கு, புலி, செந்நாய் இவைகளைத் தின்னுகிறுப்போல் சொப்பனங் கண்டால் அந்தஉயிரையேழுநாளையில் எமன் தின்னக் காத்திருக்கின்றுன். சிவப்புச் சந்தனம் சிவப்பு வஸ்திரம், சிகப்புப்புட்பம், கோடிவஸ்திரம் உடுக்க முடிக்க பூச எண்ணெயிட்டுமுழுக அனுபவிக்கக் கண்டால் மாதநான்கில் மரணமாய்விடுவார்கள். எண்ணெய் தேய்த்துக்கொண்டு தலைமயிரைக் கையிற் பிடித்து ஒருவன் பிடித்திழுக்கிறுப்போலும் தன் பிடரியில் குத்தினுப்போலும் தன்மேல் குதித்தேறினுற்போலும் உலர்ந்த புற்சுமை சுமக்கிறுப்போலும் தெற்குத்திசைக்குப் பயணம் போகிறதுபோலும் தங்களுக்கு உரியவர்கள் தங்கள் வம்சப்பெரியவர்கள் தென்புறத்தினின்று சேதிசொ









ல்விக் கைகாட்டி அழைப்பதுபோலும் கனக்கண்டால் ஒருபட்சம் அல்லது இருபட்சத்திற்குள் இறந்துபோவார்கள். பொல்லாத பெருங்குரலுடையபெண்பிள்ளையானவள் கட்டிக்கொண்டழ தன்மேலேவிழ கறுத்த உருவத்துடன்தொழ பட்டுப்போன கட்டை சுட்டதுபோலான சொரூபமும்கையிற் கதையும் கறுப்புத்துணியும் போர்த்து ஒருவன் ஆர்த்துவரப் பார்த்து உடலெல்லாம் வேர்த்துவரக்கனக்கண்டாராகில் கண்டவர் ஒன்றிரண்டுதிங்களிலிலேவார்கள். குரங்கொன்றுஅடித்துப்பிடித்துக்கிழக்குமுகமாய்க் கொண்டு போகிறதுபோல் கனக்கண்டால் பதினைந்துநாளையில் பகடுலகடைவான். கேட்பவர்கட்கு இல்லையென்னுமற் கொடுத்து வருகின்றவர்கள் கொடாமல் மறுத்து என்னகொடுக்கிறது; பிரயோசனமில்லைபோ வென்று வெறுத்து லோபப்புத்தி யேவிடுமாகில் ஒருவாரத்தில் செலவுபெறுவான். ஒருநாளுங் கொடாத லுத்தர்கள் கடைசிக் காலத்தில் தானதரும பரவுபகாரம் பண்ணுவார்கள்; எல்லாரும் ஆச்சரியப் படும்படியாய் ஈகையிற் படிந்தால் இருமூன்று திங்களில் உயிர்மூண்டு போவார்கள். சாதாரணமானவர்கள் கொஞ்சந்தலை குனுக்கி கர்வமடைந்து மனிதனை மதியாமலிருந்தால் நெய் வறண்ட விளக்குப்போல் குப்பென்றெறிந்து தொப்பென்றவிந்து போவார்கள். இவ்வாறின்னம் அநேகங்குறிகளுண்டு. இவைகளெல்லாம் எல்லாருக்கும் பொதுவென்றெண்ணப்படாது. இக்குறிகளை வாதம் பித்தம் ஐயம் மிகுதிகைகூடிய தேகத்திற்கும் உவர்ப்புநிலம் கசப்புநிலம் புளிப்புநிலம் கரகரப்பு நிலமுதலிய திசைமனிதருக்கும் இங்குநானுரைத்ததில் ஏதாகிலுங் குறிபிடிக்கும்; ஆனால், எப்போதுந் தப்பாது; சாஸ்திரங்களிற் சொன்னது நமக்குத் தோற்றவில்லை என்று அலட்சியம் பண்ணப் படாது. ஒன்றில்லாவிட்டால் ஒன்றுபலிக்கும்; இதைக் குறிப்பாகக்கண்டு கண்டவுடனே பெண்டுபிள்ளை பண்டு பதார்த்தங்களைப் பாராட்டாமல், தைரியங்கொண்டு சகலபேருக்குந்தெரிவித்து நானிந்தவேளையில் இந்தக்காலத்தில், போய்வருகிறேனென்று புகன்றால் அது இந்தக் கர்மபூமியோர்க்கு மகத்துவமும் காட்சியும்பிரபலப்பெருமையும், தெய்வநிர்மாணமும் பெரியோரென்கிற பிரமாணமுமுண்டுபண்ணும்; தானும் நிஷ்டை கூடியதுபோலிருந்து நிரந்தரப் பொருளாகிய பரத்தினிடத்தில் கருத்தைப்பதித்து கர்ப்பூரஜோதி காட்டுங்கள் கட்டியாய்வைத்து மூட்டுங்களென்று பிறவியின் வேரையகற்றி, பிறவியின் பாதைபெறலாகும்; மகத்துவமான நற்கதியடையலாம், என்று பாரதம் அநுசானிகபர்வத்தில்தருமருக்கு, வீஷ்மர் சொல்லுகின்றார்.

---

## தந்தை செய்நன்றி.

(73-வது பக்கத்தொடர்ச்சி.)

பிதா புத்திரனைக்குறித்துச் சிரஞ்சீவி தம்பி இன்ன முதலியாருக்குச் சுவாமிகிருபையால், சகலபோகபாக்கியமும், சந்தானசமர்த்தியும், வாகனபிரதிஷ்டையும், அகண்ட சாம்பிராச்சியமும், லட்சுமிவிலாசமும், ராஜவசிகரமும், தீர்க்காயுசும், சதாகாலமும் வற்றாத சமுத்திரம் போலக் குறைவின்றி மேன்மேலும் பெருக உண்டாகுக வென்று, உபாசாரமாகவும் பட்சமாகவும் எழுதியனுப்பிய கடிதத்தை வாசித்துப்பார்த்து, ஓ! ஓ! இவனென்ன சர்வ முட்டாளாயிருக்கிறான். ராஜமாநிய ராஜபூஜித மகாராஜ ராஜஸ்ரீ முதலியாரவர்கள் வடிவில்மன்மதனும் நாணத்தக்கவராய், கல்வியிற் சரஸ்வதிக்குக் குருபீடமாய், புஜபலத்தில் வாயுகுமாரனை ஜெயிப்பவராய், தருமத்தில் தருமபுத்திரன் தலையை மிதிப்பவராய்




ஒழுக்கத்தில் அணுவளவும் பிசகாதவராய், சத்துருக்கள் நடுங்குஞ் சங்கிராமசிங்கமாய், பூவையர் மால்கொளும் புருஷரத்னமாய், சற்சனர்மெச்ச்சும் சபாபூஷணமாய், ஒப்புயர்வில்லாத உத்தம சற்பாத்திரமாய் விளங்காநின்ற மிட்டாதாரராகிய இன்னமுதலியாரவர்கள் திவ்விய சமுகத்திற்கு, அடியேன் தங்கள் ஊழியனுகிய இன்னுன் சத்வினயபயபக்தியுடனே, தாங்களிருக்குந்திக்குநோக்கிச்சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து எழுதிக்கொண்ட விண்ணப்பமென்று, நமது உத்தியோக ஸ்திதிக்குத்தக்கமரியாதையா யெழுதாமல்,எவனேகாமாட்டியொருவன் நாட்டுப்புறத்தானுக்கு எழுதுவதுபோல, இப்படியுமெழுதினுன், பார்த்தையாவென்று முகங்கறுக்க, கண்சிவக்க, வாய்பதைக்க, பல்லை நெறநெறவென்றுகடித்து,மீசை படபடவென்று துடிக்க, கலகலவென்று சிரித்து, உதட்டைப்பல்லால் அதுக்கி, கையோடுகை புடைத்து, வாய், கண், மூக்கு, செவிகளிலிருந்து குப் குப்பென்று புகையெழும்ப, திக்திக்கென்று நேருப்புப்பொறிபறக்க, பொள்ளென்று சரீரம் வெயர்க்க, பெருமூச்செறிந்து, புருவம்நெற்றிமேல் வில்லைப்போல் வளைந்தேற, கொடிய காலாந்தகனைப் போலக் கோபித்து, தன் பக்கத்தில் இருந்தவர்களெல்லாம் கிடுகிடென்று நடுநடுங்கி நாவறண்டு நெஞ்சுலர்ந்து தடுமாறித்தத்தளிக்க, உக்கிராகாரமாகக் கொக்கரித்து ஆர்ப்பரித்துத் தகப்பனை அக்கணமே கைப்பிடியாகப் பிடித்துவரச்சொல்லி, அவனுள்ளீரல் கருகி இதென்ன கொள்ளையென்று குடர்குழம்ப, கண்களை உருட்டி விழித்து உறுக்கிப்பார்த்து, பிரளயகால ருத்திரனைப்போல அட்டகாசஞ்செய்து ராஜாதிராஜா ராஜமார்த்தண்ட ராஜ உத்தண்ட ராஜகெம்பீர ராஜகுஞ்சரமாகிய அகண்டமண்டலேசுரனென்று, சக்கரவர்த்திகளும் சரணுகதிசெய்யத்தக்க கனம்பொருந்திய நாம்,நத்தைக்குள்முத்துப்பிறந்ததுபோலவும், சேற்றிற்செங்கழுநீர் பூத்ததுபோலவும், சுடுகாட்டில் வில்வமரம்முளைத்ததுபோலவும், எவ்வளவோ தாழ்ந்த நிலைமையிலிருக்கின்ற உனக்குப்பிள்ளையாய்ப்பிறந்ததைப்பற்றியும், பிச்சைக்காரன் பணப்புதையல் கண்டெடுத்தாற் போல, மூதேவிமுண்டைமகனுகியநீலட்சுமிபுத்திரனுகியநம்மைப்பெற்றதைப்பற்றியும், இப்படிக்கெல்லாம்அவமானப் படுத்தலாமா? நாலுபேர் கேட்டால் நகைக்கமாட்டார்களா? என்றுதகப்பனைத்தாட்சண்ணியமின்றித் தாறுமாறுகவைது, நீ செய்தகுற்றத்திற்கு ஐம்பது ரூபாய் அபராதங்கொடுக்கவேண்டுமென்று கடுந்தண்டம் விதித்த துராங்காரி இவனென்றும், தானும் கெட்டபெயர்எடுக்கலாகாது; தாய்தகப்பன்பெயரையும்கெடுக்கலாகாது.

---

## படியாப்பெண்கள் லக்ஷணம்.

"கண்குருடானுலும் நித்திரைக்குக்குறைவில்லை" என்பதுபோலஸ்திரீகளுக்குப் படிப்பியாவிட்டாலும் அவர்களிடத்தில்சிலவித்துவான்கள் தாங்கள்கற்றவித்தையைக்காட்டுகிருர்கள். குண்டுசட்டியிற் குதிரையோட்டுவதுபோலும், சப்பாணிக்குநொண்டி சண்டப்பிரசண்டனென்பதுபோலும், அந்தவித்வான்கள் தங்கள் பெண்சாதிகளிடத்திற்பேசும்பொழுது, கடினபதப்பிரயோகஞ்செய்கிருர்கள்; ஒருகவிராயன் ஒருபிரபுவினிடத்தில் ஒரு குதிரை பரிசு பெற்றுக்கொண்டு வீட்டிற்குவந்தான். அந்தவிசேஷத்தை அறியாத அவனுடையபத்தினி வெளியேபோய்வந்நீரே, என்னசுபமென்ருள். அவன்குதிரைவந்ததென்றுசொல்லாமல் அசுவம், கோரம், மா, வாசி என்கிறகுதிரைக்குள்ளபலபெயர்களைத் தனித்தனியே





சொல்ல ஆரம்பித்தான். என்னசுபமென்று கேட்ட மனைவிக்கு அசுவம் வந்ததென்று முந்திக் கணவன் சொன்னவுடனே, ஏதோ துர்காரியம்சம் பவித்ததென்று மனைவிமயங்கினுள். உடனேகோரம் என்றவேறொரு பெயரை புருஷன் சொன்னுன். கோரமானதுக்கம் வந்ததென்று பத்தினி அதிகமாகக் கலங்கினுள். அதுகண்டகணவன் - மா, மா, - என்று ஒரு தரத்துக்கிரண்டுதரமாக வசனித்தான். மாமாவுக்குப்பெரிய ஆபத்து வந்ததென்று பெண்சாதிநினைத்துக் கூக்குரலிட்டு அழுதாள். அந்தவோசையைக்கேட்ட ஊராரெல்லாம் ஒடிவந்துகூடினூர்கள். அந்தவித்துவான் இன்னந்தன்பெண்சாதிக்குத்தெரியவில்லையே யென்று கோபித்து வாசியென்ருன். அதுகேட்டுமாமாவுக்கு பெரியவியாதிகண்டு வாசியானதாகப் பெண்சாதிநினைத்து மனந்தேறினுள். கடைசியாய் வித்துவான் வெளிப்படையாகக் குதிரைவந்ததென்று சொல்லப் பெண்சாதி நாணத்தையும் பயத்தையும் அடைந்தாள். இவ்வகையாகப்புருஷனுக்குந் தனக்கும் நடந்த சல்லாபத்தைப் பெண்சாதி தன் தோழிக்குச் சொன்னதாகப் பாடிய விருத்தம்:—

> சுந்தரியேபுறமேகிவந்ததுணைவரைநோக்கி
>     சுபமென்னென்றேன்
> வந்ததோரசுவமென்ருர்கோரமென்ருர்மயங்கி
>     நின்றேன்மாமாவென்ருர்
> நொந்தழுதேன்பலர்மொய்த்தார்வாசியெனத்
>     தேறினேனுவன்றயாவும்
> அந்தமுறுங்குதிரையென்றுசொலிச்சினந்தார்
>     நாணமிகுந்தஞ்சினேனே.

நம்முடையகருத்தைப் பிறர்அறியவும் பிறருடையகருத்தை நாம் அறியவுமே கடவுள் நமக்கு வாக்கையும் பாஷைகளையுங் கொடுத்திருக்கிருர். நாம் பேசுகிற வார்த்தைகளிலும் செய்கிற கிரந்தங்களிலும் நம்முடைய கருத்து நன்ருகப் பிறருக்குவிளங்காவிட்டால் அந்தவார்த்தைகளைப்பேசாமலும் அந்தக்கிரந்தங்களைச் செய்யாமலும் ஊமைபோல் மௌனமாயிருந்துவிடுவது சர்வோத்தமம். குருடனுஞ்செவிடனுங் கூத்துபார்க்கப்போய் குருடன்கூத்தைப்பழித்தானும்; செவிடன் பாட்டைப்பழித்தானும். அதுபோல் சிலவித்வான்களும், குருவேஷம் பூண்டுகொண்டவர்களும் வாசகநடையான பிரபந்தங்களைத் தாங்களும் செய்கிறதில்லை; பிறர்செய்கிற பிரபந்தங்களையும் அங்கீகரியாமல் தோஷாரோபணம்பண்ணுவதே அவர்களுடையசுபாவகுணமாயிருக்கின்றது. பண்டிதர், பாமரர் முதலியயாவர்க்கும் உபயோகமாகும்படி, கல்விமான்கள் பத்தியரூபமான பிரபந்தங்களுடன், கத்தியரூபமான பிரபந்தங்களையும்செய்து சத்தியரூபம் விளங்கச் செய்யவேண்டுமென்பது நமது பிரார்த்தனையாயிருக்கின்றது.

---

## சித்திரக்குள்ளன்கதை.

(74-வது பக்கத்தொடர்ச்சி)

அதனுல் அப்பிள்ளைகளெல்லாம் வழிதெரியாமல் விசனமாய் அக்காட்டில் அல்லாடித்தவித்துக்கொண்டே அப்புறம்போகப் புறப்பட்டார்கள். அவர்கள் போகப்போக வழியகப்படாமல் வெகுவருத்தம் உண்டாகத் தலைப்பட்டது. இப்படியிருக்கப் பொழுதுபடுகிற தருணமாயிற்று.









காட்டுமரங்களில் மோதிவருகிற காற்றுேசையைக் கேட்கும்போதெல்லாம் கோநாய்கள்தாம் ஊளையிடுகின்றனவோவென்று அவர்கள் அஞ்சிநடுங்கினு ள். ஒருவர்க்காவது வாயைத்திறந்து ஒருபேச்சுபேச மனந்துணியவில்லை. கை காலை அசைத்தால்கூட என்னஅபாயம் நேரிடுமோவென்று பயந்தார்கள். மேலும் அப்பொழுது ஒரு மழைஅடித்துஅவர்கள் உடம்பெல்லாம் சுத்தமாய் நனைந்துபோனதுமன்றி, தரையெங்கும் காலைப்பதியவைக்கக்கூடாமல் வழுக்கினதனுல், கண்டவிடங்களிலெல்லாம் விழுந்து தேகமெங்கும் சேறுகிவிட்டது.

ஆயினும் சித்திரக்குள்ளன் நன்றுய் இருள்மூடுதற்குமுன்னமே தைரியத்தைக் கைவிடாமல் ஒருபெரிய மரத்தின்மேலேறி, அந்தக்காட்டைவிட்டு வெளியேபோக எந்தமூலையிலாவது வழியகப்படுமோவென்று நாலு பக்கமும் சுற்றிச்சுற்றிப்பார்த்தான். ஒரு பக்கத்தில் வெகுதூரத்துக்கு அப்பால் அந்தக் காட்டுக்குவெளியே மின்மினிப் பூச்சுபோல் ஒரு விளக்கொலி தெரிந்தது. அந்தவெளிச்சத்தைப்பார்த்துக்கொண்டே அப்புறம் போகவேண்டும் என்று அம்மரத்தைவிட்டுக்கீழேஇறங்கிவந்துபார்த்தான்; அந்தத் தீபம் மறைந்துபோயிற்று. அப்புறம் செய்யத்தக்கது இன்னதென்று தெரியாமல் அவர்களெல்லாம் மிகவும் விசனமடைந்து, அந்த வெளிச்சம் தெரிந்த பக்கமாயே நடந்தார்கள். வெகு வருத்தப்பட்டு அந்தக் காட்டைக் கடந்து வெளியே போனபிறகு அந்த விளக்கு மறுபடியும் அவர்கள் கண்ணுக்குத் தெரிந்தது. அதைப்பார்த்து உற்சாகத்துடன் வேகமாக நடந்தார்கள். அவர்கள் பள்ளத்தாக்கில் இறங்கும்போதெல்லாம் அந்தத் தீபம் கண்ணுக்குத் தோன்றுமல் மறைந்துபோம்; மேட்டில் ஏறினுல் தெரியும். இப்படியே அல்லாடித் தவித்துக் களைத்து வெறுப்படைந்துபோய், கடைசியில் அந்த விளக்குத்தெரிந்த வீடுபோய்ச் சேர்ந்து கதவை இடித்தார்கள். அந்த வீட்டுக்காரி பூததயை பச்சாத்தாபமுள்ளவள். அவள் வந்து கதவைத்திறந்து, நீங்கள் யார்? இவ்விடத்திற்கு எப்படிவந்தீர்கள்? என்று அதிக ஆதரவாய்க் கேட்க, சித்திரக்குள்ளன், நாங்கள் மிகவும் எளியவர்கள்; இக்காட்டுக்கு வந்து வழிதெரியாமல் தவித்து, இந்த வீட்டு விளக்கு வெளிச்சத்தைக்கண்டு இங்கே வந்து சேர்ந்தோம் என்றுசொல்லி, காலைவரையில் படுத்திருக்கமட்டும் கொஞ்சம் இடம் கொடுத்தால் போதும் என்று வேண்டினுன். அந்தப் பெண்பிள்ளை அவர்களுடைய அழகையும் முகக்களையையுங் கண்டு கண்ணீர்விட்டு, ஐயோ! அநாதப்பிள்ளைகளே! இந்த இடம் இப்படிப்பட்டதென்று உங்களுக்குத் தெரியாதோ? குழந்தைகளைக் கரும்புபோல் கடித்துத்தின்கிற கொடிய ராக்ஷதனுடைய குடிசையாயிற்றே என்றுள்.

அதைக்கேட்டுச் சித்திரக்குள்ளன், உள்ளங்கால்முதல் உச்சந்தலைவரையில் உடம்பு நடுநடுங்கி, ஐயோ! எங்கள் பெருமாட்டி! இனி நாங்கள் என்னசெய்வோம்! எங்கேபோவோம்! காட்டுக்கு ஓடிப்போவோமென்றுலும் கொடிய காட்டுமிருகங்கள் பிடித்துத் தின்றுவிடுமே! அவைகளின் வாயில் அகப்பட்டுக்கொள்வதைவிட இந்தக் கனவானுக்குஇரையாகல்கொஞ்சம் மேன்மையல்லவா? ஒருவேளை அவரே எங்களைக் கண்டு ஐயோ பாவம் என்று இரங்கினுல்தான் ஆகாதா? எது எப்படியானுலும் இனி இவ்விடம்விட்டு நாங்கள் எங்கும் போகமாட்டோம் என்றுன்.

(இன்னும்வரும்.)




## கோபம்.

### "ஆறுவதுசினம்."

உலகத்திலிருக்கின்ற சில மனிதர்களுக்கு அறிவின்மையால் சாந்தமாகிய குணத்தை விட்டுக் கோபத்திற்கு இடங்கொடுக்கின்றவனன்றோ மூடனென்றுசொல்லப்படுவது. ஆகையால் இக்கொடிய கோபத்திற்கிடங்கொடுத்து முன்னோர்களிலும், இக்காலஞ் சீவிப்போர்களிலும் சொல்லவொண்ணுத் துன்பமடைந்தது. "தீராக்கோபம் போராமுடியும்" என்று வழங்கியது. கோபங் கொடுமையான குற்றமென்றும், ஔவையாரும்: "ஆறுவதுசினம், என்றும். சினத்தைப்பேணிற் றவத்திற்கழிவு, தீராக்கோபம் கேடாமுடியும், நையவரினு நொய்யவுரையேல்." என்றும், சொல்லியிருப்பதை இதைவாசிக்கும் புத்திமான்களும், புண்ணியவதிகளும் கவனிக்கவும்.

" சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி
யினமென்னு மேமப்புணையைச் சுடும்." என்றும்,

" தன்னைத்தான்காக்கிற் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்." என்றும்,

" சினத்தைப் பொருளென்று கொண்டவன்கேடு
நிறத்தறைந்தான் கைபிழையா தற்று." என்றும்,

" அரும்பயனாயு மறிவினர் சொல்லார்
பெரும்பயனில்லாதசொல்." என்றும்,

திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தருளியது. அந்தோ! இந்தக் கொடிய கோபம் யாரிடத்தில் தங்கியதோ அவர்களுடைய குடும்பத்திற்குள்ள அச்சத்தை யாருரைப்பர்.

### விருத்தம்.

சினமுளோன் மனைமைந்தர்க ளவன்வெளிச் செல்லுந்
தினமெலாந் திருவிழவு கொண்டாடுவர் செல்லா
தினையன்றங்கு நாளிழவு கொண்டாடுவ ரிரப்பின்
மனையிலோர்பெரு மணவிழா வந்தென மகிழ்வார்.

கோபமுண்டாயின் மனக்கலக்கமுண்டாகும்; மனக்கலக்கமுண்டானபோது அறிவுகெடும்; அறிவுகெடுமாயின் உயிர்கண்மேல் அருள் இல்லாது நீங்கும்; அருள் நீங்குமாயின் கொடிய துன்பஞ்செய்ய நேரிடும் ஆகையால் கோபத்தை அடக்கவேண்டும்.

" நாவினுனியி னயமிருக்கிற் பூமாது
நாவினிய நல்லோரு நண்ணுவார்—நாவினுனி
யாங்கடினமாகி லத்திருவுஞ் சேராள்முன்
னுங்கே வருமரண மாம்."

" மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னுலிகழு மண்ணுலகை—நன்மொழிசேர்
ஒது குயிலேதங் குதவியது கத்தபந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று."

கோபமானவார்த்தைகளைப்பேசாது இனிமையானவசனம் வசனித்தால் எவ்வளவு விருப்பமுற்றுப் புகழ்வார்கள். கோபமானது பொறுமையைவெல்லுமோ? வெல்லாதென்க.

" சத்தியத்தை வெல்லாத சத்தியந்தா னீள்பொறையை
மெத்தியே கோபமது வெல்லாது—பத்திமிகு






புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போரரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவமோ காண்."

கோபத்தைப்போல் மனிதர்களுக்குப் பெரிய நஷ்டத்தையும், அவமானத்தையும், துன்பத்தையுந் தரத்தக்கது வேறில்லை.

" இறைமுருகன் முன்னின் றிசைத்த மொழிதேரான்
சிறை யிருந்தான்முன் சிவசிவா—புறவுறுப்பின்
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

தாரதம்யம்பாராது சிறியோர் பெரியோரெனக்கருதாது கோபமான வார்த்தைகளால் இவ்வித துன்பமடைவது அறிவின்மையே. அகத்திய முனிவரால் இந்திரத்துய்ம மகாராஜன் யானையாக சாபமடைந்ததும், கார்த்தவீரியார்ச்சுனனுடைய தோள்களாயிரமு மழுவாளினுற் கொய்திட்டதும், இக்கோபமல்லவா? ஆகையால் பிரமத்தை வணங்கிக் குற்றங்களை நீக்கிப் பரிசுத்தமாகிய சற்குணங்களைச் சார்ந்து, நித்தியாவஸ்துவினிலையை யறிந்து, முத்தியை விரும்பிய முத்தாத்மாக்கள் தவிர மற்றவர்களுக்குச் சித்தப் பிரமையினுலும், அறிவின்மையினுலும், ஆணவமலத்தினுலும், அனித்திய தேகத்தை நித்தியமா யுணரும் பொய்ம்மையினுலும் மேற்சொல்லிய இவைகளுடன் கலந்து அறுகுற்றங்களாகி வருகின்றது. அஃதாவது: பொய், கொலை, களவு, கள்ளுண்ணல், காமம் என்னும் ஐந்து குற்றமுஞ்சேர்ந்து கொடுக்காநின்ற பலமான பாபத்துக்குச் சரியாகிய, தீராக்கோபம், ஆக குற்றங்கள் ஆறு. இந்தத் தீராக்கோபத்தின் கொடுமைகளை விரிவாக அனேக சாத்திரங்களிலும், அனேக புராணங்களிலும், கோபங் கொடுமையானதென்று சொல்லியிருக்கின்றதை வாசித்தோர்களும், கேள்வியுற்றுணர்ந்தோர்களும், அனுபவங்களிற் பழகினவர்களுமறிந்து இத்தீராக்கோபத்தின் கொடுமையை யென்னவென்றுசொல்லலாம்.

வி. வே. கி. நா. பி.

---

## வைத்தியம்.

### பிரசவமாவதற்கும்; மரித்தபிண்டம்வெளிப்படவும்; உதிரச்சிக்கலறவும்.



தேளையைப் பொடிசெய்வதினும், சாம்பலாக்குவதே உத்தமம். ஸங்கே யேஷம் என்னுங் கல்லைத் தொடையில் கட்ட உடனே பிரசவமாகும். வைரத்தைக் குளிசமாகக் கட்டப் பிரசவவேதனை நீங்கி விரைவிற் பிரசவமாகும். பாதஜஹரோ கனபலை என்னும் முள்ளம்பன்றியின் கல்லை பிரசவித்தச சன்னிகண்டு உணர்வழிந்திருக்கிறவர்களுக்குக் கொடுக்கத் தீரும்.

---

### கர்ப்பவலிநீங்க.

கருஞ்சீரகத்தைத் தேனிலரைத்து வயிற்றிற்பூச கர்ப்பவலி நீங்கும். ரேவல் சீனியை ரோஜாப்பூவிற் கலந்து கொடுக்கக் கர்ப்பவலி நீங்கும். வெள்ளைச் செவ்வந்திப்பூவை வெந்நீரி லூறவைத்துக் குடிக்கக் கருப்பையின் வலிநீங்கும். ஹிரோஸ்ஜாயி என்னுங் கல்லைக் குளிசமிடக் கருப்பைநோய் தீரும்.




